# மக்ளீன்ஸ் பற்பசையின் புதிய புல்லரிக்கும் ருசியே சொல்லும் உங்களுக்கு, அது செயலாற்றுகிறதென்று!

## சுத்தமாக்க
– உங்கள் பற்களிலிருந்து அந்த மங்கிய மஞ்சள் திரையைப் போக்குகிறது

## வெண்மையாக்க
– அவைகளுக்கு அந்த அதிகமான வெண்மையைத் தருகிறது

## காக்க
– சொத்தைக்குக் காரணமான கிருமிகளை நீக்கி உங்கள் வாயைப் புத்துணர்ச்சியுடன் சுத்தமாக வைக்கிறது.




**மக்ளீன்ஸ்–அதிவெண்மையான பற்களுக்கு**

MTP/UP/1261 TM

# கல்கி



பார்த்தா! எனக்கு ஆற்ற வேண்டிய கடமை ஏதுமில்லை. மூவுலகத்திலும் இதுவரையில் அடையாமலிருந்து இனி அடைய வேண்டியது ஒன்றுமில்லை. அப்படி இருந்தும் நான் இன்னும் செயலில் ஈடுபட்டுக் கொண்டுதானிருக்கிறேன்.

— கண்ணன் 'கீதை'யில்

## பொருளடக்கம்

விசுவாவசு ஆவணி 6 — ஆகஸ்டு 22



கல்கியில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


நேருஜியின்
கூட்டுச் சேராக்
கொள்கை


"ஆகா! எவ்வளவு அழகான கலை!"
"படம் தலைகீழாக இல்லை என்பது நிச்சயந்தானா?"


"லூப்" முறை


இதோ நமது பொருளாதாரக் கஷ்டங்களுக்குப் பரிகாரம்!
PK



மலர் 25 ● இதழ் 4

# புதிய தளைகள்

பல ஆண்டுகளுக்கு முன்பு இந்தியச் சுதந்திரத்துக்காகப் போராடிய தலைவர்களைத் தேசத் துரோகக் குற்றத்துக்கு ஆளாக்க வேண்டுமென்பதற்காகவே மெக்காலே குற்றச் சட்டத்தின் 124-ஏ பிரிவை பிரிட்டிஷ் அரசாங்கம் சிருஷ்டி செய்தது. இதற்கு முன்பெல்லாம் குற்றம் இழைக்க வேண்டும் என்ற வலுவான நோக்கமிருந்தாலன்றி யாரையும் சிறை வைக்கும் வழக்கமில்லை. பிரிட்டிஷ் ஆட்சியிடம் அபிமானம் இல்லாவிடில் அது தண்டனைக்குரிய குற்றம் என்று கருதப்படவில்லை. ஆனால் 'அபிமானம் இல்லை' என்பதே 'விரோதம்' என்பதற்குச் சமானம் என்று கருதி, பிரிட்டிஷ் சர்க்காரிடம் அபிமானமில்லாதவர்கள்மீது தேசத் துரோகக் குற்றம் சாட்டித் தண்டிப்பதற்காக 124-ஏ பிரிவு புகுத்தப்பட்டது. இவ்விதியின் கீழ் தேசத் தலைவர்கள் தண்டிக்கப்பட்டபோது நாடு முழுதும் அதனைக் கண்டித்தும் கேலி செய்தும் வந்தோம். அந்நிய சர்க்காரிடம் இந்தியப் பிரஜைகள் அபிமானம் காட்டவேண்டுமென எண்ணுவது இயற்கைக்கே விரோதமல்லவா என்று நாம் எள்ளி நகையாடி வந்தோம்.

சுயராஜ்ய இந்தியாவிலும் மேற்படி மெக்காலே சட்டத்தின் 124-ஏ ஷரத்துப் போன்ற கேலிக்கிடமான யோசனைகள் பின்பற்றப்படுகின்றன. இந்திய குற்றச் சட்டத்தின்கீழ் 'பொருளாதாரக் குற்றங்கள்' என்பதாகச் சிலவற்றைச் சேர்ப்பதற்கு இந்திய அரசாங்கம் விரும்புகிறது. இந்த யோசனை சட்டக் கமிஷனின் பரிசீலனைக்கு விடப்பட்டிருக்கிறது. இந்த யோசனையின்படி 'பொருளாதாரக் குற்றங்கள்' எவை எனில், 'தேசத்தின் பொருளாதார அபிவிருத்திக்குத் தடையாக உள்ள நடவடிக்கைகள்' என்று விளக்கம் கூறப்பட்டுள்ளது. 'அபிமானம் இல்லாவிடில் விரோதம் என்று அர்த்தம்' என்பது போலவே, ஆள்கிற கட்சியின் பொருளாதாரக் கொள்கைக்கு மாறான நடவடிக்கைகள் யாவும் 'தேசப் பொருளாதார அபிவிருத்திக்குத் தடையான நடவடிக்கை' என்று வியாக்கியானம் செய்து கொண்டு அவற்றைத் தண்டனைக்குரிய குற்றங்களாகச் செய்ய வேண்டுமென்பது சர்க்காரின் நோக்கம்.

வரிகளைத் தராமல் ஏமாற்றுபவர் மட்டுமின்றி, அவற்றைத் தவிர்ப்பவர்களையும் குற்றவாளிகளாகக் கருதித் தண்டிக்க வேண்டும் என்பது சர்க்காரின் புதிய யோசனைகளில் ஒன்று. ஏமாற்றுவது வேறு; தவிர்ப்பது வேறு. ஒருவர் வரிச் சட்டத்துக்கு விரோதமாகப் பொய்க் கணக்குக் காட்டுவது முதலியன ஏமாற்றுவதாகும். குறிப்பிட்ட வரிகள் தம்மீது அமுலே ஆகாதவாறு, ஒருவர் தமது விவகாரங்களை அமைத்துக் கொள்வது வரியைத் தவிர்ப்பதாகும். ஒருவர் வரிக்கு இலக்கு ஆகாதபடி தமது நடவடிக்கைகளை அமைத்துக் கொள்வது குற்றம் என்று பிரிட்டிஷ் டொமினியன்களில் எதிலுமே கருதப்படவில்லை. ஆனால் இதையும் குற்றமாக்குவதற்காகப் புது ஷரத்து செய்யவேண்டுமென இந்திய அரசாங்கம் விரும்புகிறது. மேலும் வரியைத் தவிர்த்ததாக ஒருவர் மீது அரசாங்கம் குற்றம் சுமத்தினால் அக் குற்றத்தை நிரூபிக்கும் பொறுப்பு அரசாங்கத்துக்கு இராது;



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா
— பாரதியார்

குற்றம் சுமத்தப்பட்டவரே, தாம் வரியைத் தவிர்ப்பதற்காக மேற்படி நடவடிக்கைகளை எடுக்கவில்லை என்றும், வேறு சில உண்மையான நோக்கங்களை முன்னிட்டே தமது விவகாரங்களை இவ்வாறு அமைத்துக் கொண்டதாகவும் நிரூபிக்க வேண்டியிருக்கும். இவ்விதம் நிரூபிப்பது கடினம்.

'பொருளாதார அபிவிருத்தி' என்பதற்கு எப்படி இலக்கணமும், விளக்கமும் கூற முடியும்? ஆள்கிற கட்சி எந்த நடவடிக்கையை 'அபிவிருத்தி' என்று நினைக்கிறதோ, அதற்கே மற்றவர்களும் கைதூக்க வேண்டுமென்பதுதான் சர்க்காரின் நோக்கம். 'பொருளாதார அபிவிருத்தியைத் தடை செய்கிற குற்றம்' என்ற பெயரில் ஆள்கிற கட்சியின் திட்டங்களை ஆமோதிப்போர் மட்டுமே நல்ல பிரஜைகள் என்ற நிலைமையை உண்டாக்கி, மற்றவர்களையெல்லாம் தேச விரோதிகளாகக் கருதிச் சிறை வைக்கும் யோசனை நாகரிக உலகில் இதுவரை கேள்விப்பட்டிராதது.

இந்திய மக்கள் சிறையில் இருக்க வேண்டுமா, வெளியில் இருக்க வேண்டுமா என்று நிர்ணயிப்பதற்குச் சர்க்காரின் பொருளாதாரக் கொள்கைகளை அளவுகோலாகச் செய்திருப்பது ஜனநாயக உலகத்தில் எங்கும் கண்டிராத யோசனை.

ஆனால் ஸோவியத் ருஷியாவை முன்னோடியாகக் கொண்டுதான் இந்த யோசனை மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. மக்கள் மீது சர்க்கார் எவ்வளவு வரி சுமத்தினாலும் அதனை அவர்கள் ஆட்சேபிக்கக் கூடாது; அவ்விதம் ஆட்சேபிப்பதைக் குற்றமாக்கி விட வேண்டும் என்பதே சர்க்காரின் கருத்து. பிரிட்டிஷ் சர்க்காரிடம் பற்றுதல் இல்லாவிடில் அது தேசத் துரோகமாகும் என்று முன்பு ஆங்கில ஆட்சியாளர் சட்டம் செய்தது போலவே, இந்திய சர்க்காரின் திட்டங்களை ஆதரிக்காவிடில் அது தேசத் துரோகமாகும் என்று இப்போது காங்கிரஸ்காரர்கள் சட்டம் செய்ய நினைக்கிறார்கள்.

சுதந்திர ஜனநாயக நாடுகளில் குற்றங்கள் எனப்படுபவை ஒரு சர்க்கார் மாறி, வேறு சர்க்கார் ஏற்பட்டாலும் குற்றங்களாகவே தான் இருக்கும். ஆனால் தனிப்பட்ட ஒரு கட்சியின் கருத்தை அநுசரித்துப் 'பொருளாதார அபிவிருத்தி'யை நிர்ணயித்துச் செய்யப்படும் சட்டம் வேறு கட்சி ஆட்சிக்கு வந்தால் நிற்காது. தற்போது ஆள்கிற கட்சியின் கொள்கையை மட்டும் சட்டமாக்கினால், வேறு கட்சி ஆட்சிக்கு வரும்போது அந்தச் சட்டம் எடுபட்டுப் போகும். இவ்விதமான 'சட்டங்களை' எந்த விவேகமுள்ள சர்க்காரும் வகுப்பதில்லை.

தேர்தல் வெற்றியைப் பின்பற்றிக் குற்றச் சட்டம் உருவாக வேண்டும் என்ற விசித்திர நிலையில் நாடு இருக்கிறது. புரட்சியின் மீது ஏற்பட்ட சர்வாதிகார சர்க்கார்களையன்றி வேறெங்குமே இவ்வாறு ஆட்சி பீடத்துக்கு வந்தவர்கள் நினைப்பதெல்லாம் சட்டம் என்ற நிலை ஒப்புக் கொள்ளப்பட்டதில்லை. 'பொதுத் தேர்தல்களின் விளைவாக அரசாங்கம் ஒரு கட்சியின் வசமிருந்து இன்னொரு கட்சிக்கு மாறக் கூடும்; பொருளாதாரக் கொள்கைகளும் மாறக் கூடும்' என்பதைப் பூரணமாக ஏற்றுக்கொண்டு அமைக்கப்பட்ட அரசியல் சாஸனம் நம்முடையது. அதன் கீழமைந்த ஒரு சர்க்கார் தன் பிரத்தியேகக் கொள்கைகளை மக்கள் ஏற்காவிடில் அது குற்றம் என்று சட்டம் செய்தால், அந்தச் சட்டம் நீதிக்கும் நியாயத்துக்கும் பொருந்தாது.

# வகுப்புவாதத்துக்கு ஓர் அடி!

கடந்த வாரம் இலங்கைப் பார்லிமென்டில் எதிர்க்கட்சியினருக்கு ஒரு மிகப் பெரிய அதிர்ச்சி காத்திருந்தது. சுமார் பதினைந்து நாட்கள் வரை சற்று சுகவீனமாக ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வந்த பிரதம மந்திரி திரு டட்லி சேனநாயகா இன்னும் சுகவீனமாக இருப்பார் என்றும், அரசாங்கத்தின் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டு வந்து ஆளும் கட்சியைத் தடுமாறச் செய்ய இதுதான் சரியான தருணம் என்றும் எதிர்க்கட்சியினர் நினைத்துக் கொண்டிருந்தார்கள்.

''எனக்கு முடக்குவாதம், கைகால்கள் இழுத்துக் கொண்டு விட்டன; என்னால் பேச முடியாது, நிற்க முடியாது என்றெல்லாம் எதிர்க்கட்சிப் பத்திரிகை நாட்டிலே விஷமப் பிரசாரம் செய்து வருகிறது. நான் கல் மாதிரி இருக்கிறேன் என்பதை இப்போதாவது தெரிந்து கொள்ளட்டும்'' என்று எதிர்க்கட்சிகளின் மூக்கைப் பிரதம மந்திரி உடைத்த பொழுது சபையில் பலத்த கரகோஷம் எழுந்தது. ''என்னுடைய தந்தையாரான திரு டி. எஸ். சேனநாயகா ஒரு கிறிஸ்தவ தேவாலயத்தில் என் தாயாரைத் திருமணம் செய்து கொண்டதாக எதிர்க்கட்சித் தலைவர் ஸ்ரீமதி பண்டாரநாயகா ஒரு பொதுக் கூட்டத்தில் பேசியிருக்கிறார். அதாவது எங்கள் குடும்பம் கிறிஸ்துவப் பற்றுள்ளது, ஒரு தீவிர பௌத்தரே நாட்டை ஆளத் தகுந்தவர் என்பது ஸ்ரீமதி பண்டாரநாயகாவின் சூசகமான வாதம். உண்மையில் எனது தந்தையார் கிறிஸ்துவ தேவாலயத்தில் திருமணம் செய்து கொள்ளவில்லை. அப்படியே செய்து கொண்டிருந்தால்தான் அதில் என்ன தவறு? சமயம் என்பது ஒவ்வொருவருடைய தனிப்பட்ட விஷயம். அதற்கும் நாட்டு நிர்வாகத்துக்கும் என்ன சம்பந்தம்? ஒருவருடைய சமயத்தைச் சுட்டிக்காட்டி அரசியல் பிரசாரம் செய்வது கேவலமானது'' என்றார் பிரதமர் டட்லி.

இலங்கையில் பல சமயத்தவர்கள் வாழ்கிறார்கள். அவர்களுக்கிடையில் வேற்றுமையைக் கிளப்பிவிட்டு வகுப்புக் கலகத்தை விளைவித்து அதன் பயனைத் திரும்பவும் ஆட்சி பீடத்துக்கு வர எதிர்க்கட்சிகள் திட்டமிட்டு வேலை செய்கின்றன. ஸ்ரீமதி பண்டார

நாயகாவின் கணவர் பிரதம மந்திரியாக இருந்த பொழுது நாட்டிலே இரண்டு வகுப்புக் கலகங்கள் நடந்து பல நூற்றுக்கணக்கானவர்கள் வர்ணிக்க முடியாத துன்பமடைந்தார்கள். அநேகர் படுகொலை செய்யப்பட்டார்கள். சிலர் பெட்ரோல் ஊற்றி எரித்துக் கொல்லப்பட்டார்கள். அப்படியிருந்தும் தாய்க் குலத்தைச் சேர்ந்த அவர் எப்படித்தான் இன்னொரு வகுப்புக் கலகத்துக்கு வித்திட முயற்சி செய்கிறாரோ என்பதை மனத்தினாலும் கற்பனை செய்து பார்க்க முடியாமலிருக்கிறது. ஒருவரை அதிகார ஆசை யென்ற பேய் பிடித்துக் கொண்டால் அது எப்படியெல்லாம் ஆட்டுவிக்கிறதென்பதற்கு ஸ்ரீமதி பண்டாரநாயகா இன்று ஓர் உதாரணமாக விளங்குகிறார்.

இந்தியத் தலைவர்களான திரு தொண்டைமான், திரு அஸீஸ் போன்றவர்கள் திரு டட்லி சேனநாயகாவின் தேசிய அரசாங்கத்தை ஆதரிப்பதினால் அரசாங்கம் இந்தியர்களுடைய கைக்குப் போய் விட்டதைப் போலவும் கூடிய சீக்கிரம் இலங்கை இந்தியாவின் 'காலனி'யாகி விடுமென்றும் எதிர்க்கட்சியினரின் விஷமத்தனமான பிரசாரங்கள் நடைபெறுகின்றன. இலங்கையில் சட்டவிரோதமாகக் குடியேறுகிறவர்களையெல்லாம் கண்டமாத்திரத்தில் சுட்டுத் தள்ள வேண்டுமென்று எதிர்க்கட்சியைச் சேர்ந்த திரு ஆர். ஜி. சேனநாயகா என்பவர் எப்பொழுதும் சொல்லி வருவதைப்போல் திரும்பவும் கூறிய பொழுது, "இப்படிச் சொல்லும் ஒருவர் இந்நாட்டின் பார்லிமெண்ட் சபையில் அங்கம் வகிப்பதைக் கண்டு நான் மிகவும் வெட்கப்படுகிறேன்" என்றார் பிரதம மந்திரி. சுத்து, வெட்டு என்று வெறி பிடித்தவரைப் போலப் பேசும் ஒருவர் பொறுப்பு வாய்ந்தவர்கள் இருக்க வேண்டிய பார்லிமென்டு சபையில் அங்கம் வகிப்பது பிரதம மந்திரி கூறுவதைப் போல உண்மையில் வெட்கப்பட வேண்டியதுதானே? இலங்கையின் பௌத்த சமயத்தின் பாதுகாவலர் தாங்களே என்று சொல்லிக் கொள்ளும் திரு ஆர். ஜி. சேனநாயகா போன்றவர்களுடைய அதிகாரத்தின் கீழ்தான் இலங்கையில் பௌத்தம் தழைக்குமாம். திரு டட்லி சேனநாயகாவின் ஆட்சியில் பௌத்தம் நசித்துப் போய்விடுமாம். எப்படி இருக்கிறது கதை!

"இலங்கையில் உள்ள தமிழர்களிலே யார் இலங்கைத் தமிழர், யார் இந்தியத் தமிழர் என்பதைக் கண்டுபிடிக்க முடியாமல் ஏற்கனவே பெரிய குழப்பமாக இருந்து வருகிறது. இதேபோல முஸ்லிம்களிலும் இந்திய முஸ்லிம்கள் யார், இலங்கை முஸ்லிம்கள் யார் என்பதில் குழப்பம் இருந்து வருகிறது. இலங்கைப் பிரஜைகளை, சட்டவிரோதமாக இலங்கையில் குடியேறிய இந்தியர்கள் என்று கருதி இந்தியாவுக்குத் தவறுதலாக நாம் நாடு கடத்திய நமது பிரஜைகளையே நாம் சுட்டுக் கொல்ல வேண்டுமென்கிறார் திரு ஆர். ஜி. சேனநாயகா. என்ன விபரீதமான யோசனை இது?" என்று பதிலடி கொடுத்தார் பிரதமர்.

பிரதமரின் பார்லிமெண்ட் பிரசங்கம் சிறுபான்மை மக்களுக்கும் சிறப்பாகத் தமிழ் மக்களுக்கும் மிகுந்த நம்பிக்கை அளித்திருக்கிறதென்று கூறினால் மிகையாகாது.

ஸ்ரீமதி பண்டாரநாயகா பிரதம மந்திரியாக இருந்த போது நிர்வாகத்தைச் சர்வ சிங்கள மயமாக்க நடவடிக்கை எடுத்தார். எல்லா அரசாங்க உத்தியோகஸ்தர்களும் சிங்களத்தைக் கற்க வேண்டுமென்றும் இரண்டு ஆண்டுகளுக்குள் சிங்களத்தில் தேர்ச்சி பெறாவிட்டால் பதவிகளிலிருந்து விலக வேண்டும் என்றும் உத்தரவிட்டார். இந்த உத்தரவின்படி அகாலமாக உத்தியோகங்களிலிருந்து ஓய்வுபெற நேரிட்ட தமிழர்கள் அநேகர். வேலை நீக்கம் செய்யப்பட்டவர்கள் இன்னும் பலர். இந்த அநியாயத்துக்குத் தேசிய அரசாங்கம் ஒரு முற்றுப்புள்ளி வைத்து விட்டது. அரசாங்க மொழி சிங்களமாக இருந்தாலும் பிறமொழிகளில் பரீட்சை எழுதி அரசாங்க உத்தியோகம் பெற்றவர்கள் அந்த மொழியில் தொடர்ந்து கடமை பார்த்து வரலாமென்று அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது. — இலங்கைக் கடிதம்

## அகோபிலம் ராஜகோபுரத் திருப்பணி

நூற்றெட்டு வைணவத் திருப்பதிகளில் ஒன்றும் ஆழ்வார்களால் 'சிங்கவேழ் குன்றம்' என்று போற்றிப் பாடப்பட்டதுமான தலம் அகோபில க்ஷேத்திரம். இந்தப் பழம் திருப்பதியிலுள்ள பிரஹலாத வரதருக்கு ராஜகோபுரம் அமைக்கும் பணியில் அகோபிலமட ஸ்வாமிகள் ஸ்ரீமான் சடகோப ஸ்ரீ வேதாந்த தேசிக யதீந்திர மகாதேசிகர் ஈடுபட்டுள்ளார்கள். இந்தத் திருப்பணிகள் நிறைவுற்று மகாஸம்ப்ரோக்ஷணம் ஆகஸ்டு 23ந் தேதியிலிருந்து 29ந் தேதி வரை வெகு விமரிசையாக நடைபெறவிருக்கிறது. இந்தத் தருணத்தில் அகோபிலமட ஸ்வாமிகளின் 71வது ஜயந்தி வைபவமும் சேருவதால் ஆஸ்திகர்கள் இவ்விரு வைபவங்களிலும் கலந்து கொண்டு பகவானின் அருளுக்குப் பாத்திரராகக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப விரும்புவோர் திரு ஆர். துரைராஜன், 27, டி.பி. கோயில் தெரு, சென்னை-5 என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம்.

என். சீனிவாசன்
(அகோபிலமடம் ஏஜெண்ட்)

ஆர். லக்ஷ்மிநாராயணன்
(மானேஜர்)

# ராஜாஜியின் கருத்துக்கள்

மலேஷியாவிலிருந்து சிங்கப்பூர் பிரிந்திருப்பது சர்வதேச சம்பவங்களில் ஒரு புதிராகும். முன்பெல்லாம் நம் நாட்டில் கலியாணம் அல்லது விவாகரத்துப் பிரச்னையைத் தீர்த்துக் கொள்வதற்கென்றே சிலர் சுதேச சமஸ்தானமொன்றுக்குச் சென்று, சிறிது காலம் தங்கள் மதத்தை மாற்றிக் கொண்டு காரியத்தையும் முடித்துக் கொள்வார்கள்; பிறகு இந்தியாவில் பழைய இடத்துக்கே வந்து பழைய மதத்தையே மீண்டும் தழுவுவார்கள். சிங்கப்பூர் — மலேஷியாப் பிரிவினையில் இதே போல் ஏதோ விசித்திர காரணம் இருக்குமோ என்று தோன்றுகிறது. முன்பு மலேஷியாவுடன் சேர்ந்ததாலேயே இப்போது சிங்கப்பூர் சுதந்திரத் தனி நாடாகப் பிரிய முடிந்திருக்கிறது. சமாதான முறையில், ஆனால் கண்ணீருடன், சிங்கப்பூர் பிரிவினை செய்து கொண்டுள்ளது.

தேசிய உந்தல்கள் காரணமாகச் சமீபத்திலோ, சிறிது காலம் சென்றோ சிங்கப்பூர் சீனாவின் ராணுவச் சாவடியாக மாற வேண்டியே நேரும். சிங்கப்பூரில் உள்ள பிரிட்டனின் ராணுவ தளத்தை வேறு நம்பகமான இடத்துக்கு மாற்ற வேண்டியிருக்கும்.

மலேஷியாத் தலைவர் துங்கு அப்துல்ரஹ்மான் அவர்கள் சமாளிக்க வேண்டிய பிரச்னைகளை நினைத்தால் நமது அநுதாபம் அவரையே சாரும். அவர் நல்ல தீரர்; எனவே, எல்லாப் பிரச்னைகளுக்கும் முகம் கொடுத்து நிற்பார்.

'நமக்கு ஏன் தொல்லை?' என்ற நினைப்பில் பிரிட்டன் மலேஷியாவுக்கு ராணுவ உதவி அளிப்பதை நிறுத்தி, ஹாங்காங்கையும் விட்டுக் கொடுக்கச் சிறிதும் மனமில்லாத சர்வாதிகாரிகளிடம் பேச்சுவார்த்தை நடத்த முற்பட்டு வியட்நாமிலிருந்து விலக எண்ணினால், இதன் விளைவாகப் பிறக்கும் ஒப்பந்தங்களை எதிர்த்தரப்பினர் ஒருபோதும் மதித்து நடக்கமாட்டார்கள். தென்கிழக்காசியாவின் விதி துயரமாக முடிவதை யாரும் மாற்ற முடியாமல் போகும். இந்தியாவின் ராணுவப் பிரச்னையும் மும்மடங்காகும்.

இந்தச் சூழ்நிலையில்தான் இந்தியாவின் இன்றைய ஆட்சியாளர்கள் சீனாவுடனும் ருஷியாவுடனும் சிக்கலில் மாட்டிக் கொண்டு மேல் நாடுகளின் நல்லபிப்பிராயத்தை இழப்பதற்குத் தங்களால் எவ்வளவு (உற்பாதம்) செய்ய முடியுமோ அவ்வளவும் செய்து வருகிறார்கள். இது நீடித்தால் மேற்கத்திய வல்லரசுகள் விரைவிலேயே இந்தியாவுக்கு அளிக்கும் உதவியை நிறுத்தி விடத்தான் நேரும். இதன்பின் என்ன ஆகும் என்று அறிவதற்குத் டில்லி ஜோஸியர்களை நாம் ஆருடம் கேட்க வேண்டியதில்லை.

***

ரேஷன் முறையை மீண்டும் அமுல் செய்வதும், நாட்டின் உணவு விநியோகத்தை நிருவகிப்பதும் சர்க்காரின் திறமைக்கு அப்பாற்பட்ட காரியங்கள் என்பதை அகில இந்திய உணவு தானிய வியாபாரிகள் சங்கத் தலைவர் எடுத்துக்காட்டிக் கடுமையாக எச்சரித்துள்ளார்.

ரேஷன்பற்றி ஒருபுறம் பேசப்படும்போதே, சென்ற ஆண்டில் நாட்டில் தானியங்களின் விளைச்சல் அபரிமிதமாகப் பெருகியிருப்பதாகவும் புள்ளி விவரங்கள் வெளியாகியுள்ளன.

1964-65ல் முந்தைய ஆண்டைவிட உணவு தானியங்கள் 86 லட்சம் டன்கள் அதிகம் விளைந்திருக்கின்றன. 1964—65ல் உணவு தானியங்களின் மொத்த உற்பத்தி சுமார் ஒன்பது கோடி டன்கள். இதில் அரிசி சுமார் 4 கோடி டன். இது சென்ற ஆண்டைவிட 5 சதவிகிதம் உயர்வாகும். இதுவரையில் இவ்வளவு அரிசி விளைந்ததில்லையாம். மற்ற தானியங்களும் இவ்வாறே உற்பத்தியில் உயர்வு கண்டுள்ளன.

இயற்கையன்னை எப்போதும் போல் கருணை காட்டித்தான் வருகிறாள். நீண்டகாலமாக நல்ல முறையில் தானிய வியாபாரம் செய்து வந்தவர்களும் தங்கள் தொழிலைத் தொடர்ந்து முன்போலவே நடத்தத் தயாராகத்தான் இருக்கிறார்கள். ஆனாலும் சர்க்காரின் மண்டலக் கட்டுப்பாடும், கொள்முதல் கொடுங்கோன்மையும், ஊழல் நடவடிக்கைகளும், சர்க்கார் விநியோகத்தின் சீர்கேடுகளும் இவையெல்லாம் போதாவென்று சர்க்கார் நிருவாகத்தின் காரணமாக எழும் பதுமுதல்களும், இதன் விளைவாக எழும் கிளர்ச்சிகளும் பஞ்ச நிலைமையை உண்டாக்கி வருகின்றன.

புதுடில்லி தர்பாரில் வீற்றுள்ளவர்களுக்கு ஞானம் உதயமாகட்டும்! அடக்கம் உண்டாகட்டும்! காரிய சாத்தியமற்ற நடவடிக்கைகளில் அவர்கள் இறங்காமலிருப்பார்களாக! மக்கள் தமது பல்வேறு தொழில்களைத் தாமே சிறப்பான முறையில் நடத்துவார்கள் என்று நம்பி அரசாங்கத்தை நடத்தும் அறிவை ஆட்சியாளர்கள் பெறுவார்களாக !

***

பாகிஸ்தான் ஒரு சர்வாதிகாரியின்கீழ் இருப்பதாகவும், இந்தியாவில் அரசியல் சாஸனத்துக்குட்பட்ட ஜனநாயக ஆட்சி நடப்பதாகவும் சொல்லப்படுகிறது. இருப்பினும் பாகிஸ்தானில் உணவுத் துறையிலும், தொழில் துறையிலும் நம்மைவிட மிகவும் சிறப்பான வளர்ச்சியைக் காண்கிறோம்.

இந்தியாவின் உணவு நிலைமையைப் பற்றிப் பத்திரிகைகளில் எவ்வளவோ எழுதப்படுகிறது; விளைச்சலைப் பற்றிப் புள்ளி விவரங்களும் காண்கிறோம்.

ஆனால் பாகிஸ்தானின் உணவு நிலைமை பற்றி அந்நாட்டுப் பத்திரிகைகள் ஏதும் எழுதாமலிருப்பதே நம் நாட்டைவிட அந்நாடு நல்ல நிலைமையிலிருப்பதை அழுத்தமாக எடுத்துக் காட்டுகிறது. பாகிஸ்தானிடமிருந்து இந்தியா கோதுமை வாங்கப் போவதாகவும் சமீபத்தில் அறிந்தோம்.

உலக பாங்கின் அறிக்கையிலிருந்து தொழில் துறையில் பாகிஸ்தான் அடைந்துள்ள முன்னேற்றத்தைப் பற்றித் தெரிய வருகிறது. இந்தியாவின் தோல்விகளுக்கு இது ஒரு சிறப்பான மாறுபாடு. இரு சர்க்கார்

களின் மாறுபட்ட பொருளாதாரக் கொள்கைகளே இதற்குக் காரணம். சுதந்திரப் பொருளாதார முறையின் நல்ல விளைவுகளையே பாகிஸ்தானில் காண்கிறோம். அடுத்த பொதுத் தேர்தலை நெருங்க நெருங்க இந்திய சர்க்கார் கொள்கைகளின் பலவீனங்கள் மேன்மேலும் அம்பலமாகி வருகின்றன.

ஃஃஃ

சட்டசபையை யாரேனும் அவமதிப்பதாகக் கருதினால் அவர்களைத் தண்டிக்கும் உரிமை சட்டசபைக்கு அளிக்கப்பட்டிருப்பது உண்மை. பிரிட்டிஷ் சம்பிரதாயத்தை அநுசரித்து இந்தியாவிலும் சட்டசபைகள் இந்த உரிமையைப் பெற்றுள்ளன. எனினும், குற்றத்தை விசாரிக்கும் சட்டசபையாளரே குற்றம் சாட்டுபவர்களாகவும், அதே சமயத்தில் நீதிபதிகளாகவும் இருந்து மேற்படி உரிமையை அதிகமாகப் பிரயோகிப்பதால் பொதுமக்கள் — பத்திரிகைகளின் கருத்து. செல்வாக்கு இழந்துவிடும்; சட்டசபையாளரைப் பற்றி நாடு அபிப்பிராயமே தெரிவிக்க இயலாமற் போய்விடும். கோர்ட்டுகளிலும்கூட வழக்குகள் விசாரணையில் உள்ளபோதுதான் அவை குறித்துக் கருத்துத் தெரிவிப்பது தவறேயன்றி, தீர்ப்பு அளிக்கப்பட்டபின் அதைப்பற்றி விமரிசிப்பது குற்றமல்ல. சட்டசபைகளைப் பற்றியோ, சட்டசபையாளரைப் பற்றியோ பத்திரிகைகளும், மக்களும் ஒரு போதுமே எவ்விதமாகவும் விமரிசிக்கக் கூடாது என்று எண்ணலாகாது. தேசத்தின் எல்லா ஸ்தாபனங்களுக்கும் மேலாகச் சட்டசபைக்கு விசேஷமான அந்தஸ்து உண்டு என்று சட்டசபையாளர்கள் எண்ணலாகாது. மத்திய பார்லிமென்ட், ராஜ்ய சட்டசபைகள் இவற்றின் கௌரவத்தையும், சட்டபூர்வமான அதிகாரத்தையும் காப்பாற்ற வேண்டுமென்பது வாஸ்தவம். ஆனால் பத்திரிகைகளும் பொதுமக்களும் கருத்துச் சுதந்திரம் பெற்றிருந்தால்தான் ஜனநாயகம் உயிர் வாழும் என்பதையும் மறக்கலாகாது. சட்டசபையின் சுதந்திரத்தைப் போலவே, மக்களின் கருத்துச் சுதந்திரமும் ஜனநாயகத்தின் முக்கியமான அங்கமாகும். சட்டசபையைக் குறித்த எல்லாக் கண்டனங்களையுமே அவமதிப்புக் குற்றமாக்கி விட்டால் கருத்துச் சுதந்திரமும், ஜனநாயக வாழ்வும் குந்தகமடையும். ஒரே சமயத்தில் குற்றம் சாட்டும் பிராஸிக்யூட்டராகவும், தீர்ப்புக் கூறும் ஜட்ஜாகவும் சட்டசபையாளர் உள்ளனர் என்பதோடு, சட்டசபைகளுக்குமேல் அப்பீலும் கிடையாது என்கிற நிலையில், அவை தங்கள் 'உரிமை'யை அதிகம் நிலைநாட்ட முயன்றால் யாருமே தங்கள் சுதந்திரக் கருத்தை வெளியிட முன்வரமாட்டார்கள். சட்டசபைகளுக்கு விசாரணை உரிமை அளித்துள்ள சாஸனம், ஜனநாயகத்துக்குரிய மக்கள் சுதந்திரங்களை மனத்தில் கொண்டே இந்த உரிமையை மிகவும் ஜாக்கிரதையாகப் பயன்படுத்த வேண்டுமென்று எதிர்பார்க்கிறது.

ஃஃஃ

'தேசத்தின் பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் சம்ஸ்கிருதப் போதனையைப் பரப்புவதற்குச் சர்க்கார் தன்னால் இயன்ற அனைத்தையும் செய்யும்' என்று பிரதமர் லால்பகதூர் அவர்கள் அகில பாரதிய சம்ஸ்கிருத வித்யாபீடத்தில் வாக்குறுதி தந்திருக்கிறார். ஆனால் மும்மொழித் திட்டம் இதற்கு நேர்மாறான நிலையைத் தென்னிந்தியாவில் உண்டாக்கி வருவதை அவர் அறியவில்லையா? பிரதேச மொழி, ஆங்கிலம், ஹிந்தி மூன்றையும் தென்னாட்டு மாணவ மாணவிகள் கட்டாயமாகக் கற்கவேண்டியிருப்பதால், சம்ஸ்கிருதத்துடன் அவர்கள் தொடர்பு கொள்ளும் வாய்ப்பு துண்டிக்கப்பட்டுள்ளதைப் பிரதமர் அறியவில்லையா? பல நூற்றாண்டுகளாகத் தென்னிந்தியா சம்ஸ்கிருத ஒளிப் பந்தத்தைத் தூக்கிப் பிடித்து வந்திருக்கிறது. அந்தப் பெரும் பணி முடிகிற காலம் தொடங்குவதாகத் தோன்றுகிறது.

ஹிந்தி சம்ஸ்கிருதத்துக்கு நெருங்கிய பந்து என்று கூறலாம். ஆனால் அயலாரைவிட நெருங்கிய பந்துக்களே அபாயகரமாக அமைவதுண்டு.

ஃஃஃ

'அமெரிக்கா தன்னை உலகத்தின் போலீஸ்காரனாக நினைத்துக் கொள்ள யார் உரிமை தந்தார்கள்?' என்று ஸ்ரீ வி. கே. கிருஷ்ண மேனன் வினவுகிறார். வியட்நாமில் அமெரிக்கா தலையிட்டுள்ளதை அவர் ஆட்சேபித்து இப்படிப் பேசியிருக்கிறார்.

இரண்டாவது உலக யுத்தத்தின்போது நேச நாடுகள் அமெரிக்காவை உதவிக்கு அழைத்த சமயத்தில் அதை ஆட்சேபித்துக் கிருஷ்ணமேனன் அவர்களைப் போல யாரும் கேள்விகள் கேட்கவில்லை. இரண்டாம் உலக யுத்தத்தில் அமெரிக்கா பிரவேசித்தபடியால், அந்த யுத்தத்தின் விளைவாக ஏற்பட்டுள்ள பல தீய விளைவுகளையும் சரிசெய்யும் தவிர்க்க முடியாத பொறுப்பு அமெரிக்காவுக்கு உண்டு என்று சியாங் — கே — ஷேக் கருதுகிறார். 'அரசியல் ரீதியிலும், தருமரீதியிலும் அமெரிக்காவே சுதந்திர உலகுக்குத் தலைமை தாங்குகிறது; இதற்கு மாறான பாதையில் செஞ்சீன ஜனநாயக நாடுகளின் சமாதானத்துக்கும், பாதுகாப்புக்கும் ஆபத்தாகப் பரவி வருகிறது; எந்த நோக்கங்களுக்காக அமெரிக்காவும், பிரிட்டனும், ருஷியாவும், (அப்போது சியாங்-கே-ஷேக்கின் தலைமையிலிருந்த) சீனக் குடியரசும் வாஷிங்டன் பிரகடனத்தில் கையொப்பமிட்டனவோ அந்த நோக்கங்கள் இன்னும் நிறைவேறவில்லை; நிறைவேறும் வரையில் இரண்டாம் யுத்தத்தின் நேசநாடுகளாகிய மேற்படி நான்கு நாடுகளுடைய கடமையும் பொறுப்பும் முடிவுபெறாது' என்று சியாங் கூறுகிறார்.

'உலகின் போலீஸ்காரனாக அமெரிக்காவுக்கு யார் உரிமை தந்தது?' என்று கேட்கும் மேனன் அவர்களுக்கு இந்தியாவின் பாமர மக்களும் இன்னொரு விடை கூறமுடியும். உலகத்தில் பட்டினியால் வாடும் நாடுகளுக்கெல்லாம் அமெரிக்காவே உணவளிக்க வேண்டும் என்று எப்போது எதிர்பார்க்கிறோமோ, அப்போதே உலக சமாதானத்துக்குக் காவலனாகும் உரிமையையும் அதற்கு அளித்து விட்டோம்.

ஜலதோஷத்தை எதிர்க்க

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

சாப்பிடுங்கள் சிவப்பு லேபில்










சாதாரண ஜலதோஷம்கூட அபாயகரமானது தான். அது உடலைப் பலவீனப் படுத்தி, நோய்களை எதிர்க்கும் சக்தியைக் குறைத்து, நோய்கள் எளிதில் பீடிக்கும் நிலையை ஏற்படுத்துகிறது. வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் மூன்று விதங்களில் அளிக்கும் பலன் ஒப்பற்றது. அதிலுள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் ஜலதோஷத்தை குணப்படுத்துகிறது. இரும்பு சத்து, பலமளிக்கும் சத்துக்கள், மால்ட் மற்றும் ஸ்ப்ளீன் சாரங்கள், பசியைத் தூண்டுகின்றன, இழந்த சக்தியை ஈடு செய்கின்றன, குணமான நோய் மீண்டும் வராமல் தடுக்கும் சக்தியை யூட்டுகின்றன.

எல்லாக் கால நிலைகளிலும் நோய்களை எதிர்க்கும் சக்தி பெற சிவப்பு லேபிலுள்ள வாட்டர்பரீஸ் காம்பவுண்ட் சாப்பிடுங்கள்.

வாட்டர்பரீஸ் காம்பவுண்டில் கலந்துள்ள கிரியோஸோட் மற்றும் க்வயகால் சுவாசக் குழாய்களில் கிருமிகளால் அபாயம் ஏற்படாமல் பாதுகாக்கின்றன. கபத்தை இளக்கி வெளியேற்றி சுவாசப் பைகளை சுத்தமாக வைக்கின்றன. இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கவும் வராமல் தடுக்கவும் உதவுகின்றன.

## வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

இருமல், ஜலதோஷம், சுவாசக் குழாய்களில் கபம் கட்டுதல், காச சம்பந்தமான உபாதைகள் முதலியவற்றை எதிர்க்கும் சக்தியை உடலுக்கு அளிக்கிறது

வார்னர் இந்துஸ்தான் லிமிடெட், பம்பாய்

JWT-WL. 3243 (a)

இந்தியப் பஞ்சாலை சம்மேளனத்துக்கு [1965 - 66] நடப்பு ஆண்டின் தலைவராகத் திரு ஜி. கே. தேவராஜுலு தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இது திரு ஜி. கே. தேவராஜுலுவின் தொழில் திறமைக்கு அஞ்சலி செலுத்தியதாகும்; தென்னகத்தின் தொழில் வளர்ச்சிக்குக் கட்டியம் கூறியதாகும் எனவும் கூறலாம்.

திரு ஜி.கே. தேவராஜுலுவின் உருவப்படத்தை இவ்விதழ் அட்டையில் வெளியிடுவதில் பெருமகிழ்ச்சி அடைகிறோம்.
—ஆசிரியர்]

# தொழிலதிபர் தேவராஜுலு

**ம**க்களின் சுக வாழ்வுக்கு ஆதாரமான பொருள் வளத்தைத் தொழில்களை வளர்ப்பதன் மூலம் வேகமாகப் பெருக்க முடியும் என்ற அடிப்படைக் கருத்தில் இணைந்தவர்கள் கோவை மாவட்டத்தைச் சேர்ந்தவர்கள். 'தென்னகத்தின் மான்செஸ்டர்' என்று கண்டோர் எண்ணி வியக்கும் வண்ணம், கோவை நகரத்தையும் அதன் சுற்றுப்புறத்தையும் மாற்றிய பெருமை அவர்களுக்கு உண்டு. அந்த அளவுக்குப் பஞ்சாலைகளும் நூற்பாலைகளும் நெசவாலைகளும் உருவாகி இருப்பது மட்டுமின்றி இதர பல தொழில்களும் அங்கே சிறக்கின்றன. தொழிலார்வம், தொழில் முன்னேற்றம், தொழில் வளம், என்ற சூழ்நிலையில் தோன்றி வளர்ந்து, உழைத்த தொழிலதிபர்கள் வரிசையில் இன்று முன் நிற்பவர் கோவைத் தொழில் பிரமுகர் திரு ஜி. கே. தேவராஜுலு. ஆடம்பரமில்லாத அமைதியான பிறவி. இந்த விளம்பர யுகத்திலே வாழ்ந்தும் தமது சாதனைகளைப் பற்றியும், சிறப்புக்களைப் பற்றியும் பறைசாற்றிக்கொள்வதை விரும்பாத ஓர் அபூர்வ மனிதர். செய்யும் பணியைச் செவ்வனே செய்து விட்டு, தாம் பாட்டுக்கு ஒதுங்கி நிற்கும் அதிசய மனிதர்.

திரு தேவராஜுலுவுக்குத் தந்தையும், சிறிய தகப்பனாரும் லட்சிய புருஷர்களாக வாய்த்தது அவரது பெரும் பாக்கியமாகும். அவருடைய தந்தையார் ஸ்ரீ ஜி. குப்புஸ்வாமி நாயுடு அவர்கள் சிம்மத்தையொத்த வீர தீர கம்பீர புருஷர். சிறிய தகப்பனார் திரு ஜி. வேங்கடஸ்வாமி நாயுடு அவர்கள் பசுவைப் போன்ற பரம சாதுஸ்வரூபி. இவ்விருவருடைய விசேஷ குணங்களும் ஒருங்கே அமையப் பெற்றவர் தேவராஜுலு. 'செய்வன திருந்தச் செய்' என்ற சித்தாந்தத்தையும் முயற்சி திருவினையாக்கும் என்பதன் ரகசியத்தையும் அன்னார்களின் வாழ்க்கையிலிருந்தும் போதனையாலும் நன்கு அறிந்துணர்ந்தவர் தேவராஜுலு.

தேவராஜுலுவின் தகப்பனார் ஸ்ரீ குப்புஸ்வாமி நாயுடு அவர்கள் அஞ்சா நெஞ்சம் படைத்தவர். தொழில் துறையிலும் வியாபாரத்திலும் ஈடுபட்டோருக்குத் தைரியம் தேவைதானே? ஆனால் அசட்டுத் தைரியமாக இராமல் தன்னம்பிக்கையுடன் கூடிய, திட்டவட்டமான காரண காரியத்துடன் இணைந்த துணிச்சலாக இருக்கும் அது. ஒரொரு சந்தர்ப்பத்தில் பாங்கியில் தரும் கடன்கள் போதாதென்று மூலதாரிகளிட


ஜி. குப்புஸ்வாமி நாயுடு


ஜி. வேங்கடஸ்வாமி நாயுடு

மெல்லாம் கடக் கடன் வாங்கி விடுவார் திரு குப்புஸ்வாமி அவர்கள். என்ன நேருமோ என்று அவரது அந்தரங்கத்துக்குப் பாத்திரமானவர்கள் பயந்துகொண் டிருக்கையில் தமது அறிவாற்றலாலும் செயல் திறனாலும் லாபம் கண்டு அஞ்சியவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்துவார்.



ஜி. கே. சுந்தரம்

கோவையில் பஞ்சாலைகள், நூற்பாலைகள், நெசவாலைகள் ஏராளமாகப் பெருக அஸ்திவாரமிட்ட பெரியோர்களில் திரு குப்புஸ்வாமி நாயுடு அவர்களும் ஒருவராவார். 1910ம் ஆண்டில் பஞ்சிலிருந்து விதைகளைப் பிரித்துச் சுத்திகரிக்கும் ஆலை யொன்றை (Ginning Factory) லக்ஷ்மி மில்ஸ் என்ற பெயரில் ஆரம்பித்தார். சிறிய முறையில் இதனைத் தொடங்கியபோது அவரது நம்பிக்கைக்குப் பாத்திரமாக உறுதுணையாக நின்றவை இரண்டு. ஒன்று அவரது உழைப்பு; மற்றொன்று நேர்மை!

இந்த இரு பெரும் மூலதனத்துடன் தொடங்கிய லக்ஷ்மி மில்லை லக்ஷ்மி கடாட்சம் தானாக வந்து அண்டியது. வெகு சீக்கிரம் விரிவடைந்து கொண்டே போயிற்று. நூற்பு ஆலையாகவும் மாறியது. கோவில்பட்டியில் ஒரு கிளை ஸ்தாபனம் தோன்றி அந்த வட்டாரத்து மக்களுடைய வாழ்வை வளம் பெறச் செய்தது.

இருபது வருஷங்களுக்கு முன் திரு தேவராஜுலு நிர்வாகப்பொறுப்பேற்ற பிறகு 1950ல் பல்லடத்தில் 'பாரத நாட்டிலேயே இதற்கு இணையாக வேறொன்றில்லை' என்று பெயர் பெறும் வகையில் மிக நவீனமானதும் தரமுயர்ந்ததுமான ஓர் ஆலையை ஸ்தாபித்தார். தென்னிந்தியாவின் மிகப் பெரிய ஸ்தாபனம் என்ற பெயரும் லக்ஷ்மி மில்களுக்கு ஏற்பட்டது.



ஜி. கே. ராஜகோபால்

ஆறு லட்சம் ரூபாய் மூலதனத்துடன் ஆரம்பித்த ஒரு தொழில் இன்று 106.50 லட்சம் ரூபாய் மூலதனத்துடன் வெற்றிகரமாகச் செயலாற்றிக் கொண்டு வருகிறதென்றால், கணக்கற்ற எத்தனை பங்குதாரர்களின் நன்னம்பிக்கையையும், மதிப்பையும் திரு தேவராஜுலுவும், அவருடைய சகோதரர்கள் திரு ஜி. கே. சுந்தரமும், திரு ஜி. கே. ராஜகோபாலும் பூரணமாகப் பெற்றுள்ளார்கள் என்பது விளங்கும்.

சாதாரணமாகக் கம்பெனிகளில் பங்குதாரர்களின் வருஷாந்தர மகாசபைக் கூட்டம் இன்ன தேதியில் நடக்கிறதென்று அறிவிப்பார்கள். பெரும்பாலான கூட்டங்களுக்குக் கம்பெனிச் சட்டத்தின்படி தேவைப்படும் குறைந்தபட்ச எண்ணிக்கையினர் கூட வந்து சேர மாட்டார்கள். பங்குதாரர்களைக் கொணர்ந்து சேர்ப்பது கம்பெனி நிர்வாகிகளுக்குத் தலைவலியாக இருக்கும்! அதிலும் நல்லபடியாக நிர்வாகம் நடக்குமேயானால் பங்குதாரர்களுக்கு இந்த அசிரத்தை தன்னால் வந்துவிடும். மோசமான நிர்வாகம் என்றாலோ, ஏமாற்றமடைந்த பங்குதாரர்களில் சிலர் இந்தக் கூட்டத்துக்கு வந்து குற்றங் குறைகளைச் சுட்டிக்காட்டிக் கூச்சல் போடுவார்கள். ஒரே குழப்பமான நிலையில் கூட்டம் கலைவதும் உண்டு. ஆனால் லட்சுமி மில்லின் வருஷாந்தர மகாசபைக் கூட்டத்துக்குப் பங்குதாரர்கள் ஏதோ திருவிழாவில் கலந்து கொள்வதுபோல் ஆர்வத்துடன் வருவதைக் காணலாம். மகாசபைக் கூட்டம் இனிது முடிந்த பிறகு பாங்கு வரவு செலவுக் கணக்கு இல்லாத கிராமவாசிப் பங்குதாரர்கள் ரொக்கமாக டிவிடெண்டுகளை உடனடியாகப் பெறுவதும், ஏனையோர் செக் மூலம் பெறுவதும், மகிழ்ச்சிப் பெருக்கோடு எல்லோரும் திரும்பிப் போவதும் கண்கொள்ளாக் காட்சியாகும். லக்ஷ்மி மில்ஸ் ஒன்றுக்கே உரிய விசேஷக் காட்சி இது.

இவ்விதமாகக் கோவையைச் சுற்றியுள்ள கிராமப்புறங்களில் வாழும் சிறு பங்குதாரர்களை நிரம்பக் கொண்டுள்ள லக்ஷ்மி ஸ்தாபனம் அவர்களது பங்குகளைப் போல்

# எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் இருங்கள்
# நாள்முழுவதும் சுறுசுறுப்பாக
# இயங்குவதற்கான புத்துணர்ச்சிக்கு
# புதிய கால்கேட் லோர்னே டால்க்

புதிய கால்கேட் லோர்னே டால்க்கின் புதுப்பிக்கும் நறுமணம் உங்களைக் குளுமையுடனும், புத்துணர்ச்சியுடனும் வைத்திருக்கிறது.... நாள் முழுவதும் அந்தத் துடிப்பான சுறுசுறுப்பைத் தருகிறது. இளமைத் துடிப்பும், சுறுசுறுப்பும், விளையாட்டுகளில் பிரியமுள்ளவர்கள் குறிப்பாக கால்கேட் லோர்னே டால்க் வியர்வையைத் துரிதமாக கிரகித்துக்கொண்டு தாங்கள், நாள் முழுவதும் உற்சாகமாக இருக்க உதவுவதை நன்கு அறிவார்கள்!

இது சிக்கனமானதுங்கூட! உங்கள் குடும்பத்தினருக்கு கால்கேட் லோர்னே டால்க்கை வாங்குங்கள்—அது சுறுசுறுப்பான வாலிப மக்களுக்கேற்ற புதியதொரு பரவசமூட்டும் நறுமணம் கொண்டது!






புதிய

சிக்கனமான டால்க் நவீன டின்னில்

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில் ஈறுகளைப் பலப்படுத்துகிறது என்று




வேறு எந்த டூத் பேஸ்ட்டிலும் இதை விட அதிக வீரிய குளோரோபில் இல்லை. குழந்தைகள் அதன் இனிய பெப்பர்மிண்ட் வாசனையை விரும்புகின்றனர்.




பணத்தை மிச்சப்படுத்துங்கள்— பெரிய சிக்கனமான சைஸை வாங்குங்கள்!

ETPA. G. 11 TAM

ஐந்து மடங்கு போனஸ் பங்குகளை வழங்கியுள்ளது என்றால் ஸ்தாபனத்தின் நிர்வாகிகளிடம் பங்குதாரர்களுக்கு உள்ள நம்பிக்கைக்குக் கேட்பானேன்? இன்னோர் உதாரணத்தையும் சொல்லலாம்.

ஸ்ரீ தேவராஜுலு சமீபத்தில் பஞ்சாலை, நெசவாலை உறுப்புக்களையும் சிறு இயந்திர சாதனங்களையும் கோவையிலேயே தயார் செய்வதற்காகப் பிரபல ஸ்விட்ஜர்லாந்து கம்பெனியான ரீட்டர்ஸ் (Reiters) ஸ்தாபனத்தின் கூட்டுறவுடன் ''லக்ஷ்மி மெஷின் ஒர்க்ஸ்'' என்ற கம்பெனியைத் தொடங்கினார். இதற்கு மூலதனம் 2.50 கோடி ரூபாய் தேவைப்பட்டது. அவரது சுற்றறிக்கையைக் கண்டதும் லக்ஷ்மி மில்ஸ் பங்குதாரர்களே மிகக் குறுகிய காலத்தில் ஒரு கோடி ரூபாய் வழங்கிவிட்டனர். மேலும் தேவைப்பட்டாலும் கொடுக்கக் காத்திருக்கிறோம் என்ற வகையில் பணம் குவிந்த இந்த அதிசயத்தை, இந்தக் காலத்திய பல திட்டங்கள் மூலதனம் கிடைக்காமல் கனவாகிப் போகிற போக்குடன் ஒப்பிட்டுப் பார்த்தால் திரு தேவராஜுலு சகோதரர்களின் தொழில் நிர்வாகத்திலும் நேர்மையிலும் மக்களுக்கு எத்தகைய உயர் மதிப்புள்ளது என்பது தெரியும்.

எதிலும் நியாய உணர்ச்சி மிகுந்தவர் என்பதனால் திரு தேவராஜுலு பொதுச் சேவைக்கும் இழுக்கப்பட்டிருக்கிறார். தொழிலுக்கு மூலதனம் வழங்கும் (Industrial Finance corporation) என்ற ஸ்தாபனத்தின் பஞ்சாலைப் பிரிவு ஆலோசனை உப கமிட்டியில் இவர் அங்கம் வகிக்கிறார். அகில இந்திய வர்த்தக சம்மேளனத்தின் நிர்வாகக் கமிட்டியில் இவர் ஒரு முக்கிய அங்கத்தினர். பஞ்சாலைத் தொழில் சம்பந்தமாக முக்கியமான கமிட்டிகளில் எல்லாம் திரு தேவராஜுலுக்குத் தனி இடமுண்டு. தென்னிந்திய ஆலைத் தொழில் சங்கத்துக்குத் தலைவராக இருந்திருக்கிறார். பம்பாயில் செயல் புரிந்து வரும் இந்தியப் பஞ்சாலை சம்மேளனத்தின் நிர்வாகக் கமிட்டியில் பல ஆண்டுகளாக அங்கம் வகித்து வருகிறார். இன்று இந்த மகத்தான ஸ்தாபனத்திற்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இந்தக் கௌரவத்துக்குத் திரு தேவராஜுலு முற்றிலும் தகுதியுடையவர். எத்தகைய அலுவலானாலும் நாட்டில் எந்தப் பகுதியில் அவருடைய அலுவல்கள் இருந்தாலும் அவற்றையெல்லாம் காலம் தவறாமல் நிறைவேற்றி முடிப்பதில் திரு தேவராஜுலுவின் திறமை பிரமிக்கச் செய்வதாகும்.

பொதுப் பணியில் செலவிடும் காலத்தையும் பணச் செலவையும் வீண் என்று எண்ணாத பரந்த மனப்பான்மை திரு தேவராஜுலுவின் தனிச் சிறப்பு. புகழுக்காகச் செயல் புரிவோரின் வர்க்கத்தில் திரு தேவராஜுலு இல்லாததே அவருக்கு ஒரு புகழ்.

அத்துடன் நல்ல காரியங்களுக்குப் பிறர் தம்முடன் ஒத்துழைக்க வற்புறுத்தும் ஆற்றலையும் பெற்றவர். ஸ்விஸ் கம்பெனியாகிய ரீட்டர்ஸ் ஸ்தாபனம் அந்நிய நாடுகளில் முதலீடு செய்வது, கூட்டு முயற்சி போன்றவற்றிலெல்லாம் ஈடுபாடு இல்லாதவர்கள். தாங்கள் உற்பத்தி செய்யும் நெசவாலைகளுக்கான உபகரணங்களை இந்தியாவில் பெருவாரியாக விற்று மிகவும் லாபகரமாக வியாபாரம் செய்து வருபவர்கள். அந்த உபகரணங்களை இந்தியாவிலேயே தயாரிக்க உதவ அவர்களைச் சம்மதிக்க வைக்க வாக்குச் சாதுரியம் மிக்க தேவராஜுலுவைத் தவிர வேறு யாராலும் முடிந்திருக்காது.

தாம் பெற்ற செல்வத்தைச் சமூக சேவைக்குப் பயனுறச் செய்ய வேண்டும் என்ற பண்பைத் திரு தேவராஜுலு மறந்தவரல்ல. கோவையில் இவரால் ஏற்படுத்தப்பட்டுள்ள தாய் — சேய் நல மருத்துவகம், இவருடைய குடும்ப தர்ம சொத்திலிருந்து பராமரிக்கப்பட்டு வருகிறது என்பது குறிப்பிடத் தக்கது.

தகப்பனார் திரு குப்புஸ்வாமி நாயுடு அவர்களின் ஞாபகார்த்தமாக நடக்கும் இந்த மருத்துவ மனையைப் பக்தி சிரத்தையுடன் பராமரித்து வருகிறார். இவரது நிர்வாகத்தின் கீழ் ஓர் உயர்நிலைப்பள்ளியும் உண்டு. 'கோவை மணி உயர்நிலையில் படிக்கிறேன்' என்று சொல்லிக் கொள்வதிலேயே மாணவர்களுக்கு ஓர் அலாதிப் பெருமை! மருத்துவ மனையை யொட்டி ஒரு மருத்துவக் கல்லூரியும் ஏற்படுத்தவேண்டும் என்பது இவருடைய நீண்ட நாள் அவா. அரசினர் இதுவரை இதற்கு ஆதரவு தரவில்லை. சீக்கிரமே நிலைமை மாறிக் கோவை நகரில் மருத்துவக் கல்லூரி ஒன்று உருவாக வேண்டும் என்று விரும்பாதவர்கள் அந்த மாவட்டத்தில் யாருமில்லை.

மேனாட்டுப் பாணியில் மில்களின் நிர்வாகத்தை ஒழுங்குபடுத்திய தேவராஜுலு இவ்விஷயத்தில் வேறு பலருக்கும் முன்னோடியாகத் திகழ்கிறார். குண்டூசி வாங்குவது முதல் ஆயிரக்கணக்கான ரூபாய்கள் பெறுமானமுள்ள வியாபாரம் வரை எல்லாம் கச்சிதமாக, நடைமுறையில் எந்த ஒரு சிக்கலோ தடுமாற்றமோ இன்றி மளமளவென்று நடந்துகொண்டு போகும்.

தேவராஜுலுவின் சகோதரர் ஸ்ரீ ஜி. கே. சுந்தரம் உயர் பண்புகளின் உறைவிடம். இளைய சகோதரரானாலும் தேவராஜுலுவுக்குச் சுந்தரத்திடம் அன்பு மட்டுமல்ல மதிப்பும் உண்டு. மற்றொரு இளைய சகோதரர் ராஜகோபால். மூவருமே நேர்மை, ஒழுக்கம், உழைப்பு இவற்றுக்குப் பேர் போனவர்கள்.

இத்தகைய சீலர்களுக்குக் கீழ் பணியாற்றும் தொழிலாளர்களுக்கு என்ன குறை இருக்க முடியும்? வசிஷ்டர் வாயால் பிரும்மரிஷி என்பது போல் லக்ஷ்மி மில்ஸ் பொன் விழா கொண்டாட்டத்தின்போது ஐ. என். டி. யூ. ஸி. ராமானுஜம் அவர்களே, ''லக்ஷ்மி மில்ஸ் போல எல்லா நிறுவனங்களும் இருந்துவிட்டால் அப்புறம் என்போன்றவர்களுக்கு வேலையே இருக்காது. கட்டாய ஓய்வுதான்'' என்றாராம்! சட்டம் கூறுகிற அளவுக்கு அதிகப் பட்ச போனஸைத் தொழிலாளர்கள் கேளாமலே பெறுகிறார்கள்!

நூல், நெசவாலைகளில் மட்டுமின்றி வேறு எத்தனையோ பல துறைகளில் முக்கியப் பொறுப்புகள் ஏற்றுத் தமிழகத்தில் தொழில் வளம் சிறந்தோங்கப் பாடுபட்டு வரும் ஜி.கே. தேவராஜுலு அவர்களை வாழ்த்துகிறோம்.





அமெரிக்க ராணுவ கேந்திர ஸ்தானமாகிய 'பெண்டகன்' கட்டிடத்தில் எத்தனையோ பிரிவுகளில் எத்தனையோ பெரிய அதிகாரிகள் வேலை செய்கிறார்கள். ஒருவரை யொருவர் தெரிந்துகொண் டிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை.

ஒரு குறிப்பிட்ட பிரிவில் ஓர் அதிகாரி தினந்தோறும் மாலை மணி நான்கானதும் மேஜை டிராயரை இழுத்துப் பூட்டிவிட்டு ஹாய்யாக வீட்டுக்குக் கிளம்பிவிடுவார். மற்றொரு அதிகாரி மாத்திரம் மணி ஆறு அடித்த பிறகும் உட்கார்ந்து வேலை செய்து அரை குறைத் திருப்தியுடன் கிளம்புவார்.

ஒரு நாள் தினம் தினம் லேட்டாகக் கிளம்பும் அதிகாரி சுறுசுறுப்பின் ரகசியத்தைப் புரிந்துகொள்ள ஆசைப்பட்டு நாலு மணி நபரை நெருங்கி "நீங்கள் தினம் தினம் நான்கு மணிக்குள் உங்கள் வேலையை முடித்து விடுகிறீர்களே! அது எப்படி உங்களுக்குச் சாத்தியமாகிறது? அந்த ரகசியத்தைச் சொல்ல முடியுமா?" என்று கேட்டார்.

பின்னவர் சிரித்தார். "பேஷாய்ச் சொல்கிறேன். சற்றுக் கடினமான விஷயத்தைத் தாங்கி வரும் தபால்களையோ புள்ளி விவரங்களைக் கேட்கும் கடிதங்களையோ 'கமாண்டர் ஸ்மித் கவனத்துக்கு' என்று அடியில் எழுதி என் மேஜையிலிருந்து அப்புறப்படுத்தி விடுவேன். கமாண்டர் ஸ்மித் என்பவர் இந்த ஸ்தாபனத்தில் இருக்கிறாரா இல்லையா என்றுகூட எனக்குத் தெரியாது. ஆனால் அப்படி அனுப்பும் தபால்கள் எனக்கு மீண்டும் திரும்பி வராததிலிருந்து 'கமாண்டர் ஸ்மித்' என்னும் ஆசாமி இங்கு எங்கோ உட்கார்ந்து நான் அனுப்பும் பேப்பர்களுடன் பிராணனை விட்டுக் கொண்டிருக்கிறார் என்று தான் தோன்றுகிறது. நீங்களும் இந்த உத்தியைக் கையாளலாம்" என்றார்.

தாமத ஆசாமி வேகமாகத் தம் சட்டையைச் சுருட்டி விட்டுக் கொண்டு முறைத்துப் பார்த்தார். "நான்தான் அந்தக் கமாண்டர் ஸ்மித்! என்ன சொல்கிறீர்?" என்றார். நான்கு மணி ஆசாமியின் நாக்கு மரத்துப் போய்விட்டது!

---

நீதிபதியாகப் பணியாற்றி மறைந்த ஏ. எஸ். பி. அய்யர் எந்த விஷயத்தையும் தம் நாஸ்யமான விளக்கம் மூலம் எளிதாக்கிவிடுவார். ஒரு சமயம் பாரதியார் விழா ஒன்றில் மொழி பற்றி அவர் பேசியதாவது: "எல்லாருக்கும் தங்கள் பாஷைதான் உசத்தி. ஆனால் பாரதியார் 'சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து' என்று மனதாரச் சொல்லியிருக்கிறார். பாட்டுக்குத் தெலுங்குதான் ஏற்றதென்று." ஒரு நிமிஷ மௌனத்துக்குப் பிறகு அவர் தொடர்ந்தார்: "ஆனால் அதைத் தமிழன்தான் பாடணும்" அவையில் ஆரவாரம். அய்யர் அதோடு நிற்கவில்லை. சிறிது நேரம் கழித்துச் சற்று உரக்கவே சொன்னார்: "அதையும் நான்தான் சொல்லணும்." மன்றம் அதிர்ந்தது. (அய்யர் ஒரு மலையாளி).

---

## இந்தி சீனி பாய் பாய்!

சமீபத்தில் நடந்த அதிகக் குழந்தைகளைப் பெற்றுள்ள குடும்பங்களுக்கான போட்டியில் கலந்து கொண்டு முதற் பரிசைத் தட்டிக் கொண்டு போன இரண்டு குடும்பங்கள்:

(1) இந்தியர். பாவாடை சாமியின் குடும்பம் 16 குழந்தைகள்.

(2) சீனர். டான் பூ பியோல் குடும்பம் 16 குழந்தைகள்.

இவர்களுக்குத் தலா ரூ. 375 ரொக்கப் பரிசும் டின்களில் அடைக்கப்பட்ட உணவுப் பொருட்களும் அளிக்கப்பட்டன. — பத்திரிகைச் செய்தி

நாட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கும் பலமான கருத்தடைப் பிரசாரம் நடத்திக்கொண்டிருக்க இப்படி ஒரு போட்டியா? அதிலும் சீனக்காரனுக்குப் பரிசா என்று திகைக்கிறீர்களா? நம் நாட்டில் நடந்தா லல்லவா நீங்கள் திகைக்க வேண்டும்? இது நடந்தது சிங்கப்பூரில்.

தகவல்: சாந்தா பத்மநாபன், ஸ்ரீவைகுண்டம்



## எங்கும் பொருந்தும் ஏற்பாடுகள்





1: உங்களுடைய டிக்கட் ஓர் ஆசனத்துக்கான உரிமையைத்தான் உங்களுக்குக் கொடுக்கிறது. ஆகவே உங்கள் சாமான்களைப் பக்கத்து ஆசனங்களின் மீது வைக்காமல் அதற்கென்று இருக்கும் பலகையின்மீது வையுங்கள்.

2; உங்களுக்கு எதிராக உள்ள ஆசனங்களை உங்கள் கால்களை வைத்துக் கொள்ள உபயோகப் படுத்தாதீர்கள். அவை பிறர் உபயோகத்துக்குத் தேவைப்படும். அவர்கள் அந்த ஆசனங்கள் சுத்தமாக இருப்பதையே விரும்புவார்கள்.



3. மற்றப் பிரயாணிகளின் சாமான்களை மேல் பலகையில் வைக்க நீங்கள் உதவ முன்வந்தால் உங்கள் இரண்டு கைகளையும் உபயோகித்து உதவுங்கள். அலட்சியமாக ஒரு கையை நீட்டி உபயோகிப்பதன் மூலம் அவை எதிர்பாராமல் கீழே விழுந்து சேதமடையலாம்.



4. உங்கள் அசதியின் காரணமாகப் பக்கத்து ஆசனப் பிரயாணியின் தோளைத் தலையணையாக நினைத்துச் சாய்ந்து தூங்கி விடாதீர்கள். நீங்கள் விரும்பினால் உங்கள் பிரயாணத்தின்போது தலையணைக்கு ஏற்பாடு செய்துகொள்ளலாமே!



5. நீங்கள் உங்கள் குழந்தைகளுடன் பிரயாணம் செய்தால், அவர்களுடைய பிரயாணப் பொழுதுபோக்குக்கு முன்னேற்பாடாக ஏதாவது எடுத்துச் செல்லுங்கள். இல்லாவிட்டால் அவர்கள் சக பிரயாணிகளைப் பொம்மையாக நினைத்துவிடப் போகிறார்கள்.



6. ஸ்நான அறைக் கண்ணாடி முன் மெய்மறந்து வெகு நேரம் நின்று விடாதீர்கள். வெளியே மற்றப் பிரயாணிகள் கால் கடுக்கக் காத்துக் கொண்டிருக்கலாமல்லவா?

(அமெரிக்க ரயில்வே நிர்வாகங்கள் தங்கள் பிரயாணிகளுக்காகத் தயாரித்திருக்கும் அறிவிப்புக்களில் சில.)

உதவியவர் : மோனு

## பாயைப் பிராண்ட வேண்டுமா ?

ஒரு வருஷத்துக்கு நகத்தை வெட்டாதீர்கள்! நம்முடைய விரல் நகம் ஒரு வருடத்துக்கு இரண்டரை அங்குல நீளம் வளரும். அப்புறம் பிராண்டுவது சுலபம்!

இன்னும் கேளுங்கள்:

நம்முடைய தலைமயிர் ஒரு வருடத்துக்கு பதினாறு அங்குல நீளம் வளரும்.

நம் இரத்தத்தில் 90 சதவிகிதம் தண்ணீர்தான். ஆனால் ரத்தத்தின் அடர்த்தி தண்ணீரைப் போல ஆறு மடங்கு அதிகமாகும்.

இருமல் வெளியாகும் வேகம் மணிக்கு 245 மைல்கள்.

ஒரு மனிதனின் தீவிர சிந்தனை வேகம் மணிக்கு 150 மைல்களாகும்.

ஒரு நிமிஷத்துக்கு 70 முறை அடித்துக்கொள்ளும் நம் இருதயம் 50 ஆண்டுகளில் சுமார் 1805 கோடி தடவை அடித்துக்கொள்கிறது.

நாம் பிறக்கும்பொழுது 270 எலும்புகளுடன் பிறக்கிறோம். சாகும்பொழுது 206 எலும்புகளுடன் சாகிறோம். மீதி 64 எலும்புகளும் நாம் வளரும்போது நம் மற்ற எலும்புகளுடன் இணைந்துவிடுகின்றன.

- லக்ஷ்மி











## அன்றைய நாகரிகம்

உடைகள், அணிகள் அலங்காரங்கள் இத்தனையிலும் இன்றைய நாகரிக மோஸ்தர் களைக் காணுவதில் நமக்கு ஒரு மோகம் உண்டு. 'பாஷன்' பத்திரிகைகளை ஆர்வத் தோடு புரட்டும் இன்றைய இள வயதின ருக்கு இங்கு மூன்று புகைப்படங்களை வெளி யிட்டுள்ளோம். அந்தக் காலத்தில் சென்னையி லிருந்த நடிகைகள், நாட்டிய மாதர்கள் இவர் களை நம் கண் முன் கொண்டு வந்து நிறுத்தும் புகைப்படங்கள் இவை. ஒரு குழந்தையின் ஆடையையும் விளையாடும் பொம்மையையும் விளக்குறெது முதல் படம். மறந்துபோன அன்றைய நாகரிகத்தின் மறுபிறப்புத்தான் இன்றைய நாகரிகத்தின் பல அம்சங்கள் என்றால் உங்களுக்கு வியப்பாக இருக்கும்.





# பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர்

**இதமான நறுமணம் கொண்டது**
**புத்துணர்ச்சி யளிக்கிறது**
**வியர்வையை உறிஞ்சுகிறது**




ஸ்நானத்திற்குப் பின் அனுபவமாகும் புத்துணர்ச்சி நீடித்து நிற்க, நாள் முழுவதும் நறுமணத்துடன் திகழ, பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் உபயோகியுங்கள். இதமான வாசனையுள்ள இந்த டால்கம் பவுடர் வியர்வையை விரைவில் உறிஞ்சி, எல்லாக் காலநிலைகளிலும், உங்களை நாள் முழுவதும் குளுமையுடனும் மனோ உல்லாசத்துடனும் வைக்கும். பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் டால்கம் பவுடர் குடும்பத்தினர் அனைவர்க்கும் ஏற்றது.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

**யாவரும் வாங்கக்கூடிய**
**உயர்தர டால்க்**

JWT-P.3214

# தாயின் சீற்றம்

கே.பி. நீலமணி

காலையில் எழுந்ததுமே வெட்டுக் கத்தியும் கையுமாகக்கொல்லைப்புறம்நோக்கிப் போனான் கோபி. தொழுவத்தில் போடப்பட்டிருந்த மரக் கட்டையின் மீது சிறிது பொடி மணலைத் தூவிக் கத்தியை முன்னும் பின்னுமாகத் தீட்டத் தொடங்கினான்.

கட்டைக்கும் கத்திக்கும் இடையில் அகப்பட்ட பொடி மணல் மேலும் பொடியாகியது. 'சர் சர்' என்ற ஒலியுடன் தீப்பொறிகள் பறந்தன. அதைப் பார்க்கப் பார்க்கக் கோபியின் மனத்தில் எல்லையில்லாத ஆனந்தம் ஏற்பட்டது. தன் உள்ளத்தில் பெரிதாகக் குமுறிக் கொண்டிருக்கும் பெரு நெருப்பின் பிரதிபலிப்பைக் காண்பதில் அவனுக்குக் களிப்பு.

சட்டென்று தீட்டுவதை நிறுத்தி இடக்கை விரல் நகத்தின்மீது இலேசாக ஒரு தேய்ப்புத் தேய்த்தான். அப்படியே இழைப்புளியில் மரம் சுருண்டு வருவதுபோல் நகத்தைச் சுரண்டிக் கொண்டு வந்தது.

அப்பா! வெட்டுக் கத்தியால் க்ஷவரமே செய்து கொள்ளலாம் போலிருக்கிறது. அவ்வளவு கூர்மை. சட்டென்று கோபி அருகிலிருந்த வாழை மரத்தில் ஒரு சொருகு சொருகினான்.

கத்தி பாதிக்கு மேல் மரத்தில் பாய்ந்து விட்டது. அந்த இடத்திலிருந்து பால் கசிந்து கொண்டிருந்தது.

''இது போல ஒரு திவசம் வெட்டி, அ பட்டருடே சோரெயெ கொட்டிப்பிச்சு ஞான் கொல்லும்'' — (இதுபோல் ஒரு நாள் வெட்டி, அந்தப் பட்டரின் ரத்தம் சிந்த நான் கொல்லுவேன்) — கோபி முணுமுணுத்தான்.

வீட்டை மெழுகுவதற்கு வாளியில் சாணத்தைக் கரைத்துக் கொண்டிருந்த பகவதி ஓரக்கண்ணால் மகனைப் பார்த்துவிட்டுத் தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

அவனுக்கும் அது அன்றாட வேலை, அவளுக்கும் அது அன்றாட வேலை. வெட்டுக் கத்தியைத் தீட்ட வேண்டியது. தென்னையிலோ முருங்கையிலோ ஒரு வெட்டு வெட்ட வேண்டியது. 'பட்டரை' இரு முறை திட்ட வேண்டியது.

ஆரம்பத்தில் சில காலம் பகவதி மகனைக் கண்டித்துக் கட்டுப்படுத்தி வைத்திருந்தாள். பிறகு வர வர அவனுக்கு ஈடு கொடுக்க அவளால் ஆகவில்லை. எத்தனை சொன்னாலும் அவன் கேட்பதும் இல்லை — அதோடு அவளையே எதிர்க்கவும் தொடங்கி விட்டான். ஆகவே வர வர அவளும் பார்த்தும் பார்க்காததுமாகப் போய் விடுவாள்.

அன்று அவனது வெறி அதிகமாகிவிட்டதோ என்னமோ... குருத்தும் குலையுமாக இருந்த வாழையின் இடுப்பில் நாலைந்து





மைனர் மகாதேவனைத் தீர்த்துக் கட்டிவிடுவது என்று கத்தியைத் தீட்டிக் கொண்டிருந்த கோபி, கடைசியில் அந்த மைனருக்கே உயிரூட்டும் பணியில் ஈடுபடும்படியாயிற்று....ஏன்? எதற்காக? உணர்ச்சிக் கொந்தளிப்புக்களும், மனப் போராட்டங்களும் கொண்ட இந்தக் கதையின் அழகைக் கொஞ்சும் மலையாள மொழியும் மெருகேற்றுகிறது. ★

போடு போட்டு விட்டான். அவை தன்னை வளர்த்து நிறுத்தியிருக்கும் பகவதியிடம் உடம்பை யெல்லாம் காட்டிக் கண்ணீர் சிந்தியது.

பகவதிக்குத் தாளவில்லை. துக்கம் அவள் தொண்டையை அடைத்தது. சாணிக் கையாலேயே மகனை ஓர் உந்து உந்தித் தள்ளினாள்.

"அடா... நினக்குப் பிராந்தோ......! வாழையை எந்தினடா வெட்டிக்களயுன்னு?" (டேய் உனக்குப் பைத்தியமா! வாழையை எதற்காகவடா இப்படி வெட்டி வீழ்த்துகிறாய்?) கொடுவாளை அவன் கையிலிருந்து பிடுங்கி எறிந்தாள்.

"இது போரா, ஆ பட்டரை என்றெ கையால் வெட்டிக் கொல்லணும் அப்போள் தன்னே என்றெ ஹிருதயத்தினு சமாதானம் கிட்டும்" (இதுபோல் அந்தப் பட்டரை வெட்டிக் கொல்ல வேண்டும். அப்பொழுது தான் என் மனம் சமாதானமடையும்)— "அம்மே...! ஆ ஆளு யாராணுன்னு நீ பறயுவில்லா... அல்லே?" (அம்மா! அந்த ஆள் யாரென்று நீ சொல்ல மாட்டாயல்லவா?)

கோபம் நீங்கிப் பொங்கி வந்த துக்கத்தை அடக்க முடியாமல் கேட்டான் கோபி. பகவதி சட்டென்று தன் மகனைத் தாவி அணைத்துக் கொண்டாள். அவள் கண்களிலும் கண்ணீர் கசிந்தது.

வடக்கன் பாறையிலிருந்து பத்தாவது மைலில் இருக்கும் ஒற்றைப் பாலம் மைனர் என்றால் அந்த வட்டாரத்தில் அறியாதவர்களே இருக்க மாட்டார்கள். நஞ்சையும் புஞ்சையுமாக அவருக்கு ஏராளமான சொத்து. எல்லாம் வழி வழியாக வட்டியும் முதலுமாகப் பெருகி வந்த பிதுரார்ஜிதச் சொத்துத்தான்.

மைனர் மகாதேவனுடைய பத்தாவது வயதில் அவன் மேஜராவதற்கு முன்னமே அவனது பெற்றோர்கள் இறந்து விட்டனர். பெற்றோருக்கு அவன் ஒரே பிள்ளை. அவனைக் கேள்வி கேட்பாரில்லை. சிறு வயதில் உற்றார் உறவினர்களுக்குச் சிறிது கட்டுப்பட்டிருந்த மாதிரி மகாதேவன் நடந்து கொண்டிருந்தான். மீசை முளைத்தவுடன் அதுவும் அஸ்தமித்துவிட்டது.

"மைனர்வாள்!" — என்று அழைத்துக் கொண்டு அங்கு போலி உறவு கொண்டாடுபவர்களுக்கெல்லாம் ராஜ உபசாரம் நடந்தது. மைனர் வியாபகம் சுற்று வட்டாரம் முழுவதும் வியாபித்தது. அவனது நடத்தை பிடிக்காமல் உண்மை உறவினர்கள் ஒதுங்கிப் போய் விட்டனர். ஆனால் அதைப் பற்றி யெல்லாம் மகாதேவனுக்குச் சிந்திக்க நேரமே இருக்கவில்லை.

மைனரின் செல்வமும் நண்பர்களின் ஆலோசனையும் பெட்ரோலும் நெருப்புமாக இணைந்து செயல்பட்டன. சொத்துக்கள் எல்லாம் விரைவிலேயே முக்கால்வாசிக்கு மேல் அழிந்து போயின. கால்வாசி வயதை எட்டிப் பிடிக்கு முன்னரே முக்கால்வாசி வாழ்க்கை வாழ்ந்து விட்டதைப் போல் தளர்ச்சியும் தள்ளாமையும் தன்னைத் தாவிப் பிடித்துக் கொண்டுவிட்டதை உணர்ந்த மகாதேவன் பற்றுக் கோடைத் தேடிக் கையை வீசினார். பக்கபலமாக இருந்த நண்பர்கள் எல்லாம் நகர்ந்து விட்டதை மைனர் அப்போதுதான் உணர்ந்தார்.

தனிமை வந்து மொய்த்துக் கொண்ட போதுதான் மைனரின் மனத்தில் தனக்கென்று ஓர் இல்லாள் இல்லாத குறை தோன்றலாரம்பித்தது. அப்போதெல்லாம் அவர் பகவதியைத்தான் நினைத்துக் கொள்வார்.

ஆம்! உண்மையிலேயே அவர் மைனராக இருந்த காலத்தில் அவரது ஆசை வார்த்தைகளில் நம்பி விழுந்து நாசமாய்ப் போன பெண்களில் பகவதியும் ஒருத்தி. ஆனால் மற்றவர்களை யெல்லாம் மறந்துவிட முடிந்த அவரால் பகவதியை மட்டும் மறக்கவே முடியவில்லை.

அதற்குக் காரணம், இறுதிவரை அவளை அவருடைய பணத்தினாலோ, பசப்பு வார்த்தைகளினாலோ ஏமாற்றவே முடியவில்லை. ஏழைப் பெண்ணாக இருந்தாலும் அழகிய அவள் பெரிய அரசியைப் போல் சிறந்து விளங்கினாள். அவளுடைய பிடிவாதத்தினாலேயே மைனருக்கு அவளிடம் பற்றுதல் அதிகமாயிற்று. அவளைப் பணிய வைக்காமல் விடுவதில்லை என்று மைனரின் நண்பர்கள் துரோக வலை விரித்தனர்.

"பகவதி, உன்னை நான் நிச்சயம் 'சம்பந்தம் (திருமணம்) பண்ணிக் கொள்கிறேன்" என்று அவன் தலை மேல் அடித்து நம்ப வைத்து வயிற்றில் ஓர் உயிரையும் குடியேற்றிவிட்டுத் தனக்கு ஒரு சம்பந்தமுமே இல்லாதவன் போல் ஒரு நாள் குடிசையிலிருந்து வெளிவந்து விட்டான் மகாதேவன்.

அப்போது ரத்தத்திலே ஜீவ அணுக்கள் அதிகமாகத் துள்ளித் திரிந்து கொண்டிருந்த காலம். எதுவும் இலட்சியமில்லை — லட்சியம் எதுவுமில்லை — லட்சியத்துக்கு மதிப்புமில்லை என்று எண்ணிக் கொண்டிருந்த காலம்.




# இவர்களுடைய வளமான வருங்காலம் இப்பொழுதே திட்டமிடப்படுகிறது

இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கின் ரெக்கரிங் டிபாஸிட் திட்டத்தின் சேமிப்பைக்கொண்டு.

குறைந்த பட்சம் ரூ. 5/-லிருந்து அதிக பட்சமாக அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில், டிபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிரதிமாதம் டிபாஸிட் செய்யும் தொகையான :

கீழ்க்கண்டபடி பெருகும் :

| | ரூ. 5/- | ரூ. 10/- | ரூ. 50/- | ரூ. 100/- | ரூ. 500/- |
|---|---|---|---|---|---|
| 12 மாதங்களில் | ரூ. 61.50 | ரூ. 123.25 | ரூ. 617.00 | ரூ. 1,234.25 | ரூ. 6,171.00 |
| 24 மாதங்களில் | ,, 127.25 | ,, 254.50 | ,, 1,273.50 | ,, 2,547.00 | ,, 12,735.25 |
| 36 மாதங்களில் | ,, 197.25 | ,, 394.75 | ,, 1,974.50 | ,, 3,948.75 | ,, 19,744.25 |
| 48 மாதங்களில் | ,, 271.25 | ,, 542.50 | ,, 2,714.25 | ,, 5,428.50 | ,, 27,142.75 |

# இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் லிட்.

தலைமைக் காரியாலயம் : 151, மவுண்ட் ரோட், சென்னை-2

உங்களுக்கு சேவை செய்வதற்காக 100 க்கு மேற்பட்ட கிளை அலுவலகங்கள் இந்தியாவின் முக்கிய இடங்களில். இதில் தமிழ் நாட்டில் மட்டும் 60 க்குமேற்பட்ட கிளை அலுவலகங்கள் உள்ளது.

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

கே. எம். நஞ்சப்பா
ஜெனரல் மானேஜர்

IOB-17-SA



இன்று அந்த இறந்த காலம் அவர் கண் முன் பேயாட்டம் ஆடிக் கொண்டிருந்தது.

பகவதிக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்ததாக அவர் கேள்விப்பட்டார். ஆனால் மனைவியோடு இருக்கிற அந்த நேரத்தில் அது மறைக்க — அல்லது மறந்துவிட வேண்டிய ஒரு விஷயமாகவே மகாதேவனுக்குத் தோன்றியது.

ஆனால் வர வர இப்போது அவரது மனத்தில் ஒரு புதுச் சபலம் அடிக்கடி தோன்றி வேதனைப்படுத்திக் கொண்டே யிருந்தது.

இன்று பகவதியின் மகனுக்குப் பதினைந்து பதினாறு வயதுகூட இருக்கலாம். அவனைப் போய்ப் பார்த்தால் என்ன? அவன்தான் எப்படி யிருப்பான்? பகவதிக்குத் தன்னை இப்போது பார்த்தால் கூட அடையாளம் தெரியுமோ என்னமோ — அது கிடக்கட்டும். அடையாளம் தெரியாவிட்டால் என்ன? தம் நினைவாவது இருக்குமல்லவா? — இப்படி அவர் எண்ணிக் கொண்டிருக்கும்போதே, ''சுரீர்'' என்று யாரோ தம் முதுகில் சவுக்கால் ஓங்கி அடிப்பதைப் போல் மகாதேவன் ஒரு கணம் துடித்தார்.

மனச்சாட்சியின் சவுக்கடிகளுக்கு ஈடு கொடுக்க முடியாத மகாதேவன் இக்கித் நினைத்தார். அதன் பிறகு அவனைத் தேடிக் கண்டுபிடித்துத் தம்முடன் அழைத்து வைத்துக்கொண்டுவிட வேண்டும் என்று மகாதேவன் மேற்கொண்ட முயற்சியெல்லாம் வீணாயின. அவள் தன் மகனையும் அழைத்துக் கொண்டு எங்கேயோ சென்றுவிட்ட செய்தி பிறகு அவருக்குத் தெரிய வந்தது. ஆனால் அதன் பிறகும் அவர் அவனைத் தேடுவதை நிறுத்தவில்லை.

சீட்டுக் கட்டாக வெட்டி வைத்திருந்த 'மரச் சீனி'ச் செடிகளை வரிசையாக இடைவெளி விட்டு நட்டுக் கொண்டிருந்தாள் பகவதி. அது முடிந்ததும் அழகாகக் கட்டி முடித்திருந்த பாத்திகளுக்குக் கமலையால் தண்ணீர் இறைத்து விட்டுக் கொண்டிருந்த பகவதியிடம் ஓடிவந்து அவளுடைய செந்நிறப் பாருக்குட்டி சேதி ஒன்றைக் கூறினாள்.

அதைக் கேட்டதும் பகவதியின் கையிலிருந்த கமலை தானே நழுவிக் கிணற்றில் விழுந்து தண்ணீரை வாரி இறைத்தது. மறு கணம் கையையும் காலையும் உதறிவிட்டுப்

பகவதி கண் மண் தெரியாமல் ஓடினாள். எங்கோ உலகத்தில் மறு கோடியை நோக்கி ஓடுவது போல் ஓடிக் கொண்டிருக்கும் பகவதி சிறு புள்ளியாகத் தெரியும்வரையில் இமைக்காமல் அந்த இடத்திலேயே நின்று பார்த்துக்கொண்டிருந்தாள் அவனுடைய ஜெநிதி.

ஆம்! பகவதி அத்தனை வேகமாக எங்கோ இருக்கும் தன் குடிசையை நோக்கித்தான் ஓடிவந்து கொண்டிருந்தாள். அவள் உள்ளத்தில் இருந்த ஒரே பிரார்த்தனை எல்லாம், "தன் பிள்ளை அந்த வேளையில் எங்கேயும் போகாமல் வீட்டில் இருக்க வேண்டுமே" என்பதுதான். அந்தக் கவலையுடனேயே கண் மண் தெரியாமல் களத்து மேட்டிலிருந்து வேகமாக ஓடி வந்தவள், குடிசை திறந்திருப்பதைக் கண்டதும் எல்லையற்ற மகிழ்ச்சியோடு உள்ளே பாய்ந்தாள்.

மறு கணம்...?

"கோபி...!" என்று அலறியவண்ணம் தடாலென்று தரையில் சாய்ந்தாள் பகவதி. ஆம்! ஓடிவந்த வேகத்தில் குடிசையின் நிலைப்படி அவளது நெற்றியைப் பிளந்து கீழே தள்ளி விட்டது.

கொல்லையில் கொடுவாளைத் தீட்டிக் கொண்டிருந்த கோபி, தாயாரின் அலறலைக் கேட்டுப் பதறிப்போய் உள்ளே ஓடி வந்தான். கீழே ரத்த வெள்ளத்தில் பகவதி புரண்டு கொண்டிருந்தாள். அவளது தலையிலிருந்து ரத்தம் 'குபுகுபு'வென்று கொட்டிக்கொண்டிருந்தது.

கையிலே பளபளத்துக் கொண்டிருந்த அரிவாளை வீசி எறிந்து விட்டு "அம்மா!" என்று அலறியவண்ணம் கோபி தன் தாயாரது தலையை இறுகப் பிடித்துக் கொண்டான். ரத்தம் வீணாகாமல் தன் தோளிலிருந்த துண்டால் வெட்டுண்ட பாகத்தை அழுத்திப் பிடித்துக் கொண்டிருந்தான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் கண் விழித்த பகவதி தன் மகனைத் துரிதப்படுத்தினாள்.

"மகனே, கோபி! வேகம் நின்றே ஏழெட்டு பெட்டைக் கோழிக் குஞ்சுகளையும் எடுத்தோண்டு, குஞ்சன்னனி மரக்காயருடே பெரமடத்தேக்கு ஓடிப்போ... அவிடே யாரோ ஒரு ஆளுனெ, 'மூர்க்கன்' பாம்பு கடிச்சுக் களஞ்ஞு... தாமஸிக்காதே ஓடிப்போ... ஓடிப்போ" என்று துரிதப்படுத்தினாள்.

மூர்க்கன் என்பது மலையாளப் பிரதேசத்தில் தோட்டம் துரவுகளில் சகஜமாகக் காணப்படும் ஒரு வகைக் கொடிய விஷப் பாம்பு. அது ஒரு மனிதனைத் தீண்டிவிட்டால் அதன் பிறகு அந்த மனிதன் பிழைப்பது அரிதுதான். அதற்கு ஒரே ஒரு வைத்தியம் உண்டு. — கடிபட்டவனுக்கு ஆயுசு கெட்டியானால் அருகில் எங்கேயாவது கோழி வளர்ப்பு இடம் இருக்கும்.

சட்டென்று ஒவ்வொரு பெட்டைக் கோழியாகக் கொண்டு வந்து பாம்பு கடித்த கடிவாயில் கோழியின் அடிவயிற்றை வைத்துப் பிடித்துக் கொள்ளுவார்கள். அந்தக் கோழி தன் அடிவயிற்றால் மனிதன் உடலிலிருக்கும் விஷத்தை உறிஞ்சும். உடனே அது இறக்கும். இப்படிப் பலப் பல கோழிகள் விஷம் இறங்கும்வரை தேவைப்படும். அந்த உதவிக்குத்தான் பகவதி இப்போது தன் மகனைக் கோழிகளுடன் செல்லத் தூண்டினாள். ஆனால் கோபி தன் தாயின் அருகிலிருந்து அசையவேயில்லை.

சட்டென்று உத்தரத்திலிருந்தும், கதவிலிருந்தும், ஜன்னலிலிருந்தும் 'பூச்சைக்கூடை' பிய்த்துக் கொண்டு வந்து தன் தாயின் நெற்றியில் வைத்து அமுக்கி, ரத்தத்தைக் கட்டுப்படுத்த இன்னும் தனக்குத் தெரிந்த என்னவெல்லாமோ செய்து கொண்டிருந்தான்.

மீண்டும் மகன் தன் அருகிலேயே இருப்பதைக் கண்ட பகவதி, "அடா....இனியும் நீ இவிடே இருந்து போயில்லியோ?" என்று கேட்டு வெறி பிடித்தவள்போல் அவனை உதறிக் கொண்டு எழுந்திருக்க முயன்றாள். ஆனால் அவளால் தள்ளவில்லை.

"அம்மா... நின்னே இவிடே இங்ஙனே விட்டுமச்ச, ஞான் போவு இல்லா. எட்டடியோ, பத்தடியோ மூர்க்கன் யாரையோ எந்நினெ கடிச்சால் எனிக்கு எந்து? ஞான் நினக்கு வைத்தியரே விளிச்சோண்டு வரான் போவுன்னு!"

பகவதி இரும்புப் பிடியாக மகன் கையைப் பிடித்து இழுத்து நிறுத்தினாள்.

"அடா.... நினக்கு அம்மே வேணோ வேண்டியோ? பாம்பு கடிச்ச ஆளு, யாரோணென்னு, நீ அறியுமோ? அடா.... அது நின்றே அச்சனு. கோழியேயும் எடுத்தோண்டு ஓடிப் போடா — நீ இப்பொழே போயில்லங்கில் ஞான் ஈ வெட்டுக் கத்தி கொண்டு, என்றே தலையே அறுத்துக் கொள்ளும்."

சட்டென்று அவள் தரையில் கிடந்த அரிவாளைக் கையில் எடுத்துக் கொண்டாள். கோபி அப்படியே ஒரு கணம் வெலவெலத்துப் போய்ச் சிலையாக நின்று விட்டான்.

யாரை அவன் வாழைக் குலையைச் சீவி எறிவது போல் சீவி எறிய வேண்டும் என்று விவரம் தெரிந்த நாள் முதல் கங்கணம் கட்டிக் கொண்டிருந்தானோ, அவருக்கே அவன் உயிர்ப் பிச்சையளிப்பதா? தன் தாய்க்கு அவர் செய்த துரோகத்துக்குத் தெய்வத்திடமிருந்து தப்பித்துக் கொள்ள முடியாமல் அரவம் தீண்டிச் சாகப் போகிறவருக்குத் தன் கையினாலேயே உயிரூட்டுவதா?

'நிச்சயம் முடியாது. அதைவிடத் தன் தாயார் அவன் கையிலிருக்கும் அரிவாளால் தன்னைக் கண்ட துண்டமாக வெட்டிப் போட்டாலும் போடட்டும்.' அது அவனுக்குப் பிடித்தது.

"அம்மே... ஞான் போவு இல்லா."

"அட துரோகி... எந்தடா பறஞ்ஞ? நீ போவு இல்லா....அல்லோ? வேண்டா. இதோ ஞான் போவாம். இனி நீ என்ற மகனுமல்ல- ஞான் நினக்குத் தள்ளயு (தாயு)மல்ல."

எங்கிருந்துதான் அவளுக்கு அப்போது அப்படியொரு தெம்பு வந்ததோ! பத்திரகாளி மாதிரி ரத்தம் வழிந்தோடும் முகத்தோடு கூடையைத் தூக்கி எழுந்துக்

# இருமலை அகற்றுக

# இருமல்

அகல விரைவான, கெடுதலற்ற, நிச்சயமான நிவாரணி

# க்ளைகோடின்

## டெர்ப் வசாகா

இந்த ஆறு காரணங்களால், க்ளைகோடின்
இருமலுக்கு சிறந்த நிவாரணி:




1. எந்தவிதமான இருமலுக்கும், எப்பொழுதும் சிறந்தது
2. மருத்துவர்களால் அனுமதிக்கப்பட்ட சரியான பார்முலா
3. சிறுவரும் பெரியோரும் விரும்பும் இனிய சுவை
4. சிபார்சு செய்யப்பட்ட அளவில் உட்கொண்டால் கெடுதல் செய்யாதது
5. 4-வித சிக்கனமான சைசுகளில் கிடைக்கிறது
6. அலம்பிக்கின் நம்பகமான தரம்

Alembic

**30 வருடங்களுக்கு மேலாக இருமலுக்கு வீட்டிலேயே குணமளிக்கும் நிவாரணி**

GTV 1282 TAM EVEREST

கோழிக் குஞ்சுகளின் காலைப் பிடித்துத் தூக்கினான்.

"நடாய்" என்று கோபி அவன் காலில் வந்து விழுந்து, அந்தக் கோழிகளைத் தன் கையில் சேர்த்துப் பிடித்துக் கொண்டான்.

"அம்மே... இதோ ஞான் போகுன்னு. நினக்கே இல்லாத்தது எனிக்கெந்து? ஆ பாபிக்கு இப்பொழுங்கிலும் என்றெ பொன்னு அம்மெயுடெ நெஞ்சு அறியட்டே!"

—கூறியவன் பதிலுக்குக் கூடக் காத்திருக்கவில்லை. கைகளில் கோழிக் குஞ்சுகளுடன் பருந்தைவிட வேகமாகப் பறந்து சென்று குஞ்சுக்கண்ணி மரக்காயருடைய தோட்டத்தை அடைந்தான்.

அங்கே...!

தம்முடைய நிலத்தை மரக்காயருக்குப் பேச வந்த இடத்தில் பாம்பு கடிபட்ட ஒற்றப்பாலம் மைனர் பேச்சு மூச்சு இல்லாமல் மல்லாந்து கிடந்தார். சுற்றிலும் ஆட்கள் பேச்சு மூச்சில்லாமல் நின்றுகொண்டிருந்தனர். முழங்காலுக்கு மேல் விஷம் ஏறாமல் இருக்கப் பலமாக ஒரு கட்டுப் போடப்பட்டிருந்தது.

கோழிக் குஞ்சுகளோடு அங்கு வந்து சேர்ந்த சிறுவனைக் கண்டதும் அங்கிருந்த அனைவருக்கும் கடவுளையே நேரில் கண்டு விட்டது போலிருந்தது.

எல்லோரும் வைத்த கண் வாங்காமல் அழகே உருவான அந்தச் சிறுவனையே பார்த்த வண்ணமிருந்தனர். வேறு சிலர் மைனரையும் அவனையும் மாறி மாறிப் பார்த்தனர். அதில் ஏதோ ஓர் அதிசயம் இருப்பதை அவர்கள் தேடினர். அவர்கள் விஷயம் அறிந்தவர்கள்.

கோபியின் ஆறு கோழிகளின் உயிரையும் குடித்துவிட்டு மைனரின் விஷம் இறங்கியது.

"யார் இந்தப் பையன்? தக்க சமயத்தில் வந்து உயிர்ப் பிச்சை கொடுத்தானே..." என்கிற அனைவருடைய சந்தேகத்தையும் பகவதியின் சிநேகிதி பாருக்குட்டிதான் வந்து விளக்கினாள்.

"இது... மோட்டுவிளை பகவதியுடெ மகனாணு!" அவளுடைய குரலில் இதைக் கூறும்போது ஒருவிதப் பெருமிதம் பொங்கி வழிந்தது.

மைனரின் கண்களோ தனக்கு உயிர்ப் பிச்சை அளித்த சிறுவனையே துழாவியது. ஆனால் அவன் அங்கிருந்தால்தானே! காரியம் முடிந்ததும் தாயைக் காணச் சிட்டாய்ப் பறந்தோடி விட்டான்.

பிறகுதான் அவன் யார் என்பதை மைனருக்கும் பாருக்குட்டியே விளக்கினாள். "பகவதி" என்ற சொல்லைக் கேட்டதும் மைனர் ஒரு துள்ளுத் துள்ளி எழுந்திருந்தார். அத்தனை நேரம் விஷம் பரவிக் கிடந்த உடம்பில் அந்தப் பெயரைக் கேட்டதும் அமிர்தம் பாய்ந்ததைப் போல் உடனே புதுத் தெம்பு அவர் உடலில் பரவியோடியது.

மைனரைத் தொடர்ந்து ஒரு கூட்டமே சென்றது, அவர்களைப் பார்க்க. ஆனால் பகவதியின் வீட்டினுள் அடியெடுத்து வைத்த போது கோபியின் பெரும் அழுகுரல்தான் அவர்களை வரவேற்றது.

தொண்டை நரம்புகளே வெடித்துவிடும்படி தன் தாயின் தலைமாட்டில் நின்று கோபி பெரிதாகக் கதறிக் கொண்டிருந்தான். பகவதியுடைய அன்பு உள்ளத்தால் கவரப்பட்ட அக்கம் பக்கம் உள்ளவர்கள் அனைவரும் அங்கு வந்து கூடி அழுத வண்ணம் இருந்தனர்.

"மண்டை பிளந்து விழுந்த தன் தாயாருக்கு அருகில் இருந்து முதல் உதவிகூடச் செய்ய முடியவில்லையே. அதற்குக்கூடத் தன்னைக் காத்திருக்க அனுமதிக்காமல் யாரோ ஒரு துரோகியைக் காப்பாற்றத் தன்னைத் துரத்திவிட்டாளே தன் அருமைத் தாய்" என்று ஆறுதலே பெற முடியாமல் முகத்திலே அறைந்து கொண்டான் கோபி.

ரத்த வெள்ளத்தில் புரண்டு கிடக்கும் பகவதியையும் அருகில் இருக்கும் மகனையும் மாறி மாறிப் பார்த்தார் மைனர். புத்திர பாசம் அவர் உள்ளத்தைச் சல்லடைக் கண்களாகத் துளைத்தது. "இத்தனை நாட்களுக்குப் பிறகு பகவதியை இந்த நிலையிலா சந்திக்க வேண்டும்?" என்று அவர் மனம் கலங்கியது. தம்மையும் மீறிப் "பகவதி!" என்று அலறிய வண்ணம் அவள் அருகில் சென்றார்.

மறு கணம்...?

தரையிலே கிடந்த அரிவாளைப் பாய்ந்து எடுத்துக் கொண்ட கோபி அந்த வீடே அதிரும் வண்ணம் கத்தினான்.

"தொடாதே...!"

மைனர் அப்படியே ஒரு கணம் பிரமித்து நின்றுவிட்டார். ஆவேசம் வந்தவனைப் போல் கோபி கூவினான்.

"என்றெ பொன்னு அம்மையைக் கொன்ற மகாபாவி; நின்றெ பாபக் கரங்களால் ஆ தெய்வத்தினெ தொடாதே."

"கோபி.. அங்கத்து யாராணென்னு அறியுமோ...? நின்றெ அச்சனாணு!" என்று ஒரு பெரியவர் விளக்கினார்.

"எனிக்கு யாரும், ஏதும் பறஞ்சு கொடுக்கண்டா." கோபி சீறி விழுந்தான்.

"அடா, நின்னெ அத்தேகம் பங்களாவுக்கு விளிச்சோண்டு போவான் போகுன்னு."

"ஞான் யாரு கூடேயும் வரான் தயாராயில்லா. நிங்ஙளெல்லாம் இப்போழே இவிடந்து ஓடிப்போய்க் கொள்ளணும். அல்லங்கில் நிங்கள் அத்தனெ பேரையும் ஞான் வெட்டிக் கொல்லும்." வெறி பிடித்தவனைப் போல் அரிவாளைக் கோபி உயர்த்தினான்.

மறு கணம் உயிரின் மேல் ஆசை கொண்ட உயிர்கள் அனைத்தும் தங்கள் தங்கள் உடலைச் சுமந்தவண்ணம் கொல்லையாலும் வாசலாலும் ஓடி மறைந்தன. — குடிசையினுள் ஒரே ஒரு உயிரும், ஒரே ஒரு உயிரற்ற உடலும் தான் எஞ்சின. கோபி கையிலிருந்த அரிவாளை வீசி எறிந்தான். தன் எண்ணம் ஈடேறாத வருத்தம் இப்போது அவனுக்கு இல்லை. அதைவிடத் தன் தாயின் இறுதி விருப்பத்தைப் பூர்த்தி செய்துவிட்ட ஆத்ம திருப்தியே அவன் முகத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

# துணையான உதவிகள்

புகழ்பெற்ற போலிகள்



ஆல்பேர்ட் பிறக்கும்போதே முப்பத்தி ஐந்து வயதுக் குழந்தையாகப் பிறந்தான்! ஆச்சரியமாக இருக்கிறதல்லவா? ஆம்! அதற்குப் பொறுப்பாளி 1943ம் ஆண்டில் ஜெர்மனியில் ஓரிடத்தில் பிரிட்டிஷ் கைதிகளின் முகாமில் இருந்த ஜான்தான்! ஜான் அந்த முதிர்ந்த குழந்தை ஆல்பேர்ட்டின் அருமைத் தந்தை! மார்லாக் 'ஓ' (Marlag O) என்னும் கடற்படைக் கைதிகளின் முகாம் தான் அவன் பிறப்பிடம்!

மார்லாக் 'ஓ' கடுமையான ஜெர்மானியக் காவல் நிறைந்ததொரு கைதி முகாம். சுமார் நூறு கஜ நீள அகலமுள்ள சதுர மணற்பரப்பில் நிர்மாணிக்கப்பட்டிருந்தது. பத்தடி ஆழம் தோண்டுவதற்கு முன்பே நீர் பொங்கி வரும் பிரதேசமும்கூட. சுற்றிவர பலமான மின்சாரம் பாய்ச்சிய முள்வேலி. முள்வேலிக்கு வெளியே ஆழ அகலமான ஓர் அகழி. உள்ளேயிருக்கும் கைதிகள் யாரும் பூமிக்கடியில் சுரங்கம் தோண்டித் தப்பித்து விடலாம் என்று கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாத நிலை. வெளியே எப்போதும் ஜெர்மானியக் காவலர்கள். இரவு வேளையில் கைதிகள் தங்கள் தாற்காலிகக் குடிசைகளிலிருந்து வெளிவர முடியாதபடி முரட்டு நாய்கள் வேறு அவிழ்த்துவிடப் பட்டன. இரவு முழுதும் ஒளிய மறைய இருட்டு என்பதற்குக் கொஞ்சம்கூட இடமில்லாமல் பிரகாசம் மிக்க மின்விளக்குகள் ஒளி வீசிக் கொண்டிருந்தன.

அங்கு சிறை வைக்கப்பட்டிருந்த பிரிட்டிஷ் கடற்படைக் கைதிகளுக்கு, வெளி உலகைப் பார்க்க ஒவ்வொரு வியாழக்கிழமையும் சில மணி நேரங்கள் சந்தர்ப்பம் கிடைக்கும். அந்தக் கைதிகள் முகாமில் ஸ்நான வசதி கிடையாது. ஆகவே ஒவ்வொரு வியாழக்கிழமையும் அங்குள்ள யுத்தக் கைதிகளை, பக்கத்துக் குன்றின் மீது நிர்மாணிக்கப்பட்டிருந்த ஸ்நான அறைகளுக்கு பலமான காவலுடன் அழைத்துச் சென்றுதிருப்பிக்கூட்டி வந்தார்கள். ஷவர்பாத் வசதி அங்குதானுண்டு!

வரிசைக்கு மூன்று பேர் வீதம் கைதிகள் வரிசை வரிசையாக நடக்க வேண்டும். இரு பக்கமும் துப்பாக்கி பிடித்த காவலாளிகள்.

முகாமை விட்டுக் கிளம்பும் போது, எத்தனை கைதிகள், எத்தனை வரிசைகள் என்று முகாம் வாயிலில் நிற்கும் காவலாளி, அவர்கள் கூடச் செல்லும் காவல் படைத் தலைவனுக்குக் குறித்துக் கொடுப்பான். அந்தத் தலைவன் அந்த எண்ணிக்கையை ஜபித்துக் கொண்டே நடப்பான். ஸ்நான அறைகளுக்குள் கைதிகளை அனுப்பிவிட்டுச் சுற்றிக் காவல் நிற்பார்கள். ஸ்நானம் முடிந்தவுடன் அவர்களை மீண்டும் பழைய வரிசையில் மூவர் மூவராக நிறுத்தி அழைத்து வருவார்கள். வாயில் காப்போன் மீண்டும் சரிபார்த்து உள்ளே அனுப்புவான்.

வியாழக்கிழமைகளில் வெளி உலகைப் பார்க்கும்போது தப்பி ஓட அந்தக் கைதிகள் உள்ளங்களிலே வெறி தோன்றுவது சகஜம். ஆனால் ஜெர்மானியக் காவலர்கள் சவு இரக்கமற்றவர்கள்.

ஆரம்ப காலத்தில், ஸ்நானத்துக்குப் புறப்படும் கைதிகளையும் திரும்பி வரும் கைதிகளையும் கடுமையாகவே காவலர்கள் சோதனைக்குள்ளாக்கிக் கொண்டிருந்தார்கள். ஆனால் நாளடைவில் அவர்களுக்கே சுவாரசியம் குன்றி விட்டது. தலையை மாத்திரம் கவனமாக எண்ணுவதுடன் அவர்கள் நிறுத்திக் கொண்டார்கள்.

இந்த நேரத்தில்தான் ஜானுக்கு அந்த அபூர்வ யோசனை தோன்றியது. முகாமுக்குள் படிக்கக் கிடைத்த பத்திரிகைகளை யெல்லாம் தண்ணீரில் ஊற வைத்துப் பிசைந்து ஒரு சிறிய மணல் மூட்டை மீது தடவிக் காய வைத்து ஒரு மனிதத் தலையின் உருவைக் கொடுத்தான். ஓவியப் பித்தர்களான சில முகாம் கைதி நண்பர்களிடம் வண்ணக் கலவைகள் வாங்கி அந்தத் தலையில் தடவி மனித வண்ணத்தைத் தோற்றுவித்தான். பிங்பாங் பந்துகளின் துண்டங்களைப் பக்குவமாகக் கண்களாகப் பதித்தான். அதற்கான புருவங்களை அவன் அமைத்த விதம், அந்தக் கண்களில் எப்போதும் ஒருவித அசதியையும் ஏக்கத்தையும் நிலவச் செய்தது. முகாமிலிருந்த அத்தனை கைதிகளின் பார்வையிலும் அந்த நிலைதானே யிருந்தது! சுரத்தில்லாத கருவிழிகளையும் அந்தப் பிங்பாங் பந்துப் பகுதிகளில் தோற்றுவித்தான். பல நண்பர்களின் கிராப்புத் தலைகளிலிருந்து கொஞ்சம் கொஞ்சம் ரோமத்தைக் கத்திரித்து, அந்தப் பொம்மைத் தலைக்கு அழகான கிராப்பை அணிந்தான். அடர்த்தியான இயற்கையான புருவங்களும் அமைந்தன. உதடுகளில் ஒரு சிகரெட்டையும் பொருத்தினான். அந்தப் பொம்மைத் தலை, பொம்மைத் தலை என்று நம்ப முடியாதபடி உயிர்க் களை பெற்றுவிட்டது. ஜானுக்கும் அவன் நண்பர்களுக்கும் தங்களிடையே ஒரு புது நண்பன் வந்து சேர்ந்ததுபோல் பிரமை!

இரண்டு நீளக் கம்பிகளைச் சிலுவைபோல் வைத்து மேலே அந்தத் தலையைப் பொருத்திப் பக்கவாட்டில் பெரிய கோட்டை மாட்டினான். அசல் மனிதனாகிவிட்டது அந்தப் பொம்மை! ஆல்பேர்ட் என்ற நாமகரணத்தையும் பெற்று விட்டது. கால் பகுதிக்கும் இரண்டு கம்பிகளைச் சரியான கோணத்தில் வைத்துப் பொருத்திக் கால்சட்டையை மாட்டினான். பழைய பூட்களில் களிமண்ணை நிரப்பி அந்தக் கம்பிகளைக் குத்தி விட்டான். ஆகவே ஆல்பேர்ட் ஆறடி உயர ஆளாக நின்றதில் ஆச்சரியமில்லை. இரண்டு நிமிடங்களில் ஆல்பேர்ட்டை அக்கு வேறு ஆணி வேறாகக் கழற்றி விடலாம்; அதேபோல் மாட்டியும் விடலாம்.

ஆல்பேர்ட்டைத் தோற்றுவித்து விட்டுத்தான், ஜான், அவனுடைய பிறப்பின் உபயோகத்தை வெளியிட்டான். வியாழக்கிழமையன்று ஸ்நான அறைக்குக் கிளம்பும் போது ஆல்பேர்ட்டைக் கழற்றி ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு பாகமாக ஒப்படைத்து அவர்கள் அந்தப் பாகங்களைத் தங்கள் உடைகளுக்குள் ஒளித்து எடுத்துக் கொண்டு போகவேண்டும். ஸ்நான வேளையில் தப்பிக்கத் தீவிரமாக ஆசைப்படும் கைதி ஸ்நான அறைகளுக்குப் பக்கத்தில் உபயோகத்திலில்லாமல் சிதிலமடைந்திருக்கும் ஓர் இயற்கை வசதி அறையில் பதுங்கிக் கொள்ள வேண்டும். அந்த நேரத்தில் ஜான், ஆல்பேர்ட்டின் பாகங்களைச் சேர்த்து முழு மனிதனாக்கி விடுவான். இரண்டாவது, மூன்றாவது வரிசைகளில் ஆல்பேர்ட்டை நடுவில் நிறுத்தி அவனுடைய கோட்டின் இரண்டு கைகளையும் இரு பக்கங்களிலுமுள்ள கைதிகள் தங்கள் தோள்களில் போட்டுக் கொள்வார்கள். ஆல்பேர்ட் உற்சாகமாகத் தன் நண்பர்களுடன் பேசிக் கொண்டு வருவதுபோலத் தோற்றம் அளிப்பான். அவன் கால்கள் தரையில் தேய்ந்து ஒழுங்கற்ற முறையில்தான் வரும். ஆனால் ஜான் அதைப் பற்றிக் கவலைப்படவில்லை. ஏனென்றால் இப்போதெல்லாம் காவலர்கள் தலைகளை எண்ணுவதில்தான் அக்கறை காட்டுகிறார்கள்!

ஸ்நானம் முடிந்து கைதிகள் முகாமுக்குள் வரும்போது அவர்களின் தலைகள் சரியாக இருந்து விட்டால் காவலர்கள் சும்மா இருந்து விடுவார்கள். தப்பிய கைதி சற்றுச் சாவகாசமாக அங்கு இங்கு தலைமறைவாக இருந்து ஜெர்மானிய எல்லையைத் தாண்டி விடலாம்!

அவ்வப்போது கம்பிகளைப் பொருத்தி ஆல்பேர்ட்டை உருவாக்கித் தன் நண்பர்களுடன் சேர்த்து நடை பழக்கினான் ஜான்.



அடுத்த வியாழக்கிழமை வெளியேற விரும்பிய கைதி நண்பருக்குத் தேவையான போலி தஸ்தாவேஜுகள் முகாமிலேயே தயாரிக்கப்பட்டுத் தயாராயின.

அடுத்த வியாழக்கிழமையன்று மழை பெய்ய வேண்டுமே என்று அந்த முகாமிலுள்ள அனைவரும் வேண்டிக் கொண்டார்கள். மழை பெய்தால்தான் அவர்கள் தங்கள் 'ஓவர்கோட்டுகளை' அணிந்துகொண்டு கிளம்ப முடியும். ஓவர்கோட்டுகளுள்தான் 'ஆல்பர்ட்டை' ஆளுக்குக் கொஞ்சமாக ஒளித்துக் கொண்டு போக முடியும்!

எதிர்பார்த்த வியாழக்கிழமையும் வந்தது. ஆனால் மழைக்கான அறிகுறிகள் கொஞ்சமும் இல்லை. வானத்தில் உலாவிய ஒன்றிரண்டு மேகங்களைச் சாக்காகக் கொண்டு கைதிகள் ஓவர்கோட்டுகளை அணிந்து கொண்டே கிளம்பினார்கள்.

முதன் முதலில் ஆல்பெர்ட்டின் உதவியைப் பெறும் வாய்ப்புப் பெற்ற பிளான்டி முன்னேற்பாடாகத் தன் ஓவர்கோட்டினடியில் சாதாரண 'சிவிலியன்' உடை அணிந்து சென்றிருந்தான். ஸ்நான அறைகள் கட்டடத்துக்குள் சென்று காவலர்கள் பார்வையிலிருந்து மறைந்ததும், பிளான்டி தன் ஓவர்கோட்டைக் கழற்றிக் கொடுத்துவிட்டு, சிதிலமடைந்த பக்கத்து இயற்கை வசதி அறையில் புகுந்து ஒளிந்து கொண்டான். ஜானும் அவன் மற்ற நண்பர்களும் சில நிமிஷங்களில் ஆல்பெர்ட்டை உருவாக்கி அந்த ஓவர்கோட்டை மாட்டி விட்டார்கள். வெளியே வரும்போது காவலர்கள் ஊன்றிக் கவனித்துவிடக் கூடாது என்ற முன்ஜாக்கிரதையுடன் ஆல்பர்ட்டை நடு வரிசையில் நடுவாக நிறுத்திப் பக்கங்களில் இருவர் நின்று கொண்டார்கள். முன்வரிசையில் நின்றவர்கள் ஏதோ தமாஷ் கதைகள் சொல்லிக் காவலர்கள் கவனத்தைக் கலைத்ததில் அவர்கள் கைதிகளின் தலைகளை எண்ணியபடி, திருப்திப்பட்டுக் கொண்டு நடந்தார்கள்— ஆல்பர்ட் தலையையும் சேர்த்துத்தான்!

முகாமுக்குள் நுழையும்போதும் இரு பக்கத்திலுமிருந்தவர்கள் ஆல்பர்ட்டுடன் சுவாரசியமாகப் பேசுவதுபோல் நடித்துக் கொண்டு வந்தார்கள். ஆல்பர்ட்டின் தலையும் அவ்வப்போது ஆடிக் கொண்டே வந்தது!

எந்தவித ஆபத்துமில்லாமல் பிளான்டியைத் தவிர மற்றவர்கள் உள்ளே வந்து விட்டார்கள். ஆல்பர்ட் உதவி செய்ய ஆரம்பித்து விட்டான். (பிளான்டி இரண்டு நாட்களுக்குப்பிறகு ஹிட்லரின் ரகசியப் போலீஸாரிடம் சிக்கிக் கொண்டாலும் அவன் மார்லாக் 'ஓ' முகாமிலிருந்து தப்பி வந்தான் என்று தெரியாததால் அந்த முகாமுக்குத் தகவல் எட்டவில்லை.)

அடுத்த வியாழக்கிழமை பிட்ச் தப்புவதாக ஏற்பாடு. ஆனால் பிட்ச் அதிருஷ்டக் கட்டை. அன்று அந்த முகாம் காவலாளிகளுக்கு அளிக்கப்பட்ட உணவில் ஏற்பட்ட கோளாறின் காரணமாக அவர்களுக்கு வயிற்று நோவு. அஜீரணம் தோன்றிவிட்டது. கடுகடுப்புடன் அவர்கள் ஸ்நான அறைக் காவலுக்குக் கிளம்பினார்கள். பிட்ச் பிளான்டியைப் போலவே குறிப்பிட்ட இடத்தில் பதுங்கிக் கொண்டான். ஆல்பர்ட் உருவானான். ஸ்நானம் முடிந்து வெளியே வந்த கைதிகளின் தலை எண்ணிக்கை சரியாக இருந்தது!

இந்த நேரத்தில்தான் எதிர்பாராத விபரீதம் நிகழ்ந்தது. வயிற்று உபாதையினால் உந்தப்பட்டுக் காலியான இயற்கை வசதி அறைக்குள் நுழைந்த ஒரு காவலாளியின் கண்களுக்கு அங்கு பதுங்கியிருந்த பிட்ச் தென்பட்டு விட்டான்! அவ்வளவுதான்; அவன் அகப்பட்டுக் கொண்டு விட்டான்!

வரிசையிலிருந்த கைதிகளின் எண்ணிக்கை சரியாக இருந்தது. அப்படியானால் தப்பி ஓட முயன்ற ஆசாமி எப்படி அங்கு வந்திருக்க முடியும்? காவல் படைத் தலைவனுக்கு ஒரே கோபம். முகாம் வாயிலில் இருக்கும் காவல் தலைவனுடன் கலந்து நடவடிக்கை எடுக்கக் கைதிகளை முன்னால் நடக்க உத்தரவிட்டான். ஆல்பர்ட்டும் நடு வரிசையில் நடந்தான்.

முகாம் வாயிலில் தலைவன் இந்த எண்ணிக்கைக் குளறுபடிக்கு, ஒவ்வொரு கைதியையும் சோதனையிட்டு முடிவு காண விரும்பினான். அவன் உத்தரவு வெளியான கணத்திலேயே ஆல்பர்ட்டின் பக்கத்திலிருந்தவர்கள் ஆல்பர்ட்டைக் கலைத்து விட்டார்கள். பாகங்கள் ஓவர் கோர்ட்டுக்குள் மறைந்தன. சோதனைக்கு முன், வரிசைகளை எண்ண ஆரம்பித்த காவலர்கள் திகைத்தார்கள். அகப்பட்டவனைச் சேர்த்தும் புறப்பட்ட எண்ணிக்கை சரியாக இருந்ததே!

ஆனாலும் சோதனை நடப்பது தடைபெறவில்லை. முன் வரிசை நபர்கள் தீவிர சோதனைக்குள்ளானார்கள். ஜானுக்குப் பயம் பிடித்துக் கொண்டது. தன் மடியிலிருக்கும் ஆல்பர்ட் தலையை யாரும் பார்த்துவிடக் கூடாதென்று அதை மின்னல் வேகத்தில் முகாமுக்குள் எறிந்துவிட்டான். புல்வெளியில் குதித்துத் தாவும் முயல்போல அந்தப் பொம்மைத் தலை பாய்ந்தாலும், ஜெர்மானியக் காவலர்கள் கண்களில் அது பட்டு விட்டது. பாய்ந்து போய் அதை எடுத்து வந்தார்கள். எண்ணிக்கைக் குளறுபடியின் காரணம் அவர்களுக்குப் புரிந்துவிட்டது!

அப்புறம் அவர்கள் முகாமின் பாதுகாப்பைப் பலப்படுத்தினாலும், ஆல்பர்ட்டுடன் இணைந்திருந்த கலைத் திறமையைப் பாராட்டத் தயங்கவில்லை. அவர்களே ஆல்பர்ட்டை மீண்டும் உருவாக்கி அவன் தலையில் ஒரு ஜெர்மானியத் தொப்பியை வைத்துத் தங்கள் தலைமை ஸ்தானத்துக்கு அனுப்பி வைத்தார்கள். அங்கு சில நாட்கள் ஜோராகக் கட்டுப்பிடித்து உட்கார்ந்திருந்த ஆல்பர்ட் அப்புறம் நிரந்தரமாக பெர்லின் மியூஸியத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

'ஜெர்மானியர்களின் அறிவுத் திறமை ஒன்றும் எங்கள் முயற்சியைப் பாதிக்கவில்லை. அவர்களுடைய அஜீர்ணம்தான் பாதித்தது!' என்று அந்த முகாமில் உள்ளவர்கள் அங்கலாய்த்துக் கொண்டதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை!

— திருவேரகத்தான்

# தி மதராஸ் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் லிட்:

**23, நுங்கம்பாக்கம் ஹைரோடு * (போன்: 82026) * சென்னை-34**

**ரூ. 50,000/- வரை செய்யப்படும் பிக்ஸட் டிபாஸிட்டுகள் கீழ்க்கண்ட கவர்ச்சிகரமான விகிதங்கள் ஏற்றுக்கொள்ளப்படும்**

| | | | |
|---|---|---|---|
| 1 வருடமும் | அதற்கு மேலும் 2 வருடங்களுக்குக் குறைவாக | 6¼% | வருடத்திற்கு |
| 2 வருடங்களும் | அதற்கு மேலும் 3 வருடங்களுக்குக் குறைவாக | 6½% | ,, |
| 3 வருடங்களும் | அதற்கு மேலும் 5 வருடங்களுக்குக் குறைவாக | 6¾% | ,, |
| 5 வருடங்களும் | அதற்கு மேலும் 7 வருடங்களுக்குக் குறைவாக | 7¼% | ,, |
| 7 வருடங்களும் | அதற்கு மேலும் | 7½% | ,, |

**பிக்ஸட் டிபாஸிட்டுகளுக்காக வாங்கப்படுவது குறைந்தபக்ஷம் ரூ. 5000/-**

புதிய தொழில்களை ஆரம்பிக்கவும், பழைய தொழில்களை விஸ்தரிக்கவும், தேவையான நிதியை உதவ, சென்னை அரசாங்கம், மதராஸ் இண்டஸ்ட்ரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷனை ஆரம்பித்துள்ளது. கார்ப்பரேஷன் ஏற்றுக் கொள்ளும் பிக்ஸட் டிபாஸிட்டுகளின் அசலுக்கும் வட்டிக்கும் சென்னை அரசாங்கம் நிபந்தனையின்றி உத்தரவாதம் அளித்திருக்கிறது.

D. V. நரசிம்ஹன், M. A., C. A. I. I. B., காரியதரிசி

---

# ஜலதோஷமா?

# பெப்ஸ்

## சாப்பிடுங்கள்!

பெப்ஸ் வில்லைகளை மெதுவாகச் சுவையுங்கள். குணமளிக்கும் ஆவிபோன்ற அதன் சத்து உடனே வேலை செய்யத் தொடங்குவதை உணரலாம் — சளிச்சவ்வுகளுக்கு ... பகுதிகளுக்கு இதமூட்டுகிறது. ... பரவுவதைத் தடுக்கவும் உதவுகிறது. விரைவில் நீங்கள் உடல்நலம் பெறுகிறீர்கள்.

* தொண்டைப் புண்ணுக்கும் பிராங்கைடிஸுக்கும் நிச்சய நிவாரணம்.
* குழந்தைகளுக்கு ஆபத்தில்லாதது.
* எல்லா மருந்து வியாபாரிகளிடமும், பலசரக்குக் கடைகளிலும் விற்கப்படுகிறது.

# பெப்ஸ்

உடனடி நிவாரணமளிக்கிறது




சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: மெஸர்ஸ் மேஜி & கம்பெனி, தபால் பெட்டி 1902 சென்னை-1

# சுவையான சர்ச்சைகள்

''என்னப்பா! நீ இங்கேயா தங்கி யிருக்கே? இப்போ ஆஃப் டியூட்டி போல யிருக்கு?''

''அடடே! வணக்கம், வணக்கம்! சன் டைக்கார வாத்தியாருல்ல! நீங்ககூட இவ் வளவு பொறுமையா சிரிச்சுக்கிட்டுப் பேசு வீங்களா? உங்களே இந்தச் சிரிச்ச முகத் தோடே நான் பார்த்ததே யில்லையே!''

''உங்க டிரான்ஸ்போர்ட் பஸ்லே ஏறினப் புறம் மனுஷனுக்குச் சிரிப்புக்கூட வருமா, என்ன? நீ எப்போதும் உன் பஸ்லே தொங்கிக் கிட்டு வரப்போ போறப்போதானே என்னைப் பார்த்திருப்பே!''

''என்ன சார் 'உங்க டிரான்ஸ்போர்ட்' என்று அழுத்திச் சொல்றீங்க? நம்ப டிரான்ஸ் போர்ட்டுன்னு சொல்லுங்க!... வாங்க இப் படி உட்கார்ந்து பேசலாம்.''

''ஆமா! பேசத்தான் வேணும்!..ஏனப்பா! இந்த சிட்டி டிரான்ஸ்போர்ட் கண்டக்டர்கள் எல்லாருமே பெரிய சர்வாதிகாரிகள் மாதிரி நடந்துகொள்ளுறீங்களே! இதற்கு எங்கேயா வது உங்களுக்கு டிரெயினிங் கொடுக்கிறாங் களா?... பஸ்களிலே ஏறிட்டா நீங்க சொல் றதுதான் சட்டமாக இருக்கு.''

''என்ன சார் அப்படிப் பொதுப்படையாத் தூக்கி எறிஞ்சு பேசறீங்க? இது ஜனநாயக யுகம்!... உங்களுக்கு என்ன சார் அப்படிக் கண்டக்டர் வர்க்கத்து மேலேயே கோபம்?''

''அப்படிக் கேளு! அவனவன் ஆபீஸுக் குப் போகத் துடியாய்த் துடிச்சு ஸ்டாப்பு களிலே நிற்கிறபோது நீங்க உல்லாசமாக டபுள் விசில் கொடுத்துட்டு வண்டியை நிறுத்தாமப் போறீங்களே! இதனாலே எத் தனை பேர் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கிறீங்க? 'பீக் அவர்'லே கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணி ஏத்திக்கிட்டுப் போனா உங்களுக்கு என்னய்யா குறைஞ்சு போகும்?''

''உல்லாசமாக டபிள் விசில் கொடுத்துட்டுப் போகலே சார்! வேதனையோடேதான் கொடுக் கிறோம். நாங்க என்ன பண்றது? டிரைவர் கண்டக்டரைச் சேர்த்து அறுபத்தி மூணு பேர் ஏறலாம்னு சட்டம். நாங்க ஒண்ணும் தலையை என்றதில்லே! கணிசமாகத்தான் ஏற்றிக் கொள்கிறோம். கால் வைக்கக் கூட இடம் இல்லே என்கிற நிலே வருகிறபோது தான் சார் டபிள் விசில் ஊதறது.''

''இதெல்லாம் கத்தக் கதை! சில சமயங் களிலே ஸ்டாப்பை விட்டு ஐம்பது நூறடி தள்ளிப் போய் நிறுத்தி ஓர் ஆள் இரண்டு ஆட்களை அப்படியே உதிர்த்துத் தள்ளிவிட்டு ஓடறீங்க! அந்தக் காலியான இடத்துக்கு ஸ்டாப்புகளிலே காத்துக்கிட்டு இருக்கிற வங்களை ஏத்திக்கலாமா இல்லேயா?''

''ஏத்திக்கலாம் சார்! ஆனால் இரண்டு பேருக்குப் பதிலா அங்கே நிற்கிற இருபது பேரும் ஒரே பாய்ச்சலாகப் படையெடுப் பாங்க. யாராவது இரண்டு வஸ்தாதுகள் முண்டியடிச்சு உள்ளே நுழைவாங்கள்! உண் மையிலே காத்திருப்பவங்க ஏமாந்து போவாங்க.''

''நல்லா பதில் சொல்றே ஐயா! ஓடறதை விட்டுத் தள்ளு! நிக்கற விஷயத்துக்கு வா! டிக்கட் கொடுக்கிறேன் பேர்வழின்னு பஸ் களை ஓரேயடியா நிறுத்திடறீங்களே? எத்தனை பேர் ரயிலைப் பிடிக்கவோ, ஆஸ்பத்திரிக்குப் போகவோ அவசரப்பட்டுக்கிட்டு இருப் பாங்க? இல்லே! ஆபீஸுகளுக்கு நேரத்திலே போகணும்னு துடிச்சிக்கிட்டு இருப்பாங்க?''

''எங்க வேலைக்கும் சட்ட திட்டம், கட்டுப் பாடு எல்லாம் உண்டு சார்! எங்க இஷ்டம் போல வண்டிக்கு ரைட் கொடுத்துட முடி யுமா? டிக்கட் கொடுக்க ஓர் இடம் நிர்ண யம் பண்ணியிருக்காங்க. அதைத் தாண்டின உடனே செக்கிங் ஸ்டேஜ் வரும். அதற்குள் ளாக நாங்க ஜாடா டிக்கட் கொடுத்தாக ணும். செக்கிங் இன்ஸ்பெக்டர் பார்க்கற போது ஓர் ஆசாமி டிக்கட் வாங்காம உட் கார்ந்திருந்தாலும் எங்க பாடு டேஞ்சர்! அவரு ரிப்போர்ட் பண்ணிப்பிட்டாருன்னு எங்களுக்குக் கிடைக்கிற அன்றாடப் பாட்டா ஒண்ணே கால் ரூபாயிலே மண் விழும். அந்த மாச அட்டெண்டன்ஸ் போனஸிலேயும் கைவைப்பாங்க! இந்த ஆபத்தெல்லாம் வேண்டாம்னுதான் நாங்க ஒழுங்கா டிக் கட்டைக் கொடுத்திட்டு வண்டியை நகத் தறது! கண்டபேனிக்கு நாங்க வண்டியை நிறுத்திடவும் முடியாது. ஒவ்வொரு ரூட் டுக்கும் ரன்னிங் டைம் உண்டு. லேட்டாப் போனா மெமோ கொடுத்துடுவாங்க! பாசஞ் சர்களுக்கு இருக்கிறப்போல் எங்களுக்கும் அவசரம் உண்டு.''

''இப்போ இவ்வளவு நிதானமா விளக்கமாப் பேசறே! ஆனால் பஸ்களிலே வேலை செய்யற போது மாத்திரம் ஏன் கண்டபடி கூப்பாடு போட்டு மரியாதைக் குறைவா நடந்துக்

---

சென்னை நகர கவர்ன்மெண்ட் டிரான்ஸ்போர்ட் பஸ் கண்டக்டர்கள் பிரயாணிகளிடம் மரியாதைக் குறைவாக நடந்து கொள்கிறார்கள்.

குறைகூறுபவர்: திரு பி. எஸ். அனந்தராமன் (அஞ்சல் ஊழியர்)
மறுப்பவர் : திரு இ. போஸ் (டிரான்ஸ்போர்ட் கண்டக்டர்)

---

இறீங்க? உன்னென்னு உன்னைக் குறிப்பாச் சொல்லலே! உன் தோளங்களைத்தான்!''

''சார்! நாங்க பப்ளிக் செர்வண்ட்ஸ்தான். உண்மை! அதற்காக வீட்டிலே சம்பளம் கொடுத்துத் தனிப்பட்ட முறையிலே வைத்திருக்கிற செர்வெண்ட்ஸ் மாதிரி ரொம்பப் பேர் எங்களை நினைச்சுடறாங்க!..... மரியாதைங்கறது ஒன்வே டிராபிக் இல்லே. எதிரும் புதிருமாப் போவது மரியாதை. அதை மறந்துடறாங்க! சில சமயங்களிலே எங்களிலே சிலபேர் பொறுமை இழக்கிறது உண்மைதான். அதற்குப் பொறுப்பு பாஸஞ்சர்கள்தான்! டிரைவர் சீட்டுக்குப் பின்னாலே உட்கார்ந்துட்டு ஓர் ஆசாமி பின்னாலே பார்த்து 'கண்டக்டர்! பாக்கி 'சேஞ்ச்' கொடுப்பா' என்று கூக்குரல் போடுவாரு. ஆசாமி பதினாறு பைசா டிக்கட்டுக்குப். பதினைந்து பைசாவைக் கொடுத்திருப்பாரு. அவருக்கு வரவேண்டியது ஒரு பைசா. அவர் கத்துவதிலிருந்து அவருக்கு என்னவோ ஒன்பது ரூபாய் சில்லறை பாக்கி வரவேண்டியிருப்பது போலக் குரல் கொடுப்பாரு! 'ஒரு பைசாவா இல்லே! நீங்க ஒரு பைசா கொடுங்க! நான் ரெண்டு பைசாவாத் தரேன்' என்று அந்தக் கண்டக்டர் சொன்னா 'பைசாவை அமுக்க இது ஒரு வழி' என்று முணுமுணுப்பாரு. இந்த மாதிரிச் சில்லறை விஷயங்களெல்லாம் மனுஷனுடைய நிதானத்தைக் கொஞ்சம் அசைக்கத்தானே செய்யும்! ஏதாவது சூடாப் பதில் சொன்னால் கண்டக்டர்களே பொல்லாதவங்கன்னு சொல்லிடறீங்க!''

''சும்மா இப்படி எதையாவது சொல்லி மழுப்பாதே பிரதர்! 'முன்னாலே போ, அங்கே நிக்காதே' அப்படி இப்படின்னு உங்களிலே நிறையப் பேர் கூச்சல் போடறது அவங்களுக்கு நல்ல பேரைக் கொடுக்கிறதில்லே. இதமாப் பதமாச் சொன்னா என்ன குறைஞ்சு போகும்?''

''அவங்க அப்படிக் கூச்சல் போடறப்போ கொஞ்சம் நீங்க கவனிச்சுப் பாருங்க! லேடீஸ் சீட்டுக்குப் பக்கத்திலேயே சிலர் நகராமே சத்தியாக்கிரகம் பண்ணிட்டு அசடு வழிய நிற்பாங்க! அவங்களைக் குறிப்பாப் பார்த்து ஏதாவது சொன்னா வம்பு வரும்னு தான் அப்படித் தர்மக் கூப்பாடு போட்டு முன்னாலே தள்றது!

''ஒவ்வொரு டிக்கட்டையும் எச்சிலால் நனைச்சுக் கிழிச்சுக் கொடுக்கிறாங்களே உங்க பிரதர்ஸ்லிலே சிலபேர்! அது எவ்வளவு மனக் கஷ்டமா இருக்கு, தெரியுமா'?''

''அது நூற்றிலே ஒன்னு இரண்டு! தொட்டில் பழக்கம் சுடுகாட்டு மட்டும் என்கிற மாதிரி அந்த நாளிலே பிடிச்ச கெட்ட பழக்கம்! அது நல்லதில்லேதான்! நான் ஒத்துக்கறேன். பாஸஞ்சர்கள் சிலபேர் கிட்டே இருக்கிற கெட்ட பழக்கங்களில் ஒன்றைச் சொல்லட்டுமா? பத்துப் பைசா டிக்கட்டுக்கு ஜம்பமா பத்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுக்கிறாங்க. கையிலேயோ பையிலேயோ சில்லறை இருக்கும். டெரிலின் ஷர்ட் வழியா அது தெரியத்தான் தெரியும். அவங்களுக்குச் சில்லறை பொறுக்கிக் கொடுக்கிற நேரத்திலே நாலு பாஸஞ்சருக்கு டிக்கட் கிழிச்சுக் கொடுத்துட்டு வண்டிக்கு ரைட் கொடுத்திடலாம் இல்லையா!''

''நீ இப்படி விளக்கமெல்லாம் நல்லாத்தான் கொடுக்கிறே! ஆனாலும் ஏன் இந்தப் பாஸஞ்சர்களெல்லாம் கண்டக்டர்கள் எல்லாமே மோசம்னு சொல்றாங்க?''

''அப்படிக் கேளுங்க! எங்களிலே ஒன்னு ரெண்டு கொஞ்சம் மோட்டா ரகம் உண்டு. அவங்களை வைச்சு எல்லோரையும் ஒரேயடியா எடை போட்டுடறாங்க! பாஸஞ்சர்களிலேயும் ஜெண்டில்மேன் பாஸஞ்சர் யாரு, அல்டாப்பு பாஸஞ்சர் யாருன்னு எங்களுக்குத் தெரியும். தினம் தினம் ஒரே ரூட்டில் ஓடி நாங்களும் பாஸஞ்சர் போக்குகளை ஆராய்ந்துதான் வைச்சிருக்கோம். ஆனா நாங்கள் பாஸஞ்சர்கள் எல்லாரையும் ஜாடா மோசம் என்று சொல்றதில்லையே! நீங்க எங்களைச் சொல்றீங்க!''

''பலே பலே! ஏட்டைத் திருப்பறியே!''

''அப்படி இல்லீங்க. நான் சொல்றது என்னன்னா, பாஸஞ்சர்களும் சரியான நேரத்திலே சரியான பஸ் பிடிச்சுச் சரியான சில்லறை கொடுத்துப் பிரயாணம் பண்றதை ஒரு கலையாகக் கத்துக்கொள்ளணும். அவங்களுக்குச் சேவை செய்யறதையே நாங்களும் எங்க கடமையாகக் கொள்ளணும்.''

''அவங்க எந்தெந்த நெருக்கடியிலே என்னென்ன மனநிலையிலே பிரயாணம் செய்றாங்களோ? அதை நீங்க அநுசரிச்சு இதமாக நடந்து கொள்வதை ஒரு கலையாக வளர்க்க வேண்டுமென்பதுதான் எங்க விருப்பம்!''






## அத்தியாயம் 24

# உறக்கமற்ற இரவு

**த**ங்கப்பன் திடுக்கிட்டு விழித்தெழுந்து உட்கார்ந்தபோது தன் மேனி முழுவதும் குப்பென்று வியர்த்து விட்டு நனைந்திருப்பதை உணர்ந்தான்.

தலையை ஒருமுறை குலுக்கி 'உஷ்' என்ற பெருமூச்சுடன் அத்தனையும் கனவுதான் என்று நிச்சயப்படுத்திக் கொண்டான். டவலைக் கழற்றி அதனாலேயே மார்பையும் முதுகையும் துடைத்துவிட்டு நாற்காலிமீது வீழ்ந்தான். தூக்கம் கலைந்தவனாகக் காற்றுாட மொட்டை மாடிக்கு வந்து குறுக்கும் நெடுக்குமாக உலவ ஆரம்பித்தான்.

**உ**ஷாவைக் குறித்து அப்படி ஒரு கனவு - பயங்கரமான கனவு கண்டது அவனை வெகுவாகக் கவலையில் ஆழ்த்திவிட்டது. கனவுகள் ஏதுமற்ற நிம்மதியான நித்திரைதான் ஆரோக்கியமானது என்றும் யாரிடமும் வெளியிட முடியாமல் மனத்துக்குள்ளேயே எதையேனும் அடக்கி வைத்துக் கொண்டிருந்தால் அது நூதனமான கனவாகப் பரிணமிக்கும் என்றும் அவன் எங்கோ படித்திருந்தான். இது சரி என்ற வாதமும் தவறு என்ற கொள்கையும் இருப்பதும் அவனுக்குத் தெரியும்.

அவன் உள்ளத்தில் ஒரு கற்பனை இப்போது எட்டிப் பார்க்க ஆரம்பித்தது. தான் சிறுவனாக இருந்தபோது தன் தாயார் தாமரை தன் செலவுக்குச் சில்லறை எதுவுமே தராததும், 'எப்போது பார்த்தாலும் வீட்டில் பழைய சோறும் வற்றல் குழம்பும்தான்' என்று தான் குறைப்பட்டுக் கொண்டதும், ஒரு சமயம் யானைமீது ஏறி அமர்ந்து டப்பாப் பாட்டுப் பாடி அதற்குக் கூலியாகக் கொஞ்சம் சில்லறை கிடைத்ததும் அதைக் கொண்டு தன் வெகு நாள் ஆசை நிறைவேறும் வகையில் ஹோட்டலுக்குப் போய் மசால்தோசை சாப்பிட்டு வந்ததும் எல்லாம் நினைவுக்கு வந்தன. 'மாசத்துக்கு ஒருதரம் ஒரு நாலணுக் காசை எடுத்து ஓட்டலுக்குப் போய் உனக்கு என்ன வேணுமோ வாங்கித் தின்னுன்னு சொல்லிடணும் தாமரை! எதைப் பொத்திப் பொத்தி வைக்கிறேமோ, அதன் பேரிலேதான் ஆசையும் அதிகரிக்கும்' என்று மாருதி என்றோ எப்போதோ தன் தாயாரிடம் சொன்னதும் அதை அவர்கள் இருவரும் அறியாமல் தான் கேட்க நேர்ந்ததும் இன்று ஏதனுலோ மிகத் தெளிவாக ஞாபகத்துக்கு வந்தன. அதைத் தொடர்ந்துதான் அந்த விசித்திரக் கற்பனையும் கிளர்ந்தெழுந்தது:

"...அதே போல் ... உஷா ... அவள் எனக்கு எட்டாத உயரத்தில் எங்கோ இருக்கிறுள் என்பதாலேயே அவள் மீது எனக்கு ஆசை பிறக்கிறதோ?... சீச்சீ ! என்ன பிதற்றல் இது...?"

பாலையிலிருந்து குளிர்ந்த நீரைக் குழிந்த உள்ளங் கையில் ஏந்தி எடுத்து முகத்தில் தட்டிக் கழுவிக் கொண்டான் தங்கப்பன்.

சட்டென்று அவனுக்கு அடக்க முடியாத ஓர் உணர்வு — துடிப்பு உண்டாயிற்று. மீண்டும் தன் அறைக்குள் போய் மின் விளக்கைப் பொருத்திவிட்டுத் தாமரைத் தொழிலகம் என்று அச்சிடப்பெற்ற கடிதத் தாளையும் பேனாவையும் எடுத்து வைத்துக் கொண்டு, 'அன்புள்ள செல்லத்துக்கு' என்று ஆரம்பித்துக் கடிதம் எழுதத் தொடங்கினுன்.

"நீ சென்னை திரும்பிப் பல மாதங்களாகி விட்டன. இதுவரை எத்தனையோ கடிதங்கள் ஒருவருக்கொருவர் எழுதிக் கொண்டுவிட்டோம். அம்மாவும் அடிக்கடி கடிதம் போட்டிருப்பாள். தாமரைத் தொழிலகம் வேகமாக உருவான கதையும் திறப்பு விழா நடந்த விவரமும் உனக்கு எங்கள் கடிதங்கள் மூலம் தெரிந்திருக்கும். பத்திரிகைகளிலும் கொஞ்சம் படித்திருப்பாய். எப்படியோ தொழிலகம் தொடங்கிச் சிறப்பாக நடக்கிறது. எனக்கு உள்ளூரிலும் சுற்றுப்புறத்திலும் ரொம்பவும் நல்ல பெயர். இப்படி பிரபல்யம் அடைந்திருப்பதைப் பயன்படுத்திக் கொண்டு அடுத்து வரும் தேர்தலுக்கு நிற்கலாமா என்றுகூட யோசித்து வருகிறேன்.

"நிற்க, எங்கள் கடிதங்களும், பத்திரிகைச் செய்திகளும் இதுவரை கூறுத, கூறியிருக்க முடியாத சில விஷயங்களை நான் இப்போது உனக்குச் சொல்லப் போகிறேன்.

"செல்லம்! உன்னைக் கல்யாணம் செய்து கொண்டால் — மனைவி, குடும்பம் என்றெல்லாம் ஏற்பட்டுவிட்டால் — பிறகு தொழிலகத்தைத் தொடங்கித் துரிதமான முன்னேற்றம் காண்பதற்குத் தடையாக இருக்கும் என்று நான் எண்ணியிருந்தேன். ஆனால் அப்படி எண்ணியதெல்லாம் தவறு என்று சமீப காலமாக நான் முடிவுக்கு வந்திருக்

கிறேன். நீ அருகிலிருந்திருந்தால் இடைஞ்சலாக இருந்திருக்க மாட்டாய், உறுதுணையாக, பக்க பலமாக மனம் விட்டுப் பேச உதவியாக இருந்திருப்பாய் என்று தோன்றுகிறது.. ஏதேதோ பெரிய சந்தேகங்கள், பிரச்னைகள் எதிர்ப்படும்போது மாருதியைக் கலந்தாலோசித்துக் கொள்வேன் என்றாலும் அவரிடம் என் மதிப்புக்குரிய பெரியவர், நம்பிக்கைக்குகந்த மனிதர், என் நலனில் அக்கறைகொண்டவர் என்ற விதத்திலேதான் பழகி அவர் அபிப்பிராயங்களைக் கோரிப் பெற முடிகிறது. ஆனால் அந்தரங்கமான அன்புடன் ஒட்டி உறவாட ஓர் ஆன்மா தேவை என்பதைக் கொஞ்ச நாட்களாகவே நான் உணர்ந்து வருகிறேன். அந்த ஆன்மா உன் உருவிலே என் அருகிலே இப்போது இருக்கக் கூடாதா என்று பல தடவைகளில் நான் ஏங்கியதுண்டு. உன்னிடமிருந்து தொழிலகத்தை எவ்விதம் நடத்தலாம் என்பதற்கான யோசனைகளையோ அல்லது இத்துறையில் அவ்வப்போது எழும் சிக்கல்களைத் தீர்க்கும் வழி முறைகளை நீ சிந்தித்துக் கூற வேண்டும் என்றோ நான் எதிர்பார்க்கவில்லை. என் மனச் சுமைகளை அநுதாபத்துடன் நீ பகிர்ந்துகொள்ள வேண்டும். எனக்குள்ள சிரமங்கள் உனக்குப் புரியுமோ புரியாதோ, எப்படியானாலும் அவை குறித்து என்னை மனம் விட்டுப் பேச வைத்துப் பரிவு காட்டினாலே என் இதயம் இலேசாகி எல்லாக் காரியங்களும் சுலபமாய்த் தீர்ந்து போகும் என்ற நம்பிக்கை என்னிடம் நாளுக்கு நாள் வளர்கிறது.

"இன்னும் மாருதி போன்றோரிடம் கேட்டுக்கொள்ள முடியாத சில சில்லறை இனங்களில் நீ எனக்கு உதவ முடியும். திறப்பு விழாவின்போது வேஷ்டி சட்டை அணிவதா அல்லது ஃபுல்-ஸூட் போட்டுக்கொள்வதா, அன்று பந்தல் அலங்காரம் எப்படி இருக்கலாம், மேஜை விரிப்பு எந்த நிறத்தில் அமையலாம், தொழிலகத்தினை எளிய முறையில் எப்படி அலங்கரிக்கலாம், அதைச் சுற்றியுள்ள தோட்டத்தில் என்னென்ன மலர்ச்செடிகளைப் பயிராக்கலாம் என்பன போன்ற அன்றாடம் எழும் சில்லறைக் கேள்விகளுக்கு உன் பதில்கள் எனக்குத் தேவைப்படுகின்றன. திறப்பு விழாவுக்காக நான் தயாரித்த வரவேற்புரையை முன்கூட்டியே உனக்குப் படித்துக்காட்டியிருக்க முடியுமானால் நான் ரொம்பவும் சந்தோஷப்பட்டிருப்பேன். 'இந்த வாக்கியம் புரிவது சிரமமாயிருக்கிறது. இந்த வார்த்தையில் அழுத்தம் கொடுங்கள்' என்று நீ சொல்லி உதவியிருக்கலாமல்லவா?

"செல்வம்! இப்படியெல்லாம் நான் விவரமாக எழுதுவதற்குக் காரணம் ஏதோ உன்னைத் திருப்திப்படுத்த வேண்டும் என்பதற்காகவல்ல; உண்மையை நீ உணர வேண்டும் என்பதற்காக."

தங்கப்பன் எழுதுவதை நிறுத்திவிட்டுக் கடைசி வாக்கியத்தை ஒரு முறை படித்துப் பார்த்தான். 'இப்படி எதற்காகஎழுதினேன்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். 'செல்வத்தை ஏதோ திருப்திப்படுத்துவதற்காக எழுதவில்லை; ஆத்மார்த்தமாகத்தான் எழுதினேன் என்பதை நான் சொல்லித்தான் அவள் தெரிந்துகொள்ள வேண்டுமா? உண்மையை அவள் ஏற்கெனவே அறிந்திருக்கவில்லையா ?

'இப்படி நான் எழுதியதற்குக் காரணம் என் மனம் தடுமாறவில்லை என்று என்னை நானே திருப்திப்படுத்திக் கொள்வதற்காக; உண்மையை நான் ஒப்புக்கொள்ள மறுப்பதன் விளைவாக!'

இந்தக் கருத்து உள்ளத்தில் பளிச்சிட்டதும் தங்கப்பனுக்குத் தன்மீதே கட்டுக்கடங்காமல் கோபம் வந்தது. காகிதத்தில் கீறல் விழுந்து கிழியும்வரை, பேனாவின் முனை பெயரும்வரை அந்தக் கடைசி வாக்கியத்தின் வரிகளை அழுத்தமாகக் கோடிழுத்து அடித்தான். பிறகு கடிதம் முழுவதையுமே சுக்குச் சுக்காகக் கிழித்துக் குப்பைத் தொட்டியில் போட்டான். விடியும் வரையில் அவன் தூங்கவே இல்லை.

## அத்தியாயம் 25

# கொல்லும் வெறுப்பு

சத்தியபுரி பெரிய கடைத் தெருவில் "ஜானகிராம் ஸ்டோர்ஸ் — ஃபேன்ஸி குட்ஸ் மர்ச்சண்ட்ஸ்" என்ற பெயர்ப் பலகை தொங்கிய கடையினுள் சோப்பு வாங்க நுழைந்த தங்கப்பன், ஒரு பிளாஸ்டிக் கூடை நிறைய பல வர்ண லிப்ஸ்டிக்குகள், பல ரகப் பவுடர்கள், சோப்புகள், ஸ்னோ, கிரீம், லோஷன் இத்தியாதிகளுடன் படியிறங்கிய உஷாவைக் கண்டு ஒரு கணம் தயங்கி நின்றான்.

"ஹலோ! தங்கப்பன்!" என்று புன்முறுவலுடன் சகஜமாக அழைத்தாள் அவள். "ஃபாக்டரிக்குப் போகவில்லையா?"

"அங்கேதான் கிளம்பிக் கொண்டிருக்கிறேன். பஸ்ஸுக்கு இன்னும் பத்து நிமிஷம் இருக்கிறது. அதற்குள் ஒரு சோப்பு வாங்கி விடலாமென்று கடைக்கு வந்தேன்."

"'வாட் இஸ் திஸ்!' கொஞ்சம்கூட நன்னு இல்லே. தாமரைத் தொழிலகம்னு ஊரெல்லாம் திமிலோகப்படுது. அதன் பூரண உரிமையாளர் ஒரு 'லேடஸ்ட் ஸ்போர்ட்ஸ் மாடல்' காரிலே போய் ஜம்முன்னு இறங்க வேணுமா?"

"ஃபாக்டரி இப்போ நடக்கிற ஜோர்லே—இப்படியே-இன்னும் இரண்டு வருஷங்கள் ஓட்டிட்டேன்னு ஒண்ணுக்கு இரண்டாகவே கார் வாங்கக்கூடிய சக்தி உண்டாயிடும் எனக்கு."

" 'வெல் ஸெட்!' வாயேன், ஒரு 'லிப்ட்' தரேன், என் காரில். — ஹெரால்ட் — முந்தா நாள்தான் வந்தது!"

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது

மேம்பாடடைந்த, புதிய




மேம்பாடடைந்த, புதிய ஸன்லைட்! ஒரு முறை வெள்ளோட்டம் பார்த்தீர்களானால் வெட்டவெளிச்சமாகத் தெரியும் அதன் மேன்மை! உண்மை, சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி. சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை...தூய்மை ஓங்க வெளுத்து, ஒளி நிரக்க உதவும்! உங்கள் துணிகள் அனைத்துக்கும் உபயோகியுங்கள்: மேம்பாடடைந்த புதிய ஸன்லைட் சோப்.

**உங்கள் அன்றாடத் துணிகளின் சலவைக்குரியது மேம்பாடடைந்த, புதிய ஸன்லைட்**

லின்டாஸ்-1.58-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

தங்கப்பன் சற்றுத் தயங்கினான். "என்ன யோசிக்கிறாய்? சீக்கிரமா சோப்பை வாங்கிக் கிட்டு வா! காரில் காத்திருக்கிறேன்" என்று கூறிவிட்டு வெண்மை நிறத்தில் நின்று பள பளத்த காரை நோக்கி நடந்தாள் அவள்.

தங்கப்பன் சோப்பை வாங்கிக்கொண்டு திரும்பியபோது டிரைவரின் ஆசனத்தில் உஷா அமர்ந்து, பக்கத்தில் — சாலையில்— நின்ற முருகேசனுடன் ஏதோ பேசிக்கொண் டிருப்பதைப் பார்த்தான். அவளருகில் அவன் அமர்ந்து கொண்டதும், "நான் சொன்ன தெல்லாம் நினைவிருக்கட்டும். ஒரு சின்ன 'மிஸ்டேக்' நேரப்படாது" என்று அவள் கூற முருகேசன், "உங்களுக்குக் கவலையே வேணாமுங்க; அதெல்லாம் நான் நல்லபடியா முடிச்சுடறேன்" என்று உறுதி அளித்தார். பிறகு தங்கப்பனை அப்போதுதான் கவனித் தவர் போல, "அடே! தம்பியா? சௌக் கியமா தம்பி?" என்றார்.

"சௌக்கியம்தான்" என்று தங்கப்பன் பதில் அளிப்பதற்குள் கார் நகர்ந்து எடுத்த எடுப்பிலேயே 'விர்ர்'ரென்று முப்பது நாற் பது மைல் வேகத்தில் பறக்க ஆரம்பித்தது. 'டபிள் ஹாரன்' ஒலி கேட்டு ஆடு, கோழி இவற்றுடன் ஓரிரு மனிதர்களும் இரு பக்கமும் தலைதெறிக்க ஓடினார்கள். "ஊர் எல்லை தாண் டட்டுமே அப்புறம் வேகமாகப் போகலாம்" என்றான் தங்கப்பன்.

"ஏன், உனக்குப் பயமா இருக்குதா?" என்றாள் அவள்.

அவளிடம் பேச வேண்டிய வேறு எத் தனையோ விஷயங்கள் அவன் உள்ளத்தைக் குடைந்து கொண்டிருக்க இது குறித்துத் தங்கப்பன் தர்க்கத்தில் இறங்கத் தயாராக இல்லை.

"உன் மாமா இப்போது எங்களிடம்தான் வேலையில் இருக்கிறார்" என்றாள் உஷா.

"தெரிகிறது" என்றான் தங்கப்பன். "எனக்கு வேண்டாதவர் என்பதாலேயே உனக்கு ரொம்ப நெருக்கமானவராகிவிட் டார் என்பது நன்றாகப் புரிகிறது."

"பாவம்! அவரை ஒன்னுமில்லாமல் விரட்டி அடிச்சுட்டீங்களாமே? அவர் உழைப்பினால்தானே நீ படிச்சு முன்னுக்கு வர முடிஞ்சது?"

"அவர் செய்த அயோக்கியத்தனங்கள் எதுவும் உனக்குத் தெரியாது, உஷா! என் அம்மாவை எக்கச்சக்கமாக ஏய்த்து ஏராள மான பணம் அபேஸ் பண்ணியிருக்கிறார்!"

"இந்தக் காலத்தில் யார் யோக்கியமா யிருந்து வாழ்றாங்க? உம், இப்பத்தானே தொழிற்சாலை செயல்பட ஆரம்பிச்சிருக்குது. போகப் போக இன்கம்டாக்ஸ், ஸூப்பர் டாக்ஸ், ஸர் சார்ஜ், கம்பெனி டாக்ஸ், புரொபஷனல் டாக்ஸ், பிராப்பர்டி டாக்ஸ், அட்வான்ஸ் டாக்ஸ், வெல்த் டாக்ஸ், பெர்மிட் — லைசென்ஸ் — செக்யூரிடி டெபா ஸிட், ஸேல்ஸ் டாக்ஸ், காபிடல் அப்ரிஸி யேஷன் டாக்ஸ், பிராபிட் டாக்ஸ், அப் புறம் போனஸ் தகராறு, வேலை நிறுத்தம் அது இதுன்னு பிரச்னைகள் வந்து குவிய றச்சே தெரியும்!"

"அடேயப்பா! மூச்சு விடாமல் சொல்லிக் கிட்டுப் போறியே! தொழில் துறையில் உள்ள சிரமங்களை, சிக்கல்களை நான் அறியாதவ னில்லை. அதற்காக நேர்மைக் குறைவாக நடந்து கொள்ள என் மனம் இடம் தராது!"

"எக்ஸ்க்யூஸ் மீ! நீ அரிச்சந்திரன் பரம் பரையிலே தோன்றி, அழியறதுக்காகவே வாழறவன் என்கிறது மறந்து போச்சு எனக்கு!"

தங்கப்பன் சட்டென்று கதவுப் பக்கம் சாய்ந்து அவளை நோக்கித் திரும்பி உட் கார்ந்தான். "நான் அழிந்தால் உனக்கு

எப்படி  முடியும் ?

## முதல் கதை

அவனுக்கு வெகு நாட்களாகக் கதை எழுத வேண்டும் என்கிற ஆசை! ஆனால் எப்படி எழுதுவது? என்ன எழுதுவது? அனுபவமில்லாமல் எதை எழுதுவது? துப் பறியும் கதையா? மர்மக் கதையா? காதல் கதையா?--அவன் குழம்பினான். காதல் கதை அனுபவம் பெறக் காதலிக்கலாமா என்றுகூட யோசித்தான்! ஆனால் காத லிக்க நேரமில்லை. மேலும்--- அவனுக்கு அவ்வளவு தைரியமும் போதாது! பெண் ணின் முகத்தைப் பார்த்துச் சிரிக்கக்கூட அவனுக்குப் பயம்! காரணம்....?

ஒரு சமயம் தூரத்தே வரும் தன் நண்பன் ஒருவனைப் பார்த்து அவன் கையாட்டிச் சிரிக்கப் போக, அவனுக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த ஒரு பெண் அவன் தன்னைத்தான் அயோக்கியத்தன மாக அழைக்கிறான் என்று எண்ணிக் கொண்டு வந்து விட்டாள் சண்டைக்கு. அந்த அனுபவத்தை இப்போது நினைத் துக்கொண்டாலும் அவன் தேகமெல்லாம் நடுநடுங்குகிறது.

கடைசியில் எப்படியோ ஒரு கதையை எழுதி முடித்து விட்டான்! பல பத் திரிகைகள் பேரை மனத்தில் கொண்டு வந்து நிறுத்தி விட்டுக் கடைசியில் ஒரு வழியாக மனம் துணிந்து ஒரு பத்திரிகை யைத் தேர்ந்தெடுத்து அதற்கு அனுப்பி வைத்தான் தன் முதல் கதையை! அன்று இரவு முழுதும் ஒரே கனவு மயக்கம்!

மறு நாள்-----

பேர், புகழ், மணியார்டர், செக்--இவை களே நினைவுகள்!

இன்று நம் கதையை இத்தனை நேரம் ஆசிரியர் படித்துக் கொண்டிருப்பார் என்று நினைக்கும் போதே அவன் நெஞ்சு நிறைந்தது!

அப்போது----

'ஸார், போஸ்ட்!' என்ற குரல் கேட்டது.

எப்படி முடியும் ?

சிந்திக்க. பிறகு, 73ம் பக்கம் பார்க்க.)

ஆனந்தமா யிருக்குமில்லையா உஷா?" என்று கேட்டான்.

காரின் வேகத்தைக் குறைக்காமலே புன்னகைபூத்த முகத்தைச் சாய்த்து அவனைப் பார்த்தாள் உஷா. "அதை விட எனக்கு சந்தோஷம் தரக் கூடிய விஷயம் வேறு எதுவுமே இருக்க முடியாது!" என்றாள்.

தங்கப்பன் ஜன்னலுக்கு வெளியே கண்ணோட்டம் செலுத்தினான். ஏனோ அவன் இதயம் சங்கடப்பட்டுத் தவித்தது. ஊரில் ஒருவர் பாக்கியில்லாமல் வாழ்த்தியும் பெருமிதமுறாத மனம் ஒருத்தி தன் அழிவைத் தேடியதால் வேதனையுற்றுப் புழுங்கியது. தூற்றிய வாய்கள் போற்ற வேண்டும் என்று விரும்பினான். அதைச் செயலாக்கியும் பார்த்து விட்டான். எனினும் நெஞ்சம் நிறைவுறவில்லை அவனுக்கு.

"உஷா! அன்று திறப்புவிழாவுக்கு உன்னை வருந்தி அழைத்தபோது வர மறுத்து என் உள்ளத்தைப் புண்படுத்தினாய். பிறகு பல நாட்கள் கழித்து நீயாகவே தொழிலகத்துக்கு வந்தாய். எதற்காக உஷா?"

"எதற்காக வந்ததாக நீ நினைக்கிறாய்?"

"சொல்லட்டுமா? உன் அப்பா நான் வெகு வேகமாய் முன்னுக்கு வந்துகொண்டிருப்பதாய் உன்னிடம் கூறினார். அது உண்மைதானா என்று நேரில் பார்த்து நிச்சயப்படுத்திக் கொள்ள விரும்பினாய்..."

"கரெக்ட்!"

"அப்படிப் பார்த்த பிறகு ஃபாக்டரியைக் குறித்துக் கேவலமாகப் பேசி என்னைத் துன்புறுத்த நினைத்தாய்!"

"ரொம்ப சரி!"

"தொழிற்சாலையைப் பார்த்ததும் உனக்கு நிஜமாகவே என் நிலை உயர்ந்துவிடுமோ என்ற அச்சம் ஏற்பட்டிருக்கும். மேலும் நான் வெற்றிபெற்று வளர்ச்சியடையாமல் இருக்கத் திட்டங்கள் வகுக்கப் போகிறாய்!"

"இன்னும்?"

"தொழிலகத்துக்கு விஜயம் செய்த அன்று உன் எழிலுருவத்தால் என்னைக் கவர்ந்திழுக்கவும் முற்பட்டாய்!"

உஷா கலகலவென்று சிரித்தாள். "பேஷ்! அடுத்தாற்போல் அதில் நான் வெற்றியும் பெற்று விட்டதாகக் கதை அளப்பாய் போலிருக்கிறதே!"

"இல்லை உஷா! 'அதில் நீ ஜெயமடைந்து விட்டாய்' என்று கூறி உன்னை நான் நெருங்கினால் அடுத்த கணமே என் கன்னத்தில் பளார் என்று ஓர் அறை விழும்! அப்படி என்னை இழிவுபடுத்த ஒரு சந்தர்ப்பம் கிடைக்க வேண்டும் என்பதற்காகவே உன் அழகைப் பயன்படுத்தி என்னை வசீகரிக்கவும் நீ தயங்கவில்லை. உனக்கு அடிமையாகிவிட்டேனானால் உதைத்துத் தள்ளுவாய். அத்தனை அசடனாகிவிடப் போவதில்லை நான். ஆனால் உஷா, நீ ஏன் இப்படி இருக்கிறாய்? என்மீது உனக்கேன் இத்தனை வெறுப்பு?"

"என்னைச் சரியாகத்தான் எடை போட்டு வைத்திருக்கிறாய் நீ! இன்னொன்றும் இன்றைக்குச் சொல்கிறேன் கேள்! ஊட்டியில் நீ ஏதோ என்னைக் காப்பாற்றி விட்டதாகப் பெரிதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய். அப்படி உன்னால் என் உயிர் காப்பாற்றப்படுவதைவிடச் சாவையே நான் வரவேற்கிறேன்; புரிகிறதா?"

தங்கப்பன் திகைத்து வாயடைத்துப் போனான். சத்தியபுரியிலிருந்து மூன்றாவது மைலில் கோவை — சேலம் நெடுஞ் சாலையில் இருந்த தாமரைத் தொழிலகத்தைக் கார் நெருங்கும் வரையில் அவர்களிடையே மௌனம் நிலவியது.

காரை நிறுத்திவிட்டுக் காத்திருந்தாள் உஷா. கதவைத் திறந்த தங்கப்பன் கீழே இறங்குவதற்கு முன்னால் அவளை நோக்கி நயமாக, "உஷா! இத்தனை இளம் வயதில் இவ்வளவு வெறுப்பு உன் உள்ளத்தில் வளர விடக் கூடாது. அது நம் இருவரில் ஒருவரை நிச்சயமாகக் கொன்றுவிடும்!" என்றான்.

"நம் இருவரில் ஒருவர் சீக்கிரமே சாக வேண்டும் என்றுதான் நானும் விரும்புகிறேன்!" என்றாள் உஷா.

கீழே இறங்கிக்கொண்டு அவன் கதவைச் சாத்தினான். கார் புழுதியைக் கிளப்பிக் கொண்டு பாய்ந்தது. (தொடரும்)





# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன்
- அநுத்தமா

## இரண்டாம் பாகம்:
## சுப்புலக்ஷ்மியின் கல்வி

### 1.

**1886**ம் வருடம் ஆகஸ்டு மாதம் 18ம் தேதி யன்று சுப்பிரமணிய ஐயர் முதன் முதல் தந்தையாகும் பேறு பெற்றபோது அவருக்கு வயது இருபத்திரண்டு. அவருக்குக் கல்யாணமாகி எட்டு ஆண்டுகளுக்கு மேல் ஆகியிருந்தன.

அவருடைய தந்தையார் வேங்கடராமஐயர் மிக்க பக்தசீலர். அவர்களுடைய முன்னோர்கள் தலைமுறை தலைமுறையாகப் படித்தவர்கள் ஆயினும் ஏழைமைமிகுந்த அந்தணர்கள். முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னால் தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ரிஷியூர் என்னும் கிராமத்தில் அவர்கள் குடும்பம் குடியேறியிருந்தது. வேங்கடராம ஐயர் வெகுவாகத் தம் காலத்தைக் கும்பகோணம் மடத்திலேயே கழித்தார். தம்முடைய இரு குமாரர்களையும் அவ்வூரிலிருந்த ஆங்கிலப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி வைத்தார். அதன் பிறகு சென்னையில் மாநிலக் கல்லூரியில் கல்வி பயிலச் செய்தார். சுப்பிரமணியஐயர் சிவில் இஞ்சினியரிங்கில் பட்டம் பெற்று, பிறகு சென்னை அரசினர் மராமத்து இலாகாவில் உத்தியோகம் பார்க்கத் தொடங்கினார்.

அவருடைய மனைவி, விசாலாட்சி, சென்னை மயிலாப்பூரில் கபாலீசுவரர் கோயில் குளத்துக்கு எதிரிலிருந்த தன் பிறந்த வீட்டில் தன்னுடைய பேறுகாலச் சமயத்தைக் கழித்தாள். அந்நாட்களில் சென்னையிலோ, தென்னிந்தியாவிலுள்ள மற்ற இடங்களிலோ, பயிற்சி பெற்ற மருத்துவச்சிகள் இருக்கவில்லை. இக்காலத்திலும் அநேக

கிராமங்களில் நடப்பது போல, அப்போது ஒரு பெண்ணுக்குப் பிரசவ வலி எடுத்தவுடன், நாவிதர் மனைவிக்குச் சொல்லி அனுப்புவது வழக்கம். விசாலாட்சி பல வாரங்களாக இடைவில்லாமல் பிரசவ நோவு அநுபவித்து, அதிகமான வேதனைப்பட்டுத் தவித்துக் கொண்டிருந்ததால், அவளுடைய பெற்றோர்கள் ஒரு டாக்டரை அழைக்க நிச்சயித்தார்கள்.

விசாலாட்சி அதை வலுவாக மறுக்க ஆயத்தமானாள். ஓர் ஆண்பிள்ளையால் தீண்டப்படும் அவமானத்தைவிட எதை வேண்டுமானாலும் பொறுப்பேன் என்று அவள் கூறி விட்டாள். அவளுக்கு வயது பதினாறுதான். ஆனாலும் திடசித்தமுடையவளாக இருந்தபடியால் யாராலும் அவள் மனத்தை மாற்ற முடியவில்லை.

நல்ல காலமாக அச்சமயம் சென்னையில் மிஸ் ஷார்லீப் (Miss Scharleib) என்ற நல்ல தேர்ச்சி பெற்ற ஐரோப்பிய மாது டாக்டராக இருந்தாள். சொல்லியனுப்பியவுடன் அவள் வந்து விட்டாள். குழந்தையை ஆயுதத்தின் (Forceps) உதவியினால் வெளிக் கொண்டு வருவதாகக் கூறினாள்.

ஸிஸ்டர் சுப்புலக்ஷ்மி அதைப் பற்றி என்னிடம் சொல்லும் போது, தாமே தம் பிறப்பைத் தனித்து நின்று நேரில் பார்ப்பது போல ஆணித்தரமாகப் பேசினார். ''அந்தக் காலத்து ஆயுதங்கள் இப்போது வைத்தியர்கள் உபயோகிப்பது போன்றவை அல்ல. அவை பெரிதாக, பார்ப்பதற்கு முரட்டுத்தனமாக இருந்ததோடு, குழந்தையின் இளந் தலையை இரும்புப் பிடியாகப் பிடிப்பவை'' என்றார். பிறகு தம் கைகளைத் தூக்கித் தலை மயிரைத் தள்ளினார். ''அந்தப் பிரசவ ஆயுதங்கள்தாம் என் நெற்றிப் பொட்டில் இந்த இரண்டு புடைகளை ஏற்படுத்தின என்று என் தாயாரும் சித்தியும் சொல்லுவார்கள்'' என்று கூறினார்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை. உங்கள் மூளை விருத்தியடைந்து முட்டுவதினால் ஏற்பட்டவைகளாக இருக்கும் இவை'' என்றேன் நான்.

அவர் சிரித்தார். ''மூளையா! அநேகம் பேருக்கு மூளை இருக்கத்தான் செய்கிறது. ஆயின் அதை உபயோகப் படுத்தத்தான் அவர்கள் கற்றுக்கொள்ளச் சிரத்தை கொள்வதில்லை.'' சகோதரியின் இரு கைகளும் கீழே வந்து மடியில் அமர்ந்தன. அவர் மீண்டும் தொடர்ந்து பேசினார். ''அது ஒருபுறமிருக்கட்டும். நான்தான் சொல்கிறேனே, எப்படியோ ரொம்பச் சிரமப்பட்டு வைத்தியர்



கடைசியில் வெற்றிகரமாக என்னை வெளியே இழுத்துப் போட்டவுடன்—வலி, கவலை, கஷ்டம் எல்லாவற்றுக்கும் பிறகு—பார்த்தால் நான் ஒரு பெண்ணாக இருந்தேன். அது எல்லோருக்கும் பெரிய தோர் ஏமாற்றம்.''

சில நாட்களுக்கெல்லாம் மற்றுமோர் ஏமாற்றமும் காத்திருந்தது. விசாலாட்சி தன் குழந்தையின் முஷ்டியைத் திறக்க முயன்றபோது, அதன் வலது கை திறக்கவில்லை. குழந்தையின் விரல்கள் உள்ளங்கையில் உள்நோக்கி மடிந்திருக்க, உள்ளங்கைக்கும் ஒவ்வொரு விரலின் முதல் மடிப்புக்கும் இடையே தோல் வளர்ந்து ஒட்டிக் கொண்டிருந்தது. ஸிஸ்டர் வியப்போடு கூறினார்: ''யோசித்துப் பாருங்கள். நான் அப்படியே என் வாழ்நாள் முழுதும் இருந்து விட்டிருந்தால்! என்னால் எழுதக் கற்றிருக்க முடியாது, டயரி வைத்திருக்கவும் முடியாது. என்னால் இன்னும்....'' ஒரு நிமிஷம் நிறுத்தினார். எங்கோ பழைய நினைவுகளைத் துழாவுவது போல் சுற்றுமுற்றும் பார்த்தார். உடனே குரல் மீண்டும் கறுகறுப்படைந்தது... ''ஆனால் அது சரியாகி விட்டது. என் தாயார் தினமும் என் கைக்கு எண்ணெய் தடவி விட்டாள். வேண்டாத தோலும் சீக்கிரம் மறைந்து விட்டது. என்னுடைய குணவிசேஷம்தான் மாற வில்லை....''

எனக்குப் புரியவில்லை.

''நான் கிருஷ்ண பட்சத்தில் பிறந்தேன்'' என்று ஸிஸ்டர் சுப்புலக்ஷ்மி விளக்கினார்.

தேய்பிறைக்கும் வளர்பிறைக்கும் இடைநேரமாம். சுப்புலக்ஷ்மி அவர்களின் சித்தி நன்றாக ஜோஸியம் பார்க்கத் தெரிந்தவள் என்று பெயர் பெற்றிருந்தாள். அவள் அபிப்பிராயப்படி ஸிஸ்டர் பிறந்த நேரத்தில் பிறக்கும் குழந்தைகள் எல்லாம் மிகவும் பிடிவாதக் குணம் படைத்தவர்களாக இருப்பார்களாம். தம்மையறிந்த எல்லோராலும் உணரப்பட்ட வெளிப்படையான அந்த உண்மையைத் தாமும் ஒத்துக் கொண்டு தொடர்ந்து பேசினார் ஸிஸ்டர்: ''சரி, நான் பிடிவாதக்காரிதான் போலும். ஏன் அப்படியிருக்கக் கூடாது? எது சரி, எது தப்பு, எது செய்யத் தகுந்தது, எது செய்யத் தகாதது என்பனவற்றைப் பற்றிப் பிறர் கொள்கைகளால் உந்தப் பட்டுக் காலத்தைக் கழிப்பதில் என்ன பயன்? சதா ஒருவர், பிறருடைய புத்திமதியைக் கேட்டுக் கொண்டும், பிறர் என்ன நினைப்பார்களோ என்று யோசித்துக் கொண்டும் இருப்பார்களாயின் அவர்களால் என்ன வேலை தான் செய்து முடிக்க முடியும்? உலகத்துக்கு ஏதேனும் பயனுள்ளவர்களாக இருக்க வேண்டுமென்றால், ஓரளவு பிடிவாதத்தோடுதான் இருக்க வேண்டும். இப்பொழுது பாருங்கள்.....''

நான் குறுக்கிட்டேன்: ''உங்களுடைய இளமையில் முதலில் ஞாபகம் வரும் நிகழ்ச்சி எது, சொல்லுங்கள்.''

ஒரு விநாடிகூடத் தயங்காமல் அவர் மறுமொழி கூறினார்: ''தேன் கொட்டியதுதான்.''

அப்பொழுதுதான் நடக்க ஆரம்பித்திருந்தாள் சுப்புலக்ஷ்மி. தத்தித் தத்தி நடந்து, ஓர் அறையினின்று மற்றோர் அறைக்குப் போகும் போது வாசற்படியைப் பிடித்துத் தன்னைச் சமாளிக்கும் சமயம், ஆள்காட்டி விரலில் தேன் கொட்டி விட்டது. தான் அன்று வீரிட்டதும், தன் தாயார் ஓடோடி வந்து தன்னைத் தூக்கியதும், படுக்கையில் இட்டுச் சமாதானம் செய்ததும், விஷம் பரவும்போது ஏற்பட்ட சரீர வேதனையும், இப்போதும் அவருக்கு நன்றாக நினைவிருந்தன. சகோதரிக்கு ஏற்பட்ட உடல் உபாதைகளில் அதுதான் மிகக் கொடியதாம். மறு நாளே அது சரியாகி விட்டது. ஆனால் குழந்தைப் பிராயம் முடிவதற்குள்ளாக வேறொரு விதமான வேதனையை, தேன் கடியை விடக் கொடுமையில் சற்றும் குறையாததும், அதைவிட நீடித்த தன்மையுடையதுமான மன வேதனையை அநுபவிக்க நேரிட்டது.

சுப்புலக்ஷ்மிக்கு இரண்டு வயதுகூட ஆகவில்லை. அப்பொழுது ஆந்திரப் பிரதேசம் என்று இன்று அழைக்கப்படும் தெலுங்கு தேசத்தில் கோதாவரி கிருஷ்ணா ஜில்லாக்களுக்கு அவளது தகப்பனாரை மாற்றி விட்டார்கள். விசாகப்பட்டினத் துறைமுகத்துக்குக் கப்பல் மார்க்கமாக அந்தச் சிறு குடும்பம் கிளம்பிற்று. அங்கு ஒரு படகில் மாறிக் கொண்டார்கள். சுப்பிரமணிய ஐயர் சர்வே செய்வதும் பழுது பார்ப்பதுமாக ஆங்காங்கு சென்றபோதெல்லாம் இந்தப் படகுதான் அவர்களுக்கு வீடாக அமைந்தது. இந்த வேலை அவர் உடலுக்கு ஒத்துக் கொள்ளவில்லை. ஏற்கெனவே ஆஸ்துமாவில் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்த அவருக்கு இந்தப் புது வேலையில் ஈடுபட்டதும் வியாதியின் தாக்குதல் அடிக்கடியும் மிகக் கடுமையாகவும் வர ஆரம்பித்து விட்டது.

# இன்பமான கனவுகள் உட்வர்ட்ஸுக்கு நன்றி!




மந்தம், புளிப்பு, உப்புசம் மற்றும் பல்முளைக்கும்போதுள்ள உபாதைகளிலிருந்து உடனடி நிவாரணம்பெற உட்வர்ட்ஸ் கிரைப் வாட்டர் உபயோகியுங்கள்.

**இது 100 வருடங்களாக புத்திசாலிகளான் தாய்மார்களால் உபயோகிக்கப் பட்டு வருகிறது**

ஆந்திர தேசத்து மக்களிடையே சுப்பிரமணிய ஐயரும் விசாலாட்சியும் ஒன்றவில்லை. தெலுங்கு மொழி கற்றுக் கொள்வது தமிழர்களுக்கு எளிதாக இருப்பினும், அதன் எழுத்து புதுமையாகவும் பழக்கமற்றதாகவும் இருந்தது. அங்கு உணவு காரமாகவும் வித்தியாசமாகவும் இருந்தது. எல்லாவற்றுக்கும் மேல், அங்கிருந்த புரோகிதர்களிடம் நிலவிய சில பழக்க வழக்கங்கள் விசாலாட்சிக்கும் அவள் கணவருக்கும் கட்டோடு பிடிக்கவில்லை. சுப்பிரமணிய ஐயருடைய தகப்பனார் சில காலத்துக்குமுன் இறந்து விட்டிருந்தார். இந்த இளந்தம்பதிகள் சிராத்தம் செய்ய முற்பட்ட போது, மிகவும் கஷ்டப்பட்டார்கள். சிராத்தம் செய்து வைக்க வந்த புரோகிதர்கள் விசாலாட்சியே அவர்கள் தலையில் எண்ணெய் வைக்க வேண்டுமென்று கட்டளையிட்டார்கள். அவள் மறுத்தாள். அவர்கள் வற்புறுத்தினார்கள். அவ்வாறு செய்தாலொழியச் சிராத்தம் திருப்திகரமாக அமையாது என்று அவர்கள் விளக்கினார்கள்.

''பாவம், என் அம்மாவோ புதியதான அந்த இரண்டு ஆண்களும் தங்களுக்கு எண்ணெய் தேய்க்கும்படி சொல்லவும் மிகவும் அதிர்ச்சியடைந்து விட்டாள். புரோகிதர்கள் மிகவும் வற்புறுத்தவும், என் தகப்பனார் அதெல்லாம் முடியாது என்று கூறிவிட்டார். அவருக்கு அந்தப் பழக்கம் அருவருப்பாக இருந்தது'' என்று விக்டர் விவரித்தார். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சுப்பிரமணிய ஐயருடைய உடல் மிகவும் மோசமாகி விட்டது. அவர் தம் உறவினர்களுக்கு எழுதின கடிதங்கள் மிகவும் கலவரத்தை உண்டாக்கியிருக்க வேண்டும். வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டு வீடு திரும்பும்படி அவருடைய அண்ணாவிடமிருந்து சீக்கிரமே தந்தி ஒன்று வந்தது.

அவர் ஊர் சென்று நோக்கிய போது, அவருடைய குடும்பத்தினர் அவருக்கு வேறொரு வாழ்க்கைத் திட்டத்தை ஏற்பாடு செய்திருந்தனர் என்பதை அறிந்தார். கல்வித் துறையில் புத்தாண்டு தொடங்க விருந்தது. ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் பட்டதாரிகளுக்குள்ள ஒரு பயிற்சியை மேற்கொள்ளுவாராயின், வருஷ முடிவில் கட்டாயமாகப் பொறியியல் ஆசிரியராக அவருக்கு வேலை கிட்டிவிடும்.

இந்த அபிப்பிராயம் அவருக்கு நல்லதென்று படவே, அவர் அதன்படியே நடக்கலானார். இதற்குள் விசாலாட்சிக்குப் பாலம் என்ற இரண்டாவது பெண் பிறந்தது. இளந் தம்பதிகளுக்கு ஆண் பிள்ளை பிறக்கவில்லையே என்று மீண்டும் ஏமாற்றம். சுப்பிரமணியஐயருக்கும், விசாலாட்சிக்கும் தங்கள் இரு பெண்களும் மிக அருமைதான். ஆனால் பாலத்துக்கு ஒரு வயதாகுமுன் விசாலாட்சி மீண்டும் கருவுற்ற போது அத்தம்பதிகள் மூன்றாவது குழந்தை பையனாக இருக்க வேண்டும் என்று ஆவலுடனும், பிரார்த்தனையுடனும் காத்திருந்தனர். ஓர் இந்துப் பெண்ணின் முதல் கடமை ஆண்பிள்ளைகளுக்குத் தாயாக இருப்பதுதான் என்று விசாலாட்சியினுடைய தாயார் அவளுக்குச் சொல்லித் தந்திருந்தாள். முன்னோர்களுடைய ஆத்மசாந்திக்காக — சிராத்த கருமாதிகளை ஒருபோதும் ஒரு பெண் செய்ய முடியாது. ஆகவே, எவனொருவனுடைய மனைவி ஆண் மகவைப் பெறவில்லையோ, அவன் மட்டும் அபாக்கியவான் அல்ல, அவனுடைய முன்னோர்களையும் இந்தப் பிள்ளை இல்லாக் குறை பாதிக்கும் என்று தீவிரமாகக் கருதப்பட்ட காலமல்லவா ?

**வி**சாலாட்சி நம்பிக்கையோடு பிரார்த்தித்து வந்தாள். எல்லாம் சரிவர நடந்து வந்தது. ஓராண்டுப் பயிற்சிக்குப் பிறகு அவள் கணவருக்கு அரசினர் விவசாயக் கல்லூரியில் ஆசிரியர் பதவி கிடைத்தது. அது அவருக்கு மிகவும் பிடித்தமான வேலை. அதன் பிறகு வேறு வேலைக்கு அவர் ஆசைப்படவோ முயற்சி செய்யவோ இல்லை. சென்னையிலிருந்து பத்து மைல் தெற்கே சைதாப்பேட்டையில் கல்லூரி இருந்தது. இப்பொழுதெல்லாம் சைதாப்பேட்டை ஓர் அழகற்ற உயிரற்ற உபநகரமாக இருக்கிறது. அதன் குறுக்கே ஓடுகிற பாதையில் அல்லும் பகலும் பஸ்ஸுகள் கார்கள், மாட்டு வண்டிகள், லாரிகள் மற்றும் ஸ்கூட்டர்கள் ஓடிக் கொண்டும் பேரிரைச்சலை உண்டாக்கிக் கொண்டும் இருக்கின்றன. 1889ம் ஆண்டில் அது ஓர் அமைதியான கிராமமாக இருந்தது. அப்பொழுது அங்கே தம் குடும்பத்துக்குத் தகுந்தபடியும் கல்லூரியிலிருந்து அதிக தூரம் நடக்க வேண்டிய அவசியமிராதவாறும் ஒரு வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொள்வது சுப்பிரமணிய ஐயருக்குக் கஷ்டமாக இருக்கவில்லை.

அவர்கள் புது இடத்தில் குடியேறிக் குதிர்ந்தவுடனே மூன்று வயது சுப்புலக்ஷ்மி பள்ளிக்கூடம் போவது என்று தீர்மானமாயிற்று.

அது மிகவும் ஆச்சரியமானதொரு தீர்மானம்.

அந்தக் கிராமத்தில் இரண்டு பள்ளிக் கூடங்கள் இருந்தன. ஒன்று, ஐந்து வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக் கான ஆரம்பப் பள்ளி. இது பொதுப் பள்ளிக்கூடம். மற்றொன்று மிகவும் சிறிய குழந்தைகளுக்காக நடத்தப் படும் ஒரு சொந்த ஸ்தாபனம். இரண்டு பள்ளிகளிலும் பெரும்பாலும் ஆண் பிள்ளைகள் படித்தனர். அந்நாட்களில் நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பெண்கள் அநேகமாகப் பள்ளிக்கூடம் செல்வ தில்லை. வீட்டிலும் கல்வி பெறுவதில்லை. முதலில் தாயிடமும் பிறகு மாமியாரிட மும், வீட்டு வேலைகளையெல்லாம் கற்றுக் கொள்வார்கள், அவ்வளவே.

அந்த விதிக்கு விலக்காகச் சிலர் இருக் கத்தான் செய்தனர். சுப்புலக்ஷ்மியின் தாயாரும், அவருடைய சித்தி வாலாம் பாளும் நன்கு கற்று அறிந்தவர்கள். இருவருக்கும், சமஸ்கிருதம் மற்றும் தமிழ் நூல்களில் விசேஷ ஞானம் இருந் தது. இருவரும் ஆங்கிலம் படிக்க வில்லை. வீட்டின் ஆண்கள் தங்க ளிடையே அம்மொழியில் பேசிக் கொண்ட பல விஷயங்கள் இவர் களுக்கு அறவே புரியாமல் இருந் தது. சுப்பிரமணிய ஐயருடைய சகோதரர் மிகவும் திறமை வாய்ந்த கணித அறிஞர். கும்பகோணத்தில் அவ ருடன் படித்த சக மாணவர்கள் அவ ருக்கு யூக்லிட் (Euclid - கி. மு. 300ல் வாழ்ந்த கணித மேதை) என்று பெயரிட் டிருந்தனர். அவர் சைதாப்பேட்டைக்கு வரும்போது ஆண்கள் அநேகமாக ஆங் கிலத்திலேயே பேசிக் கொள்வார்கள்.

தம்முடைய தகப்பனார்தான் தம் மைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்க முதன் முதலாக நிச்சயித்தார் என்று ஸிஸ்டர் சுப்புலட்சுமி நினைக்கிறார். அவரது குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்கள் சுப்புலட்சுமியின் தாயாரோ, சித்தியோ தான் முதலில் நிச்சயித்திருக்க வேண் டும் என்று அனுமானிக்கிறார்கள்.

எழுபத்து மூன்று வருடங்களுக்கு முன்னால், தாம் எவ்வாறு இருந்திருக்க வேண்டுமென்று கற்பனை செய்து கொண்டு ஸிஸ்டர் பேசலானார். "என் பெற்றோர் சின்னஞ்சிறு குடையும், சிறிய காலணிகளும் வாங்கி வந்தார்கள்." அதற்கு முன் பாவாடை சொக்காய் அணிந்த அந்தச் சிறுமி வெறும் காலு டன்தான் நடந்து வந்தாளாம்.

ஸிஸ்டர் தொடர்ந்து பேசினார்: "தினமும் என் தகப்பனார் கல்லூரி போகக் கிளம்பியபோது, அவருடன் கூடவே நானும் நடந்து பள்ளிக்கூடம் போவேன். என் அம்மாவாவது சித்தி வாலாம்பாளாவது....எல்லோரும் அவ ளைச் 'சித்தி' என்றுதான் அழைத் தார்கள். ஏனென்றால் அவள் எல்லோ ரிடமும் ஒரு சித்தி போல் அன்பு காட்டி வந்தாள்..."

சித்தியாவது, தாயாராவது தின மும் காலையில் ஒரு கையளவு வறுத்த பட்டாணியைச் சட்டைப் பையில் வைத் துக்கொள்ளும்படி தருவார்களாம், வீடு திரும்புமுன் பசித்தால் தின்பதற்காக.

அச் சிறு பெண் பாடம் முடிவதற்கு முன்பே எல்லாவற்றையும் தின்றுவிடு வாளாம். இப்போது அதை நினைவு படுத்திக் கொண்டு சிரித்துக்கொண்டே கூறினார். "நான் அந்தப் பள்ளிக் கூடத்தில் ஒன்றுமே படிக்கவில்லை. பட்டாணி தின்பதுதான் நான் படித்த படிப்பு."

சுப்புலக்ஷ்மி பள்ளிக்கூடத்தில் சேர்ந்து நான்கு மாதங்கள் இருக்கும். அப்போது வீட்டில் புதிய குழந்தை பிறந்தது. விசாலாட்சியும், சுப்பிரமணிய அய்ய ரும் மகன் கிடைக்காத ஏமாற்றத்தை மூன்றும் முறையாக அனுபவிக்க நேர்ந் தது. சுப்புலட்சுமிக்கு அவளுடைய கொள்ளுப்பாட்டியின் பெயர் வைக்கப் பட்டிருந்தது.

புதுக் குழந்தைக்குச் சாவித்திரி என்று பெயர் சூட்டினார்கள். பையன்கள் இல்லாத குடும்பத்தில் மூன்றாவது பெண்ணுக்கு இந்தப் பெயர் வைப்பது மரபானதால், இதில் பெற் றோர்களுக்கு ஒன்றும் அபிப்பிராயம் கூற இடமில்லை.

இப்பொழுதும் பல இந்துக்கள் நம்பி வருவது போல், இப்பிறவியில் ஆண் மக்களைப் பெறாத பெண்கள் பூர்வ—வினை யின் பயனாக அவ்வாறு தண்டிக்கப் பெற்றிருக்கிறார்கள் என்று அப்பொழு தும் நம்பினார்கள். ராமேசுவரத்தில் சமுத்திர ஸ்நானம் செய்து பாபங்களைக் கழுவிக்கொள்ள நினைத்தார்கள்.

சுப்பிரமணிய ஐயர் — விசாலாட் சியைப் போலவே, அவர்களது நட்பைப் பெற்றிருந்த இன்னொரு குடும்பத்துக்கும் இதே நிலை நேர்ந்திருந்தது. இரண்டு குடும்பங்களுமாகச் சேர்ந்து ராமேசு வரத்துக்கு யாத்திரை போவதென்று தீர்மானமாயிற்று.

ஸிஸ்டர் என்னிடம் கூறினார்: "அடுத்த வருடமே என் தாயாருக்கு ஆண் குழந்தை பிறந்தது. ஆனால் பாவம், அந்தக் குழந்தை வெகு நாட்கள் உயிருடன் இல்லை." (தொடரும்)



# கந்தன் கருணை

## 42. சீறி மோதிய சிவப் படைகள்

போர்க்களத்தில் சூரபன்மன் தோற்று ஓடியதைக் கண்டதும், திருமால், பிரம்மா, இந்திரன் முதலிய தேவர்கள் எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தனர். நன்றி நிறைந்த நெஞ்சத்துடன் முருகப் பெருமானை வணங்கித் துதித்தனர். ''எம்பெருமானே! தோல்வி என்பதையே அறியாத சூரபன்மன் இன்று தான் தேவரீரோடு போர் செய்து தோற்று ஓடியிருக்கிறான். தேவரீர் மட்டும் அவனைக் கொல்ல வேண்டும் என்று நினைத்திருந்தால் அவன் தப்பியோடியிருக்க முடியாது. தப்பி ஓடிய அவனைத் தாங்கள் வேலினால் அழிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார்கள்.

திருமுருக கிருபானந்தவாரியார்





சூரபன்மன் போரில் தோற்று ஓடியதை அறிந்த பூதசேனைகளும், அவற்றின் தலைவர்களும் ஆரவாரத்துடன் கந்தப் பெருமான் அருகே வந்தனர். "இனி சூரபன்மனின் நகரத்து மதிலையும், அவனது அரண்மனையையும் தகர்த்துக் கடலில் வீசி யெறிவோம்" என்று கூறி, மதிற் பக்கம் படையெடுத்துச் சென்றனர். வீரமகேந்திரபுரியை முற்றுகையிட்டனர். மதிற்சுவர்களும் கோபுரங்களும் தரைமட்டமாயின.

வீரமகேந்திரத்தின் காவலாளியான அசுரப் படைத் தளபதி அதிகோரனுக்கும் பூதப் படைத் தலைவர்களில் ஒருவனாகிய மேகனுக்கும் கடும் போர் நடந்தது. மேகன் அதிகோரனின் மார்பிலும் தோள்களிலும், கபாலத்திலும் ஓங்கி அறைந்தான். அதிகோரன் அலறி விழுந்து அழிந்தான். அதன் பின்னர் பூத சேனைகள் மதிலின் முதல் வாயிலுக்குச் சென்று, அங்கே வானளாவி நின்ற கோபுரத்தை அடியோடு பெயர்த்துக் கடலில் வீசினர். திருப்பாற்கடலில் மந்தரகிரி அமிழ்ந்ததுபோல் அந்தக் கோபுரம் சமுத்திரத்தில் அமிழ்ந்தது. அதனால் கடல் நீர் பொங்கியெழச் சூரபன்மனின் நகரத்து வீதிகள் யாவும் வெள்ளக் காடாயின. அந்த வெள்ளத்தில் மிதந்து வந்த மீன்களும் திமிங்கிலங்களும் அசுரர்களை விழுங்கின.

பூதசேனைகள் மதிலின் வடதுபுறக் கோபுரத்தைத் தகர்த்து, நகருக்குள் நுழைந்து எதிர்த்து வந்த அசுரர்களையெல்லாம் கொன்று குவித்தார்கள். பூதசேனைகளுக்குத் திடீரென்று ஓர் எண்ணம் தோன்றியது. பட்டணத்துக்குள் பிரவேசிக்கும்போது தலைவனான பெருமான் அல்லவா முன்செல்ல வேண்டும் என்று கருதினார்கள். கந்தவேளை அழைத்து வருவதற்காக அவர் இருந்த இடத்துக்குத் திரும்பிச் சென்றார்கள்.

போர்க்களத்தில் தோற்று ஓடி வந்த சூரபன்மன் தனது அரண்மனையின் அந்தப்புரத்துக்குச் சென்றான். அவனது இன்னுயிர் மனைவி பதுமகோமளை வாசம் செய்யும் மாளிகையை அடைந்தும் அவளைப் பார்க்கவில்லை; பேசவுமில்லை. உணவும் கொள்ளாது ஒருவருடனும் பேசாது, தனியாக அமர்ந்து தனக்குப் போர்க்களத்தில் நேர்ந்த அவமானத்தையெல்லாம் எண்ணி மனம் குமுறிக் கொண்டிருந்தான்.

சூரபன்மன் போரில் தோற்று வந்த செய்தியைத் தூதர்கள் மூலம் கேட்ட பானுகோபன் துடி துடித்து, மனம் புழுங்கினான். சூரபன்மன் இருக்கும் இடத்துக்குச் சென்று தந்தையை வணங்கினான். ''நீங்கள் ஏனப்பா யுத்தத்துக்குச் சென்றீர்கள்? உங்கள் உத்தரவுப்படி நேற்று நான் யுத்தத்துக்குச் சென்று கடுமையாகப் போர் செய்தேன். நான் மோகனாஸ்திரத்தை ஏவிக் குமாரவின் வீரர்களது வலிமையை இழக்கச் செய்து வெற்றிவாகை சூடிக் கொண்டிருந்தேன். அந்தச் சமயம் பார்த்து அந்தக் குமாரன் என் மீது அமோகாஸ்திரத்தை விடுத்தான். அதனால் என்னுடைய மோகனாஸ்திரத்தின் வலிமை குன்றியது. வலிமை இழந்து மயங்கிக் கிடந்த அவனது வீரர்களும் தெளிவுபெற்று விட்டார்கள். எனினும் நான் உயிருடனிருக்கும் வரையில் அவன் என்னை வென்று விட்டதாகச் சொல்ல முடியுமா? இது போல் ஓரிரு சறுக்கல்கள் நேரிடுவது யுத்தத்தில் சகஜம் தானே? எனவே, இன்றேனும் எதிரிகளை எப்படியும் கொன்று அழித்துவிட வேண்டுமென்று நான் ஆயத்தமாகிக் கொண்டிருந்தேன். அதற்குள் தாங்களே போருக்குச் சென்றதாக அறிந்தேன். அழியாத வரம் பெற்ற தாங்கள் ஒரு பாலகனுடன் போருக்குச் செல்லலாமா? நடந்தது நடந்து விட்டது. நாளைக்கு நானே போருக்குச் சென்று வெற்றி வீரனாகத் திரும்புகிறேன். எனக்கு விடை தாருங்கள்'' என்றான்.

''மகனே! நீ பேசுவது நமக்கு உவகை தருகிறது. எனினும் அந்தச் சரவண பவனின் ஆற்றலை நீ சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. நானும் முன்பு அவனைச் சிறுவனாகவே மதித்தேன். ஆனால் அவனுடன் போர் செய்ததிலிருந்து மும்மூர்த்திகள் சேர்ந்தாலும் அவனை வெல்ல முடியாது என உணருகிறேன். அவனுடன் எதிர் நின்று போர் செய்ய என் ஒருவனால்தான் முடியும். அந்தக் குமாரவின் இரண்டாயிரம் வெள்ளம் சேனைகளுக்கும் தலைவனாயிருக்கிற வீரவாகுவை நீ தனிமையில் போருக்கு அழைத்து வெற்றி கொள். அதுவே உன் சக்திக்குத் தகுந்த செயல். இதற்காக நாளைய தினமே சேனைகளுடன் புறப்படு'' என்று விடை கொடுத்தான்.

தந்தையிடம் விடைபெற்று அரண்மனைக்கு வெளியே வந்த பானுகோபனிடம் மகேந்திரபுரியின் வீரர்கள் ஓடி வந்து வணங்கினார்கள்.

''அரசிளங்குமரரே! பூதசேனைகள் திரண்டு வந்து தலைநகரை முற்றுகை விட்டு மதில்களை இடித்துத் தகர்த்து விட்டனர். அதிகோரனையும், அசுர வீரர்கள் பலரையும் அழித்து விட்டனர். நகருக்குள் கடல் நீர் புகுந்து வருகிறது'' என்று கூறினார்கள்.

பானுகோபன் உடனே அரும் சக்திகள் பெற்ற அசுரத் தச்சர்களை வரவழைத்து மதில்களைச் சீர்படுத்தும்படி ஆணையிட்டான். மகேந்திர ஜாலம் போல் அசுரத் தச்சர்கள் விரைவிலேயே முன்னைக் காட்டிலும் பன்மடங்கு எழிலும் வலுவும் பொருந்திய மதில்களை மகேந்திரபுரிக்குக் காப்பாக அமைத்தனர். பதினாயிரம் வெள்ளம் படைகளுக்குத் தலைவனை மகாகாயனை எல்லைக் காவலுக்கு வைத்தான் பானுகோபன்.

அன்றிரவு நீங்கியது. கதிரவன் கதிர்களை வீசி இருளை நீக்கி ஒளியைப் பெய்தான். பானுகோபன் தன் காலைக் கடன்களை முடித்துக் கொண்டான். தனது பாட்டியாகிய மாயாதேவியை நினைந்து வேண்டினான். மாயை அந்தக் கணமே அவன் முன் தோன்றி, ''குழந்தாய்! என்னை அழைத்த காரணம் என்ன?'' என்றாள்.

''பாட்டி! நான் நால்வகைச் சேனைகளுடன் சென்று போரிட்டும் முருகனின் தூதனிடம் வலிமை குன்றித் திரும்பி விட்டேன். அதனால் எனக்குப் பெரும் அவமானம் நேர்ந்ததோடு மாறாத பழியும் நேர்ந்தது. பாட்டி! என்னோடு போர் செய்து வெற்றிபெற்ற பகைவர்களை இன்று நான் வெல்லுவதற்குப் படை தந்தருள்க'' என்று பானுகோபன் வேண்டிக் கொண்டான்.

மாயா தேவி ஒரு மாயப் படைக்கலத்தை உண்டாக்கிப் பானுகோபன் கையில் கொடுத்தாள். ''பௌத்திரா! இப்படைக் கலம் பகைவர்களின் அறிவை மயக்கும். இதனை விடுத்தால் வெற்றி உனக்கே'' என்று கூறி மீண்டாள்.

பானுகோபன் மிகவும் மகிழ்ந்து போர்க் கோலம் பூண்டு தேரில் ஏறிப் புறப்பட்டான். அளவற்ற தெய்வாஸ்திரங்களையும் அவன் கொண்டு சென்றான். அவனுடன் நாற்பதினாயிரம் வெள்ளம் சேனைகள் சென்றன.

மதிற்புறத்தை அடைந்த அசுர ராஜகுமாரன் ஆயிரங் குதிரை முகங்களைக் கொண்ட ஒரு தூதனை அழைத்து, ''நீ கந்தப்பனின் பாசறைக்குச் செல்வாய். வீரவாகு தேவரிடம், 'இன்றைய யுத்தத்தில் உனது உயிரைக் கவருவதற்காகப் பானுகோபன் வந்திருக்கிறான். உடனே விரைந்து போருக்குப் புறப்படு' என்று தூது சொல்லி வா'' என்று அனுப்பினான்.

வீரவாகு தேவர், தூதன் சொன்னதைக் கேட்டுச் சிரித்தார். ''பானு



# "அப்பா அம்மா செய்யறதெல்லாம் தப்பு தான் . . . ஆனல்

"...ஆனல் இந்த விஷயத்தில் அவர்கள் செய்வது சரியான காரியம்தான். அவர்கள் இரண்டு பேருக்குமே பாங்க் ஆஃப் பரோடாவில் கணக்கு இருக்கிறது. எனக்கு பதினறு வயதானதும் நானும் ஒரு கணக்கு வைத்துக்கொள்ளலாம் என்கிறார்கள். நானே பணம் போட்டு வாங்கலாம். அதோடு 4% வட்டியும் கிடைக்கும். அதுவரை என் சிறு உண்டிப்பெட்டியை நான் நிரப்பிவருகிறேன்..."

இன்றைய மக்கள், எத்தனையோ வகை தொழில்புரியும் மக்கள், பாங்க் ஆஃப் பரோடாவில் கணக்கு வைத்துக்கொள்கிறார்கள். (அவர்கள் அதையே பயன்படுத்த காரணங்கள் என்ன? அந்த பாங்கு நவீன வசதிகளுடன் சீரான முறையில் நடைபெறுகிறது। மக்கள் ஆலோசனை பெற அங்கே போகலாம். அங்கே உதவி கிடைக்கிறது என்பதும் அங்கு அவர்களை கவனித்துப் பணிபுரிகிறார்கள் என்பதும் பொதுஜனங்களுக்குத் தெரியும்). ஆம். பாங்க் ஆஃப் பரோடா ஒவ்வொரு வாடிக்கைக்காரரின் தேவையையும் உணர்ந்து சேவை செய்கிறது. எனக்கும் கூட.

மதராஸ் ராஜ்யத்தில் எங்களுக்கு கோயம்பத்தூர், லால்குடி, மணச்சநல்லூர், தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, இவ்விடங்களிலும், மதராஸ் நகரில், நார்த் பீச் ரோடு (முக்கிய கிளைக் காரியாலயம்), எரபாலு செட்டி தெரு, மைலாப்பூர், தியாகராயநகர், அம்பத்தூர், மௌண்ட் ரோடு, இவ்விடங்களிலும் கிளைகள் உள்ளன.

## மைனர் கணக்கு

தி
பாங்க் ஆஃப் பரோடா
லிமிடெட்
(ஸ்தாபிதம்: 1908)
தலைமை ஆபீஸ்: பரோடா

'உங்கள் சேவை எங்கள் கடமை' என்ற தலைப்பில் எங்கள் பல்வேறுவகைப் பணிகளை விளக்கும் இலவச வெளியீட்டைக் கேட்டுப் பெறுங்கள்

கோபன் உயிரைக் கவருவதற்காக நான் இதோ வருகிறேன் என்று அவனிடம் போய்ச் சொல்'' என்று கூறினார். பின்னர் துணைவர்கள் சூழக் கந்தக் கடவுளை அணுகி அவரது திருவடிகளை வணங்கி நின்றார். ''பானுகோபன் மாயை செய்தால் என் வேல் வந்து துணை செய்யும்'' என்று அருளி அவர்களுக்கு விடை தந்து அனுப்பினார் ஆறுமுகன். மாயைதனை அழிக்கும் ஞானத்தின் உருவேயன்றோ வேலாயுதம் ?

பூத சேனைகளும் அவுண சேனைகளும் மோதின. அப்போரில் பூதர்கள் சிலரும் அவுணர்கள் பலரும் இறந்தனர். அன்று வீரவாகுவுக்கும் பானுகோபனுக்குமிடையே அற்புதமான போர் நடைபெற்றது. பானுகோபன் சீறியெழுந்து வருணப் படையை விடுத்தான். அது ஊழிக் காலத்துக் கடல் வெள்ளம் போல் பரந்து விரைந்தது. வீரவாகு தேவர் அதற்கு எதிராக அக்கினிப் படையை விடுத்தார். அந்தப் படையிலிருந்து புகையும் பொறியும் எழுந்து அண்டங்கள் வெடித்தன. கங்கை வற்றியது. கடல்கள் கருங்கி மலைகள் வெடித்து நிலம் பிளந்தது. அக்கினிப் படை உலகம் எல்லாம் எரிய வந்து பானுகோபனின் வருணப் படையை வற்றச் செய்து விழுங்கியது. பானுகோபன் வாயுப் படையை விடுத்தான். யுகாந்த மாருதம் போல் சீறிச் சென்ற அந்தப் படை அக்கினிப் படையை அணைத்துப் பூதப் படைகளைக் கொல்ல வந்தது. வீரவாகு தேவர் நாகப் படையை விடுத்தார். அந்தப் படை அளவற்ற பாம்புகளின் கூட்டமாய்ச் சென்று, வாயுப் படையை உண்டது. பானுகோபன் கருடப் படையை விடுத்தான். அதனால் நாகப் படை அழிந்தது. கோபமுற்ற வீரவாகுதேவர் நந்திப் படையை ஏவினார். அந்தப் படை எண்ணற்ற இடபங்களின் உருவுடன் அண்டங்கள் அதிர ஆரவாரம் செய்து சென்று கருடப் படையை அழித்தது. பானுகோபன் இமயப் படையை விடுத்தான். நந்திப் படை அதனையும் அழித்தது. நந்திப் படையின் ஆற்றலைக் கண்ட பானுகோபன் பிரம்மப் படையை விடுத்தான். அந்தப் படையும் நந்திப் படையைக் கண்டு வணங்கிச் சென்றது. பானுகோபன் விஷ்ணுப் படையை ஏவினான். அது நந்திப் படையுடன் போர் புரிந்து கொண்டிருந்த போது வீரவாகு தேவர் வீரபத்திரப் படையைச் செலுத்தினார். வீரபத்திரப் படை விஷ்ணுப் படையை அழித்தது. அதனைக் கண்ட பானுகோபன் சிவப் படையை எடுத்து வழிபட்டு விடுத்தான். உடனே வீரவாகு தேவரும் சிவப் படையைப் பூசித்து விடுத்தார். இரு சிவப் படைக் கலங்களும் ஊழிக் காற்றையும், தீயையும், நஞ்சையும், நீரையும், காளிக் கூட்டங்களையும் காவர் கூட்டங்களையும் உண்டாக்கிக் கொண்டு எங்கும் போர் செய்தன. உருத்திர கணங்களும் தோன்றிப் போர் செய்தனர். பலவிதமான ஆயுதங்களும் மழைபோல் பொழிந்தன. மேரு மலை தூளாயிற்று; கடல் வற்றியது; உயிர்கள் யாவும் துடித்து உலைந்தன; குலமலைகள் குலைந்தன; அச்சத்தினால் பூதேவியும், சீதேவியும் திருமாலைத் தழுவிக் கொண்டார்கள். தேவர்கள் நிலைதடுமாறி ஓட, பானுகோபனுடன் வந்த சேனைகள் விலகாமல் நின்று யுத்த சக்தி தாங்க முடியாமல் அழிந்தன.

பானுகோபன் ஒருவனே உயிர் பிழைத்து நின்றான். ''ஊழிக் காலம் இதுதானோ?'' என்று அஞ்சி நின்றான்.

வீரமகேந்திரபுரி அஞ்சி நடுங்குவதைக் கண்ட சூரபன்மன், ''இவ்வாறு நிகழ்வதற்கு என்ன காரணம்?'' என்று அறிந்து வருமாறு தூதர்களை அனுப்பி நடந்தவற்றை அறிந்தான். 'பானுகோபன் சிவப் படையை விடுத்தும் வீரவாகுவை வெற்றிகொள்ள முடியவில்லையா?' என்று ஆச்சரியமும் ஆத்திரமும் ஒருங்கே அடைந்தான். (தொடரும்)

---

அந்த இதழின்

இசை உலகம்
வாழ்த்தும்
லயக்கலைஞர்

சிறப்பு அம்சம்






வி. கோபாலன்



ஒரு கிருஷ்ணபட்சத்து ஆவணித் திங்கள்; ரோகிணி நட்சத்திரம். இரவு நேரம். கொடிய அரக்கன் கொற்றவன் கம்சனின் சிறைக்கூடம். உள்ளே நிலைகொள்ளாமல் துடிக்கிருள் தேவகி. அவள் துன்பத்தைக் காணச் சகிக்காது பரபரப்புடன் கைகளைப் பிசைந்து கொள்கிறார் வசுதேவர். இரவு வளர்கிறது. நடுவானத்திலிருந்த நிலவு புதுப் பொலிவுடன் மிளிர்கிறது. மேகக் கூட்டங்கள் தாழ்ந்து பூமிக்கு வருகின்றன. மலர்ச்செடிகள் இதழ் விரித்து மணம் கமழ்கின்றன. புது மணம் கொண்டு தவழ்ந்தோடி வருகிறது தென்றல். இருள் கவ்வியிருக்கும் கீழ்வானத்தில் ஒரு சத்திய மின்னல் பளிச்சிடுகிறது.

சிறைக்கூடத்தில் வீறிட்டு அழுகிறது ஒரு பிஞ்சுக் குரல். குரல் வந்த திசை நோக்கிக் குதூகலத்துடன் திரும்புகிறார் வசுதேவர்.

"கண்ணன் பிறந்தான் — எங்கள்
கண்ணன் பிறந்தான் — இந்தக்
காற்றதை எட்டுத் திசையிலும் கூறிடும்"

என்று குழலோசைக் கண்ணன் பிறந்த மகிழ்ச்சியை அநுபவித்துப் பரவசப்படுகிறார் நம் மகாகவி.

திருமாலின் தசாவதாரங்களுள் பால விளையாடல்களும், சிருங்கார லீலைகளும் புரிந்து இணையற்ற வீரம் கொண்டு சத்தியக்கோலம் பூண்ட கிருஷ்ணாவதாரமே பல்கலைப் பெருமைகள் கொண்டு பலரையும் கவர்ந்துள்ளது. கண்ணன் அடியார்களின் அபிமான தேவனாகப் போற்றப்பட்டு வந்திருக்கிறான். பாலகனாகவும், இளைஞனாகவும், வீரனாகவும் கண்ணன் புரிந்த பல லீலைகள் கலைஞர்களுக்குக் கவர்ச்சிகரமான விஷயங்களாக இருந்து வந்திருக்கின்றன. கண்ணனது பல்கலை லீலைகளும் ராஜபுதன ஓவியங்களில் காணப்படுகின்றன.

கிருஷ்ண வழிபாடு தமிழ் நாட்டில் சங்க காலத்துக்கு முன்பே பிரபலமாயிருந்தது. சங்கப் புலவர் ஒருவர் பாடல், கண்ணன் 'அரவணை'யில் பள்ளி கொண்டிருப்பதாகக் குறிப்பிடுகிறது. கண்ணனும், பலராமனும் திருமாலிருங்குன்றம் என்ற இடத்தில் வசிப்பவர்கள் என்கிறது பரிபாடல். காதலி நப்பின்னையுடன் கண்ணன் புரியும் நடனத்தின் அழகைச் சிலப்பதிகாரம் போற்றுகிறது.

ருக்மிணியும், சத்தியபாமாவும் கண்ணனின் பிரிய நாயகிகள் என்பதை யாவரும் அறிவர். ராதாவுடன் கண்ணன் நிகழ்த்திய சிருங்கார லீலைகள் பிரசித்தமானவை. கண்ணனின் நாயகியான ராதாவைப் பிற்காலக் கற்பனை எனச் சிலர் சொன்ன போதிலும், மிகப் பழமையான மத்ஸ்ய புராணம், "ருக்மிணி த்வாரவான் ... ராதா பிருந்தா வனே வனே" எனக் குறிப்பிடுவதை மறுக்க, மறுக்க முடியாது. ருக்மிணியையும் சத்திய பாமாவையும் போன்று ராதாவும் கண்ணனின் பிரியநாயகியே. ருக்மிணி, பாமா, ராதாவைப் போல் அல்லாது தமிழ் நாட்டில் மட்டுமே கண்ணனின் காதலியாகப் போற்றப்படுபவள் நப்பின்னை. கண்ணன் — நப்பின்னை வழிபாட்டைப் பற்றி அப்பரும், சம்பந்தரும் கூடத் தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளனர். ஆழ்வார்கள் அருளிய திருவாய்மொழியும் கண்ணனையும், நப்பின்னையையும் போற்றுகிறது. கண்ணனும், நப்பின்னையும் ஆடும் நடனம் ஒன்று "ஆய்ச்சியர் குரவை" என்று பிரசித்தி பெற்றிருந்தது.

மகாபலிபுரத்து ஆதிவராஹர் கோயில் கல்வெட்டு, தசாவதாரங்களை வகைப்படுத்துகையில், கிருஷ்ணாவ



★ குடந்தை ராமஸ்வாமி கோயிலில் உள்ள ராதா கிருஷ்ணன்.
★ கண்ணனின் மற்றொரு திருக்கோலம்.
★ மணியம் தீட்டிய ரஜபுதன பாணி ஓவியம்.

தாரத்தை விடுத்து, பௌத்தாவதாரத்தைச் சேர்த்துக் கொள்வது விந்தையே.

"மத்ஸ்ய — கூர்மோ — வராஹஸ்ச
நாரசிம்ஹஸ்ச — வாமன
ராமோ — ராமஸ்ச — ராமஸ்ச
பௌத்தோ — கல்கிசதேதசா"

ஆனாலும் மஹாபலிபுரத்தில் இரு இடங்களில் கண்ணன் சிற்பங்கள் காணப்படுகின்றன. கிருஷ்ண மண்டபத்தில் — கோவர்த்தனதாரியையும், தர்மராஜ ரதத்தில் காளியமர்த்தனரையும் காண்கிறோம்.

கிருஷ்ண வழிபாட்டின் மேன்மையையும், சிறப்புக்களையும் ஆழ்வார்கள் பாசுர மலர்கள் தொடுத்துப் பரவச் செய்ததும், அவ்வழிபாட்டு முறை புதிய உத்வேகம் பெற்றது. முற்காலச் சோழர்கள் காலத்தில் கிருஷ்ண வழிபாடு தமிழ் மண்டலமெங்கும் பரவிப் பரிமளிக்கலாயிற்று. சோழர் கற்றளிகளில் கண்ணன் வடிவங்கள் உரிய இடம் பெற்றன.

சோழர்களைத் தொடர்ந்து கிருஷ்ண வழிபாட்டில் ஈடுபாடு கொண்டவர்கள் விஜயநகர வேந்தர்கள். கிருஷ்ணதேவராயர் கலிங்க வெற்றிக்குப் பின் உதயகிரியிலிருந்து திரும்புகையில் ஹம்பியில் ஓர் அழகிய கிருஷ்ண விக்கிரகத்தைக் கொண்டு வந்ததாக வரலாறு கூறுகிறது. குடந்தை ராமசுவாமி ஆலய ராதாகிருஷ்ணர் சிற்பம் விஜயநகரக் கலைத் திறனுக்கு ஓர் எடுத்துக்காட்டு. ஹொய்சளர் கலைகளிலும் கண்ணனுக்கு உரிய இடமுண்டு. பேலூரில் காணும் கோவர்த்தனதாரி







★ கோவர்த்தனதாரி பேலூர். இது ஹோய்சளர் சிற்பம்.
★ ருக்மிணியும் சத்யபாமாவும் இருபுறமிருக்கக் கிருஷ்ணன் காட்சியளிக்கிறார்.

சிற்பம் சிறந்ததொரு கலைப் படைப்பு. அழகிய கிரீடமும், அணிகலன்களும் பூண்டுள்ள கண்ணன் ஒற்றைக் கையால் கோவர்த்தனகிரியைத் தூக்கும் அனுபவ அழகு அற்புதச் சித்திரிப்பே. திருவனந்தபுரம் ஓவியங்களில் மலையைக் குடையாகப் பிடிக்கும் மாயவனின் ஓவியம் புகழ் பெற்றது.

எண்ணெய்க் குடமுருட்டி எடுக்க எடுக்க மாளாத இன்பங்களை அளித்த கண்ணனின் திருவிளையாடல்களை ஆழ்வார்கள் மட்டுமின்றிப் பாரதத்தின் பக்த கவிகள் அனைவருமே போற்றிப் புகழ்கின்றனர்.

மகாகவி பாரதியோ கண்ணனைப் பலவாறாகக் கண்டு களித்துக் காவியத்திலே ஓவியத்தைச் சிருஷ்டித்திருக்கிறார்; பேரின்பத்தில் திளைக்க வைத்திருக்கிறார். கண்ணன் பிறந்த இந்தக் கோகுலாஷ்டமித் திருநாளைக் கொண்டாடும் பொழுது, இந்தக் கால வாழ்வை நினைந்து ஏங்கி வருந்தாமல் 'அந்த நாளும் வந்திடாதோ?" என்று வாழ்த்தி எல்லாம் வல்ல கண்ணனின் ஆசியைப் பெற்று இன்புறுவோமாக.

# காதல் இல்லையேல் காதல்




[நாகராஜனை அவனது அறை சக தோழர்கள் 'கோட்டா' பண்ணி அவனைக் கவிதைப் போட்டியில் இழுத்து விட்டனர். எதிர்பாராத விதமாக அவனுக்கே பரிசு கிடைத்ததைக் கண்டு கல்லூரி மாணவர்கள் அதிசயித்தனர். ஆனால் தமிழ்ப் புரொபசர் அவனை இனிக் கவிதை எழுதாமலிருக்க எச்சரிக்கை செய்ததோடு அவனிடமிருந்து பேனாவையும் பிடுங்கிக்கொண்டார். நாகராஜன் இதைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்கும் போது ஒரு மாணவி வந்து அவனிடம் ஒரு வேண்டுகோள் விடுத்தாள். அது என்ன? நாடகத்தைத் தொடர்ந்து படித்தால் தெரிந்து விடுகிறது.]

நாக: இனிமே கவிதை எழுத மாட்டேன் என்று சத்தியம் பண்ணணுமா? அது முடியாதே! ஏற்கனவே அந்தச் சத்தியத்தை வேறே ஒருத்தருக்குக் கொடுத்துட்டேன்.

மாலதி: சும்மா தமாஷ் பண்ணாதீங்க... வந்து... இந்த அற்புதமான கவிதையை எழுதின உங்க பௌண்டன் பேனாவை எனக்குத் தருவீங்களா?

நாக: ஏன் உங்ககிட்ட பௌண்டன் பேனா இல்லையா? ஐ மீன்... உங்களுக்கு எதுக்கு... நான் இனிமே எழுதலே... என்னை நம்புங்க. வாழ்க்கையிலே ஒரு முறை தவறு பண்ணினவன் திருந்தவே முடியாதா?

மாலதி: மனம் நொந்து போகாதீங்க நாகராஜன்... நீங்க நிறைய எழுதணும்... தமிழுக்கு நீங்க செய்ய வேண்டிய தொண்டு அது.

நாக: நான் நிறைய எழுதணுமா? அப்புறம் அர்த்தம் கண்டுபிடிக்கிறது யாரு?

மாலதி: மத்தவங்க புரிஞ்சுக்காமப் போனாப் போகட்டும். தற்காலக் கவிதைக்கு பிக்காஸோவினுடைய நவீன கால ஓவியம் மாதிரி எவ்வளவுக்கெவ்வளவு புரியாமல் இருக்கோ அவ்வளவுக்கவ்வளவு மகிமை அதிகம்!

நாக: அப்ப என்னை பீட் பண்ண யாராலேயும் முடியாது. தமிழ் புரொபஸரை வேணுமானால் கேட்டுப் பாருங்க.

மாலதி: அவருக்கு உங்க கவிதை ரொம்பப் பிடிச்சதா?

நாக: பிடிச்சதாவா? நல்லாக் கேட்டீங்க போங்க... என் பேனாவை அவர்தான் வாங்கிக்கிட்டாரு! என் மேலே அவருக்கு அவ்வளவு கொதிப்பு... (தடுமாறி)..., வந்து.... மதிப்பு...!

மாலதி: இருக்காதா பின்னே... ஏதோ நான் கொடுத்து வைச்சது அவ்வளவுதான்... நான் ஆசைப்பட்ட பொருள் அவர் கைக்குப் போயிடுத்து... மிஸ்டர் நாகராஜன்...

நாக: மிஸ்....மாலதி!

மாலதி: வந்து... உங்களை நான் அடிக்கடி சந்தித்துப் பேச விரும்புகிறேன். தமிழ்க் கவிதைகளைப் பத்தி, உங்ககிட்டேயிருந்து நிறையத் தெரிஞ்சுக்க விரும்பறேன்.

நாக (திடுக்கிட்டு): என்ன? தமிழ்க் கவிதையைப் பத்தி எங்கிட்டே இருந்து தெரிஞ்சுக்கப் போறீங்களா?

மால: ஏன்? நான் அதுக்குத் தகுதியானவள் இல்லையா?

நாக: என்னை இதோட விட்டுடுங்களேன்... ப்ளீஸ்...

மாலதி (கோபமாக): உங்களுக்கு என்னோட பேச இஷ்டமில்லே. அவ்வளவுதானே! இந்தக் கவிஞர்களே எப்பவும் இப்படித்தான். திறமைக்கேத்த திமிர்!

நாக: எனக்குத் திமிரா? பயம்... உதறல்..

மாலதி (மீண்டும் தயமாக): இப்படியெல்லாம் சொல்லித் தப்பிச்சுக்கப் பார்க்காதீங்க.... நான் உங்களைத் தொந்தரவு பண்றேன்னு நினைக்கிறீங்களா?

நாக: நோ! நோ!... நம்ம மீட் பண்ணுவோம். எவ்வளவு வேணுமானாலும் பேசுவோம்.... பட் ... ஆனா .... அந்தக் கவிதையைப் பத்திப் பேசாம இருக்க முடியாதா?

மாலதி: சரி... கவிதையைப் பத்திப் பேச வேண்டாம்.

நாக: தாங்க்ஸ் மாலதி! தாங்க்ஸ்... மாலதி, நாளைக்கு எத்தனை மணிக்கு மீட் பண்ணலாம்?

மாலதி: சாயந்திரம்... காலேஜ் முடிஞ்ச உடனே... லைப்ரரிலே.

நாக: ரைட், லைப்ரரிலே நான் ஹாலேயிலே போய் உட்கார்ந்துடறேன்... ஐ மீன்... காலேஜ் முடிஞ்ச உடனே வந்து...வந்து....கவிதையைப் பத்திப் பேச மாட்டோமே?

மாலதி: சே! சே... கவிதையைப் பத்திப் பேசுவானேன்.... கவிதையை — பேசவேண்டாம். நீங்க ஒரு கவிதை எழுதிக்கிட்டு வாங்க.

நாக (அசந்து நின்று): வாட்?

மாலதி: யெஸ்! நீங்க என்னைப் பத்தி நினைக்கிறதை ஒரு கவிதையா எழுதிக்கிட்டு வாங்க! நீங்க கவிதை எழுதிக்கிட்டு வரலேன்னு உங்ககிட்டே நான் பேசவே மாட்டேன்.

நாக: மிஸ் மாலதி.... ப்ளீஸ்...ப்ளீஸ்...

மாலதி: டா...டா... (சிரித்துக் கொண்டே போய் விடுகிறாள்.)

நாக (செய்வதறியாமல்): அய்யோ! தமிழ் வாத்தியாரே! நீங்களே தேவலே போலிருக்கே! அம்மா, தமிழ்த் தாயே! நீ என்ன கிறிஸ்துவ மதமா? ஒரு கன்னத்துலே அறைஞ்சா இன்னொரு கன்னத்தைக் காட்டுன்னு ஏசுநாதர் சொன்ன மாதிரி, ஒரு கவிதையாலே அடிச்சவனுக்கு, அடுத்த கவிதைக்கு உடனே சான்ஸ் தருகிறாயே! ஹா! தமிழ்த் தாயே!

(காட்சி முடிவு)

காட்சி - 3

கல்லூரி ஹாஸ்டல்-தோட்டம்:

[மாணவிகள் கல்லூரி இடைவேளை நேரத்தில் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள். பலவிதமான சிகையலங்காரங்கள். ஒற்றைப் பின்னல், இரட்டைப் பின்னல், அஜந்தாக் கொண்டை.... இப்படியாக. ஒருசில மாணவிகள் ஆணுக்குப் பெண் சரிநிகர் சமானம் என்று நிரூபிப்பதே போல் தலையில் 'ரோப்' மாதிரி பாப் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்— தமிழ்ப் பெண்கள்தான்! மாணவிகள் உடுத்தியிருக்





கும் புடவையிலும் சாயம், முகத்திலும் சாயம், உதட்டிலும் சாயம்! உள்ளத்தைப் பற்றி நாமறியோம்! அவர்களிடையே பேச்சு ஒன்றும் அதிகமாக இல்லை. ஒரே சிரிப்பொலிதான். கிக்கிக்கீ என்று அடிக்கடி அவர்கள் சிரிப்பது காதைப் பிளக்கிறது. அந்தச் சமயத்தில் நாகராஜன் அவ்வழியாகச் செல்கிறான். மாணவிகளிடையே சிரிப்பு நிற்கிறது.... அப்பாடா!]

ஒரு மாணவி: வத்ஸலா.... டீ ....அங்கே பாரேன்....அது போறது.

வத்சலா: எது டீ? ரேவதி... எதுடீ?...

ரேவதி: அதாண்டி, அந்தப் பித்துக்குளி... நேத்து தமிழ்க் கவிதையிலே பிரைஸ் வாங்கித்தே...

வத்: ஓ!.. (பார்த்து) ஆமாண்டி.... அதே தான்.... கிரிஜா பாரேன்...

கிரிஜா: போடி.... பெரிய இது அது!... அதைப் பார்க்கணுமாக்கும்! (அவளது கடைக் கண்பார்வைநாகராஜனை நோக்கிச்செல்கிறது)

ரேவ: இவ எப்பவும் இப்படித்தாண்டி. இவளுக்கு எதுலேயும் இன்டரெஸ்டே இல்லே. சதா படிப்புத்தான். சுத்த மக்கு...

வத்: ஸ்ஸ்.... டீ.... அது நம்பளைத் திரும்பிப் பார்க்கிறது....

ரேவ: பாரேன் அது கொழுப்பை... நம் பளையே முறைச்சுப் பார்க்கிறது...

வத்: அதும்பாட்டிலே போக வேண்டியது தானே...... ஒய் ஷுட் ஹி லுக் ஹியர்?

ரேவ: கரெக்ட்! அதைத்தான் நானும் கேட்கிறேன்.

கிரி: நீங்க இத்தனை நேரம் அவனை முறைச்சுப் பார்க்கலியா?

வத்: உனக்கு எங்க பேச்சு பிடிக்கலேன்னு பேசாமல் எழுந்து போயிடேன். யூ ப்ளீஸ் கெட் அவுட் !

ரேவ: வெல் ஸெட்.

கிரி: அது போகட்டும். அவன் கையிலே ரிஸ்ட் வாட்ச் கட்டிண்டிருந்தானே, அந்த ஸ்ட்ராப் ரொம்ப நன்னாயில்லே?

வத்: ஓ மை காட்! அவ்வளவு தூரம் கவனிச்சுட்டியா நீ.........

கிரி: ரேவதி, உனக்கு அந்தக் கவிதைக்கு அர்த்தம் புரிஞ்சுதாமா?

ரேவ : அதுக்கு அர்த்தம் வேறயா ...... நான்ஸென்ஸ் !

வத்: தமிழ் வாத்தியார்தான் அர்த்தம் சொன்னாரே ?

ரேவ: தமிழ்க் கவிதைக்கு அர்த்தம் வேறே உண்டா? எல்லாம் பேத்தல் !

வத்: நோ! நோ! சில டமில் போயெம்ஸ் ரொம்ப பியூட்டிபுல்லா இருக்கும்....

ரேவ: நீ படிச்சிருக்கியோ?

வத் (அவமானம் தாங்காமல்): நோ ! நோ ! நான் இந்த டமில் பாட்டு, கவிதை யெல்லாம் தொடவே மாட்டேன்.

கிரி: பாரதி பாட்டெல்லாம் நல்லா இல்லேயா ?

வத்: பாரதி யாரு?

கிரி: பலே, பாரதி யாருன்னு கேக்கறியா? இந்த மாதிரி வருங்காலத் தமிழர்கள் 'பாரதி யார்?'னு கேப்பாங்கன்னுதான், செத்துப் போன தமிழன்பர்கள் — அவருக்குப் 'பாரதி யார்'னே பேர் வைச்சுட்டாங்க.

ரேவ: இன்னொ பேசறியே... நீ டிருக்றன் படிச்சிருக்கியா ?

கிரி: என்னது?

ரேவ: ஹேவ் யூ ரெட் டிருக்றன் ?

கிரி: நீ படிச்சிருக்கியா?

ரேவ: நான் அதை இங்கிலீஷ்லேதான் படிச்சிருக்கேன்.

கிரி: அதான் திருக்குறள் உன் வாயிலே மாட்டிக்கிட்டு இப்படித் திண்டாடுது...

[இவர்கள் பேச்சைக் கேட்டுக்கொண்டு மாலதி அங்கு வருகிறள்.]

வத்: சும்மா பேசாதேடி.... தமிழ்லே ஏது நல்ல கவிதை? இங்கிலீஷ் பொயட்ரி மாதிரி தமிழ்லே வருமா ?

ரேவ: ஒரு ஷெல்லி, ஒரு மில்டன், ஒரு கீட்ஸ் உண்டா தமிழ்லே?

மால (குறுக்கிட்டு): அவங்க எழுதினது ஏதாவது நீ படிச்சிருக்கியா?

ரேவ: ஓ! ஐ லவ் மில்டன் அன்டு ஷெல்லி!

மால: யாராரு ஒருத்தரை லவ் பண்ணு போதும்...... நல்ல வேளை திருவள்ளுவரையும் சேர்த்து லவ் பண்ணும போனியே. பேசற திலேயே இவ்வளவு இங்கிலீஷ் வாடை...... சரி, நான் கேட்டதுக்குப் பதில் சொல்லு... ஷெல்லி, மில்டன், கீட்ஸ் யாருதாவது கவிதை படிச்சிருக்கியா?

ரேவ: ஓயெஸ்...... மில்டன்து.... இது...

மால: எது........?

ரேவ: அதான்...... மில்டன் எழுதினது... பியூட்டிபுல்.... என்ன லேங்வேஜ்... என்ன நடை........ அது பொயட்ரி! அது கவிதை!

மால: அந்தக் கவிதை பேரென்ன?

ரேவ: அதான்...... அது...... வத்ஸலா அது பேரென்னடி...... ?

வத்: நீ எதைச் சொல்றேன்னே புரியலே... நான் போறேண்டி, டைம் ஆறது....

ரேவ: நானும் வரேண்டி!...... (போக முயற்சி செய்கிறள்)

மால: இரு...இரு...பதிலே சொல்லாமல் போறியே ?

ரேவ: ஏன் இந்த மாதிரி சுத்தி வளைக்கிறே? நேரேயே கேட்டுடேன். உனக்கு நாங்க அந்தப் பித்துக்குளியைப் பத்திப் பேசினது பிடிக்கலே....... அந்த ஆத்திரத்தை இப்படிக் காட்டறே....

மால: நீங்க யாரைப் பத்திப் பேசினீங் கன்னுகூட எனக்குத் தெரியாது.... நான் இப்பத்தான் வந்தேன்.....

ரேவ: சும்மா ஏண்டி பொய் சொல்றே.. கவிதை பிரைஸ் வாங்கித்தே, அந்தப் பித்துக்குளி.....

மால: அவரையா பித்துக்குளின்னு சொல்றே ?

ரேவ: பின்னே யாரைச் சொல்றது? அது நிச்சயமா பித்துக்குளிதான். இல்லாட்டா தமிழ்க் கவிதை எழுதுமா ?

மால: ரேவதி...... அவரைப் பத்தித் தெரி யாம இந்த மாதிரியெல்லாம் பேசாதே.

கிரி: உனக்கு ஏண்டி கோவம் வரது.......?

ரேவ: அய்யோ! நேத்து நீ கவனிக்கலியே கிரிஜா! அது பிரைஸ் வாங்கிண்டு வரச்சே, இவ தனியா போய் கன்ராஜுலேட் பண்ணிப் பேசிட்டு வரா!...... அப்பவே நான் நினைச் சேன்..........

மால: என்ன நினைச்சே?

ரேவ: அதை இப்ப சொல்வானேன்..... எனக்கு டைம் ஆறது...... (போகிறள்)

மால: போய் இப்பவாவது மில்டனைப்படி..

கிரி: மாலதி அவ சொன்னது இருக்கட்டும். நிஜமாத்தான் கேக்கிறேன்—உனக்கு என்னடி அவன் மேலே இன்ட்ரெஸ்ட் ?

மால: எனக்கு என்ன இன்ட்ரெஸ்ட்.... நல்ல கவிதை எழுதினர்....... பாராட்டி னேன். தட்...., ஸல்...... ஆல்.....

கிரி (கிண்டலாக): ஓ!

மால: ஏன்..... என்ன?

கிரி: கேக்கறேன்னு கோவிச்சுக்காதே.... அது என்ன கவிதையா? குருட்டு அதிர்ஷ்டத்திலே பிரைஸ் கிடைச்சுடுத்து !

மால: உனக்கென்ன தெரியும்... எவ்வளவு சின்ன வார்த்தைகளே வெச்சிக்கிட்டு, எப்பேர்ப்பட்ட கவிதை எழுதிட்டார் ! அவர் பிறவிக் கவிஞர்!

கிரி: ஐ ஸீ..... அப்ப இன்னொரு கவிதை எழுதட்டுமே பார்க்கலாம்.....

மால: ஒண்ணென்ன... எவ்வளவு வேணும் னுலும் எழுதுவார். எனக்குக்கூட ஒண்ணு எழுதித் தரதா சொல்லியிருக்கார்.

கிரி: அவ்வளோ தூரம் போயிடுத்தா ?

மால: எது?

கிரி: உங்க காதல் !

மால: ஏதாவது உளறாதே. கல்யாணம் ஆகாத ஆணும், பெண்ணும் பேசிக்கிட்டா உடனே அது காதலாத்தான் இருக்கணுமா ?

கிரி: சே! சே! கல்யாணம் ஆகாத ஆணும் பெண்ணும்—அவங்க காதலைப் பத்தியா பேச வாங்க ?...... லால்பகதூர் சாஸ்திரிக்கும், மொரார்ஜி தேசாய்க்கும் இருக்கிற 'லடாய்' பத்தித்தான் பேசுவாங்க.

மால: சரி, என்னே நம்பினு நம்பு. நம்பலேன்னு போயேன். உன்னோட எனக் கென்ன வீண் பேச்சு?

கிரி: அதானே? அந்த நேரத்துலே அவ ரோடயாவது பேசலாம் !

மால: சே! இந்தக் காலத்திலே, ஒரு கல்யாணமாகாத ஆணும் பெண்ணும் பேசினு உடனே காதல்னு பட்டம்! சே!

கிரி: காலம் அப்படி இருக்கு..... ஒரு ஆணும் பெண்ணும் அதிகம் பேசினு காதல். கல்யாணமான ஆணும் பெண்ணும் அதிகம் பேசினு—டைவோர்ஸ் — விவாகரத்து !

(காட்சி முடிவு)

## காட்சி — 4

கல்லூரி லைப்ரரி

[கல்லூரியின் மற்ற இடங்களைப் போல் அல்லாமல் ஜன நடமாட்டமே இல்லாத அமானுஷ்யமான இடம். பீரோக்களில் இருக்கும் புத்தகங்கள் யார் கையும் படாமல், தூசி படர்ந்து அடுக்கடுக்காக இருக்கின்றன. மாலதி ஒரு நாற்காலியில் அமர்ந்து ஏதோ புஸ்தகத்தைப் புரட்டிக் கொண்டிருக்கிருள். அடிக்கடி கையிலிருக்கும் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிருள். அப்போது ஏதோ பலிபீடத்தை நோக்கி வரும் ஆடுபோல நாகராஜன் வந்துகொண்டிருக்கிறுன்]

மால (சந்தோஷமாக): குட் மார்னிங் நாகராஜன் !

நாக: உம்...குட்மார்னிங்..... மாலதி.

மால: கவிதை எழுதிட்டீங்களா ?

நாக (தயக்கத்தோடு): நீங்க ஒண்ணும் தப்பா நினைச்சுக்க மாட்டீங்களே....

மால: உங்களைப் போய்த் தப்பா நினைக்க முடியுமா? சொல்லுங்க.....

நாக: வந்து... வந்து... இந்தக் கவிதை...

மால: கவிதை எழுதிக்கிட்டு வரலே....! இல்லையா? ஆல்ரைட்! என் வார்த்தையிலே உங்களுக்கு எவ்வளவு மதிப்புன்னு தெரிஞ்சுக் கிட்டேன்...... நான் வரேன்...

[எழுந்திருக்கிருள்.]

நாக (அவளை மறித்து நின்று): ப்ளீஸ்.... நான் சொல்றதைக் கொஞ்சம் கேளுங்க.....



சக நடிகை: குரூப் டான்ஸில் என்னேயும் குளோஸப்பிலே எடுங்கோ சார்!
டைரக்டர் : உன்னே குளோஸப்பிலே எடுத்து என் படம் குளோஸாகி விட்டால்?

உங்க வார்த்தைக்கு மதிப்பு வெச்சுத்தான் நான் இங்கே வந்திருக்கேன்..... நாலு வருஷமா இந்தக் காலேஜிலே படிக்கிறேன். இன்னிக்குத்தான் முதல் தடவையா லைப்ரரி உள்ளே காலெடுத்து வெச்சிருக்கேன்.

மால: இதெல்லாம் எதுக்கு நாகராஜன் வீண் பேச்சு...... என்னைப் பத்தி என்ன நினைக்கிறீங்கன்னு...கவிதை எழுதினீங்களா இல்லையா? கேட்ட கேள்விக்கு உண்டு, இல்லேன்னு பதில் சொல்லுங்க.....

நாக: சர்வ வல்லமை படைத்த ஆண்டவன் சாட்சியாக நான் சொல்வதெல்லாம் உண்மை...... உண்மை தவிர.....

மால: என்ன இது உளர்றீங்க.....?

நாக : உளறலே..... நீங்க கேள்வி கேட்ட தோரணை, எனக்குச் சினிமா கோர்ட் ஸீன் ஞாபகம் வந்துடுத்து...... அதனுலேதான் பதில் சொல்றதுக்கு முன்னுலே பிரமாணம் எடுத்துக்கிட்டேன்.....

மால: பேச்சை மாத்த முயற்சி பண்ணுறீங்க. கவிதை எங்கே ?

நாக: கொஞ்சம் டைம் கொடுங்களேன்...

மால: எதுக்கு டைம்...... இன்னிக்குக் காலமே பூரா டைம் இருந்ததே.... எழுதியிருக்கலாமே.......

நாக: தெரிஞ்சா எழுதியிருக்கலாம்.

மால: தெரிஞ்சாவா?

நாக: வந்து..... உங்களுக்கு இவ்வளவு கோவம் வரும்னு தெரிஞ்சா எழுதியிருக்கலாம்னேன்..... இல்லே.... காலையிலே கொஞ்சம் வேலே இருந்தது.......

மால: அப்படி என்ன வேலே....? வேறே யாராவது கவிதை கேட்டிருந்தாங்களா?

நாக (இந்த மட்டும் ஒரு சாக்குக் கிடைத்ததே என்ற சந்தோஷத்தில்): கரெக்ட்..... கவிதை கேட்டிருந்தார் ஒரு நண்பர்... அதைத் தான் எழுதிக்கிட்டிருந்தேன்......

மால (ஏக்கத்துடன்): என்னைவிட அவர் முக்கியமாய்ப் போயிட்டாரா ? (தொடரும்)

# அவள் எங்கே?

கதை: கௌசிகன்
சித்திரம்: ரமணி..

20















# ஆல்போ-ஸாங்



## எல்லா வயதினருக்கும் ஒரு சிறந்த டானிக்

உங்களுடைய உடல் வளர்ச்சிக்கு ஆல்போ-ஸாங் அவசியம் தேவை. ஏனெனில் இதே போல் முதியவர்கள் எல்லோருடைய ஆரோக்கியத்திற்கும் உடல் வளர்ச்சிக்கும் தேவையான விசேஷப் பொருள்கள் ஆல்போ-ஸாங்கில் இருக்கின்றன.




**ஜே. அன் ஜே. டிஷேன்**
**ஹைதராபாத் (டெக்கான்)**

---

**பருக்கள் மறைந்து விடுகின்றன**
சருமம், மிருதுவாகவும் மழுமழுப்பாகவும் ஆகிவிடுகிறது

நிக்ஸோடேர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடேர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் மாக மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடேர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள் கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழுவழுப்பாகவும் இருக்கச் செய்யும் என்ற பூரண நம்பிக்கையுடன் நிக்ஸோடேர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

---




**வாணி தமிழ் இங்கிலீஷ் போதினி**
90 நாட்களில் தமிழ் மூலம் ஆங்கிலம் தானே இலக்கணமாகப் படிக்க பேச, எழுத, சுலபமாகக் கற்க பெரிய புத்தகம்.
விலை தபால் செலவோடு ரூ. 6-25.

**ஜகவாரியம் (குடிசைத் தொழில்)**
சோப், இங்க், பத்தி, ஸ்நோ போன்ற 206 புதுத் தொழில்கள் அடங்கியது.
விலை ரூ. 4-00. வி. பி. 0-85.

**தமிழ் ஹிந்தி சுபோதினி**
தமிழ் மூலம் சுலபமாக ஹிந்தி படிக்க பேச, எழுத, கற்க முடியும்.
விலை ரூ. 2-50. வி. பி. 0-85.

**குடும்ப இலகு வைத்தியம்**
பச்சிலை மூலிகைகள் கொண்டு ஆரோக்கியம், பலம்பெற வழிகாட்டும்.
விலை ரூ. 2-50. வி. பி. ரூ. 1-00.

**மாட்டு வாகடம் (பசு வைத்தியம்)**
விலை ரூ. 2-00. வி. பி. 0-85.

விக்கிரமாதித்தன் கதை விலை ரூ. 5.00
ஹஸ்தரேகை சாஸ்திரம் விலை ரூ. 3.00
தபால் செலவு தனி

**வாணி புக் டிபோ (K)**
3, மலையபெருமாள் தெரு. சென்னை-1

# திருவிளையாடல்

ஆலவாய் அப்பனின் அருட்பெரும் திருவிளையாடல்கள் புராணக் கணக்குப்படி அறுபத்து நான்கு. அதற்குப் பிறகு பக்தர்களின் அநுபவ வாயிலாகக் கிடைக்கும் திருவிளையாடல்கள் எத்தனை எத்தனையோ. விஜயலக்ஷ்மி பிக்சர்ஸாரின் தயாரிப்பான 'திருவிளையாடல்' படத்தில் கண்ணுதற் கடவுளின் விளையாட்டுப் பெருமையை முருகப் பெருமானுக்கு உமாதேவி கூறுவதாகக் கற்பனை செய்து சில நிகழ்ச்சிகளைக் கவினுறப் புனைந்திருக்கின்றனர்.



சிவபெருமான் தருமி என்ற ஏழை அந்தணனுக்குப் பொற்கிழியளித்த வரலாற்றையும், இசைப்புலவன் பாணபத்திரனின் பக்திக்கு இரங்கி ஏமநாதன் என்ற செருக்குற்ற இசை வல்லுநனை அடக்க விறகு சுமப்பவனாக வந்த திருவிளையாடலையும், கயற்கண்ணி என்ற மீனவப் பெண்ணை ஆட்கொண்ட நிகழ்ச்சியையும் தொகுத்துப் படமாக்கியிருக்கின்றனர்.

ஒரு நல்ல நடிகன் முனைந்து நடித்தால் எந்தப் பாத்திரத்திலும் சோபிக்க முடியும் என்பதை நிரூபித்துவிட்டார் சிவாஜி கணேசன். தக்ஷனின் யாகத்துக்குப் போகக் கூடாது என்று தாக்ஷாயணியைத் தடுத்தபோதும், பாண்டியனின் சபையில் நக்கீரர் 'நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே!' என்று நவின்ற போது நக்கீரனிடம் சினமுற்றுத் தீயெழ விழித்த போதும், நான்மாடக்கூடலில் விறகு விற்று இசைப்புலவன் ஏமநாதனை வென்ற போதும் அவர் நடிப்பு சபாஷ் போட வைக்கிறது. அவரது ஊர்த்துவ தாண்டவம் மெய்சிலிர்க்க வைக்கிறது. சாவித்திரி கனகச்சிதமாக நடித்திருக்கிறார். சிவனுக்குச் சவால் விடும் சரியான சக்திதான்! பாண்டியமா தேவியாக வரும் தேவிகா சிறிது நேரமே வந்தாலும் எல்லோரையும் கவர்ந்து விடுகிறார். என்றுமே பாராட்டுக்குரிய நடிகரான பாலையா, ஏமநாதனாகவே மாறிவிட்டதில் வியப்பில்லை; அநுபவ நடிப்பு பளிச்சிடுகிறது. நாகேஷின் 'திருவிளையாடலை'யும் இந்தப் படத்தில் காணலாம்.



டைரக்ஷன் பொறுப்பையும், திரைக்கதை வசனத்தின் பொறுப்பையும் ஏற்றுச் சிறப்பாய் வகித்திருக்கும் ஏ. பி. நாகராஜன் புலவர் நக்கீரராக வந்து மனத்தில் பதியும் வண்ணம் நடித்திருக்கிறார். கே. பி. சுந்தராம்பாளின் வெண்கலநாத இசை வெள்ளமான 'பழம் நீயப்பா', 'ஒன்றானவன்' என்ற பாடல்கள் நம் இதயத்தில் கலந்து ஒலிக்கின்றன. 'இன்னிசையின் சிறப்பில் சங்கீத டைரக்டர் கே. வி. மகாதேவனும், வண்ணப் படத்தின் மேன்மையில் கே. எஸ். பிரசாத்தும் முக்கியப் பங்கு பெறுகிறார்கள்.

அதியற்புத வண்ணப் படமான 'திருவிளையாடல்' தமிழ்ப் பட உலகத்துக்கு ஒரு வெற்றி.

# ஜீவகீதம்

## ஜெகசிற்பியன்

கடந்த பத்து நாட்களாகத் தன் வீட்டுத் திண்ணையே கதி என்று முடங்கிக் கிடந்த சபேசனுக்கு இப்போது அங்கு இருப்புக் கொள்ள முடியவில்லை. அவ்விடத்திலிருந்த ஒவ்வொரு பொருளும் அவனது அன்னையின் நினைவைத் தோற்றுவித்து, ஆறி வரும் மனப் புண்ணைக் கீறிக் கிளறுவதாக இருக்கவே, அந்த வேதனையிலிருந்து மீள எங்காவது போய்ச் சுற்றி விட்டு வரலாம் என்று கருதி, முதன் முறையாக வெளியில் கிளம்பினான்.

பெரிய நகரங்களின் கோலாகலமான இரைச்சல், கூச்சல்களிலும், நெருக்கப் புழுக்கங்களிலுமே பல ஆண்டுகளாக இருந்து வளர்ந்து உழன்று அலுத்துப் போயிருந்த அவனுக்கு அந்தக் கிராமப்புறத்தின் ஆழ்ந்த அமைதியும், கட்புலனைத் தடைப்படுத்தாது பரந்து விரிந்த பசுமை வெளியும், வெயிலின் தீய்ப்புத் தெரியாமல் குளுகுளுவென வீசிய காற்றும் ஒரு புத்துணர்ச்சியை ஊட்டிப் புதுத் தெம்பை அளித்தன. நடைச் சோர்வே தெரியாமல் குருடி மலை அடிவாரம் வரை போய்விட்ட அவன் அங்கேயே மனம் போன படியெல்லாம் சுற்றி அலைந்து விட்டுப் பொழுது சாயும் வேளைக்குத் திரும்பி வந்தான். அன்றிரவு நல்ல தூக்கம்.

மறு நாளும் வெளியே சுற்றி வரப் புறப்பட்ட சபேசன், கிராமத்துக் கீழண்டைப் புறம் மேற்கிலிருந்து கிழக்காக ஓடிய சங்கனூர்ப் பள்ளம் என்ற சிற்றாற்றை நோக்கி நடக்கலானான். அந்தச் சிற்றாறு கோவை நகரை வடக்காக வளைத்துக் கொண்டு ஓடிப் பேரூர்ப் பக்கமிருந்து வரும் நொய்யல் ஆற்றுடன் சங்கமமாகிறது. இடையில் ஆங்காங்கே நான்கைந்து இடங்களில் குளம் எனப்படும் ஏரி போன்ற நீர்த் தேக்கங்களை அமைத்து அச் சிற்றாற்று நீரை அவற்றில் தேக்கி வைத்து விவசாயத்துக்கெனப் பயன்படுத்தப்படுகிறது. இத்தகையதொரு குளத்தை நோக்கித்தான் அவன் இன்று நடந்து கொண்டிருந்தான்.

சங்கனூர்ப் பள்ளம் அப்போது நீரோட்டமின்றி வற்றிக் கிடந்தது. அதன் கரையோரத்தே — கவுண்டன் பாளையத்துக்கு இப்பால் இருந்த — ஒரு குளத்தில் மட்டும் ஒன்றரை ஆள் மட்டத்துக்குத் தண்ணீர் தேங்கியிருந்தது. அது பழைய தண்ணீர்; புது மழைத் தண்ணீர் வர இன்னும் இரண்டொரு மாதங்களாகலாம். குளத்தைச் சுற்றி அமைந்த கரை மேட்டில் வரிசையாகப் பனைமரங்கள் வளர்ந்து நின்றன. ஓரிடத்தில் — உட்புறக் கரைச் சரிவில் — தண்ணீரின் விளிம்பை யொட்டினாற்போல் பெரியதொரு பச்சைக் குடை மாதிரி உயர்ந்து படர்ந்து கவிந்து நின்ற வில்வ மரமொன்றின் அடியில் வந்து உட்கார்ந்தான் சபேசன்.

எழில் மிக்க இனிய சூழல்தான். எனினும் நேற்றுப்போல் அத்தனை ஆனந்தமாகவும் உற்சாகமாகவும் அலைந்து திரிய அவன் விரும்பவில்லை. காரணம், அவனுடைய மனம்தான். தாயை இழந்த துயரச் சுமையை ஓரளவு இறக்கி வைத்திருந்த அது, எவ்விதப் பிடிப்புமின்றி இருள் சூழ்ந்து கிடக்கும் அவனது எதிர்காலத்தைப் பற்றிய கவலைகளை வாரிப் போட்டுக் கொண்டு குமைய ஆரம்பித்துவிட்டிருந்தது. குறுக்கீடற்ற நெடு நேரச் சிந்தனைக்குப் பின் உள்ளமும் உடலும் சோர்ந்தவனாய் வீடு திரும்ப எழுந்து நின்ற சபேசன், அங்கிருந்து செல்லக் காலெடுத்தபோது, தன் சட்டைக் காலரைப் பின்னாலிருந்து யாரோ வெடுக்கென்று பற்றி இழுத்தாற் போலிருக்கவே சட்டெனத் திரும்பினான். ஒரு தூண்டில்



அத்தியாயம் முப்பத்துநான்கு

# தூண்டில் முள்!

முள் அவனுடைய காலரில் மாட்டிக்கொண் டிருக்க, அதிலிருந்து நீண்ட மெல்லிய நூல் அந்த வில்வ மரத்துக்கு அப்பால் இழுத்துக் கொண்டிருப்பது தெரிந்தது. பரபரப்புடன் சற்றுப் பின்னால் நகர்ந்து நூலின் இழுப்பைத் தளர்த்திவிட்டுவிட்டு அந்நூல் வழியே தன் பார்வையைச் செலுத்தினான்.

அங்கே, அந்தக் குளத்தின் சரிவில், தண் டைக் காப்புகள் அணிந்த தந்த நிறக் கால்கள் இரண்டு; அவற்றுக்கு மேலே பூத் தையல் வேலைப்பாடும், சுற்று வட்ட மடிப்பு நிறையவும் கொண்டு பம்மலாகத் தொங்கிய மஞ்சள் நிறப் பாவாடை; அதற்கும் மேலே சங்கு வண்ண அடிவயிறு தெரிய அணிந்த வெள்ளைச் சோளி; அதன் மேல் பட்டும் படாமலும் சுற்றிப் படர்ந்து இடது தோள் வழியே கீழிறங்கிக் காற்றில் பறந்தாடிய ரோஜா நிற நைலான் தாவணி; பட்டை உரித்த கதலித் தண்டு போன்ற கழுத்தில்



விலை மலிவான பிளாஸ்டிக் முத்து மாலை; செம்பருத்திப் பூவிதழ்கள் போன்ற செவிகளில் வெள்ளி வளையங்கள், எட்பூவொத்த கூரிய நாசியில் ஒரு விநோதமான பொன் திருகாணி; செக்கச் சிவந்த சிறிய அதரங்கள்; கரிய பெரிய காயாம்பூக் கண்கள்; வளைந்து நீண்ட விற்புருவங்கள்; நிலாத் துண்டு போன்ற எடுப்பான நெற்றி; சிவப்புக் குஞ்சம் வைத்துக் கட்டி ஒற்றைப் பின்னலிட்ட அடர்ந்த செம்பட்டை நிறக் கூந்தல்; வயது பதினேழு அல்லது பதினெட்டுக்குள் இருக்கும் — இப்படி எளிமையும் எழிலுமாக விளங்கிய ஒரு பெண் தனது வளையணிந்த வலது கையில் தூண்டில் கோலையும், இடது கையில் ஓலைக் கூடை ஒன்றையும் பற்றிக்கொண்டு அவனை மிரட்சியுடன் பார்த்தவாறு நின்றாள்.

அதிசயத்தில் ஆழ்ந்துபோய் இமைக்கவும் மறந்து நின்ற சபேசனுக்கு, அவள் தமிழ் நாட்டைச் சேர்ந்த தமிழ்ப் பெண் அல்ல என்பது உடனேயே புரிந்து விட்டது!

**வ**லது தோள்பட்டையைத் தாழ்த்திச் சட்டைக் காலரை முன்பக்கமாக இழுத்துப் பிடித்து அதில் கொக்கிபோல் மாட்டிக்கொண்டிருந்த தூண்டில் முள்ளைப் பக்குவமாகக் கழற்றி விட்டு விட்டு நிமிர்ந்தான் சபேசன்.

'உளவறிந்த' இருட்டு மீன் ஒன்று வந்து இரை கோத்துத் தொங்கிய தூண்டில் முள்ளை விழுங்காமல் அதிலிருந்த இரையை மட்டும் பக்குவமாகக் கொத்தி இழுக்க, அதனால் நீர் மட்டத்தில் மிதந்துகிடந்த தக்கை 'விர்'ரென்று நீருக்குள் செல்ல, அதைப் பார்த்துச் சரியான வேட்டை கிடைத்து விட்டதாக எண்ணி மகிழ்ந்து தூண்டில் நூலை வெகு வேகமாகச் சுண்டி இழுத்து மேலே வீச, அப்போதுதான் வில்வ மரத்தடியிலிருந்து எழுந்து நின்ற சபேசனின் சட்டைக் காலரில் அது மாட்டிக்கொள்ள, அதனால் அவன் சீற்றமடைந்து தன்னிடம் சண்டைக்கு வந்துவிடுவானோ என்று அஞ்சினாள் அவனையே விழியசைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த அந்தப் பெண், அவசரமாகத் தூண்டில் நூலைத் தூக்கிப் பிடித்துக் கோலில் சுற்றியவாறு, ஏழெட்டு உளுவை மீன்கள் குற்றுயிரும், குறையுயிருமாகக் கிடந்து துள்ளிக்கொண்டிருந்த ஓலைக் கூடையை எடுத்துக்கொண்டு ஓடக் காலெடுத்தவள் சட்டென்று திரும்பி, ''ப்ளீஸ், எக்ஸ்கியூஸ் மீ!'' என்று இனிய மென்குரலில் கூறிவிட்டு அங்கிருந்து பிடித்தாள் ஓட்டம்.

இந்தச் சில விநாடிகளில் நிகழ்ந்த இத்தனை நிகழ்ச்சிகளும் கனவா அல்லது நனவா என்ற குழப்பத் திகைப்பில் ஆழ்ந்து நின்ற சபேசன் சட்டென்று கரை மேட்டுக்குத் தாவி ஏறினான். அதற்குள் அவள் வெகு தூரம் ஓடிவிட்டாள்.

அவன் மனத்தில் — அவனுடைய இயற்கையான சுபாவத்தையும் மீறி — ஓர் ஆவல் எழுந்தது. 'யார் இந்தப் பெண்? கிராமப்புறமான இவ்வட்டாரத்தில் இப்படி ஒரு பெண் எங்கிருந்து வந்திருப்பாள்? அவள் தமிழ் நாட்டைச் சேர்ந்த தமிழ்ப் பெண் அல்ல என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. அப்படியானால் வேறு எந்த ராஜ்யத்தைச் சேர்ந்தவளாயிருப்பாள்? குஜராத்திப் பெண்ணா, மராத்திய மங்கையா? அல்லது வங்காளி, அஸ்ஸாமி?... ஒருகால் இந்தியாவெங்கும் சுற்றித் திரியும் நாடோடி இனத்தவளாயிருப்பாளோ? இருக்காது. ஏனென்றால் என் சட்டைக் காலரில் தனது தூண்டில் முள் குத்தி இழுத்ததைக் கண்டு பயந்துபோன அவள் அழகான ஆங்கிலத்தில் மன்னிப்புக் கேட்டாளே?' — சபேசனின் ஆவல் மேலும் வளர்ந்தது. 'அவள் யார், எங்கிருந்து வருகிறாள் என்பதைத்தான் தெரிந்துகொள்ளலாமே' என்று எண்ணியவனும், அந்தப் பெண் சென்ற வழியாகவே அவன் விரைந்து நடக்கலானான்.

ஓர் இருபது நிமிட நேர நடைக்குப் பின் சங்கனூர்ப் பள்ளம் என்னும் அச்சிற்றாறு மேட்டுப்பாளையம் ரோட்டைக் குறுக்கிடும் இடத்தில் அமைந்த ஒரு பாலத்தை அடைந்து உயரமான சாலை மேல் ஏறிய அவன் தயங்கி நின்றான். காரணம், அந்தப் பெண்ணும் அப்போதுதான் அதே சாலையில் ஏறி முன்னால் சென்றுகொண்டிருந்தாள். கொஞ்ச தூரம் அவள் போகும் வரையில் காத்திருந்து விட்டுப் பிறகு சாலையோரமாக மெல்ல நடந்தான்.

அது கவுண்டன்பாளையத்தைச் சேர்ந்த வட்டாரம். அன்றொரு நாள் சபேசன் கோவையிலிருந்து பஸ் ஏறி வந்து இறங்கினானே, அதே இடம். அவ்விடத்தில் அன்றைய தினம் அவன் தேநீர் அருந்திய கடையை நெருங்கி ஒரு புளிய மரத்தடியில் நின்றுகொண்டு அவனுக்கு முன்னால் சென்ற அந்தப் பெண்ணையே கூர்ந்து கவனித்தான்.

அந்தக் கடைக்கு நேர்எதிரே தார் போட்ட பிரதான சாலையிலிருந்து கிழக்கு நோக்கி ஒரு சாலை செல்ல, அதன் ஆரம்ப முனையில் பெரியதொரு வளைவு (ஆர்ச்) நிறுத்தி, அதில் 'ராமசாமிப்பிள்ளை நகர் - தொழிலாளர் காலனி' என்ற எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன. அந்தப் பாதையின் இரு பக்கங்களிலும் வரிசை வரிசையாகச் சிறு சிறு கீற்றோலைக் குடிசைகள் புதிதாக அமைக்கப் பெற்றிருந்தன. ஒரு வரிசைக்குச் சுமார் பத்துப் பதினைந்து குடிசைகள் வீதம் பதினொரு வரிசைகள் இருந்தன. எல்லாம் ஒரே மாதிரியாகவும் ஒரே அளவாகவும் கட்டப்பட்டிருந்த அந்தக் குடிசைகளுக்குப் பக்கச் சுவர்கள் இல்லை; அவற்றுக்குப் பதிலாக மூங்கில் தட்டிகள் வைத்து மறைப்பு அடிக்கப்பட்டிருந்தது. கதவும் மூங்கில் தட்டியால் ஆனதே. தரைக்கு மட்டும் சிமிண்டு போட்டுச் சுற்றிலும் ஓரடி உயரத்துக்குக் கற் சுவர்கள் எழுப்பப்பட்டிருந்தன. ஒவ்வொரு குடிசையின் முகப்பிலும் எண்கள் பொறித்த சிறு தகடு ஒன்று தொங்கிக்கொண்டிருந்தது.

இந்தக் குடிசைகள் பகுதிக்கு அப்பால் புதிதாக நிர்மாணமானவை போன்ற மொட்டை மாடி வீடுகள் பல பரவலாக இருப்பது தென்பட்டன. அதுதான் இவ்வளைவில் அறிவிக்கப்பட்டிருக்கும் தொழிலாளர் காலனி போலும். அதற்கு அடை

இப்படி முடியும்!



அதற்குள்ளாகவா பணம் வரும்? ஒரு வேளை தந்தி மணியார்டரோ? அவனுக்கு வேறு யார் இருக்கிறார்கள் கடிதம் போட? ஆவலுடன் வாசலுக்கு விரைந்தான்.

தபால்காரன் கொடுத்தது நேற்று அவன் அனுப்பிய அதே கவர்! பாவம், கவர் முகப்பில் தன் விலாசத்துக்குப் பதிலாக ஆசிரியர் விலாசத்தையும், பூ போல்டின் மேல் அட்டையில் ஆசிரியர் விலாசத்துக்குப் பதிலாகத் தன் விலாசத்தையும் எழுதி அனுப்பியது யார் தவறு?

வாளமாக அதன் ஆரம்ப முனையில் – கப்பிப் பாதையின் நடுவே–அந்தக் காலனியைத் திறந்து வைத்த ஒரு மந்திரியின் பெயர்பொறித்த நினைவுக் கல் ஒன்று நாட்டப்பட்டிருந்தது. அப்படியானால் இந்தக் குடிசைகள் இங்கே அமைந்திருக்கக் காரணம் என்ன? இவற்றில் குடியிருப்பவர்கள் யார்?

வியப்புக் கலந்த ஆவலுடன் மேலும் தன் பார்வையைச் செலுத்தினான் சபேசன்.

இரு பகுதிகளாக இருந்த அந்தக் குடிசைகளுக்கெனப் பிரத்தியேகமாக அமைக்கப்பட்டாற்போல் பெரிய சாலையின் வலப்புறச் சரிவில் தனித் தனியே குடி தண்ணீர்த் தொட்டிகள் இரண்டு கட்டப்பட்டிருந்தன. சில பெண்களும் ஆண்களும் அந்தக் குழாய்களில் அப்போது தண்ணீர் பிடித்துக்கொண்டிருந்தனர். அவ்விரு தொட்டிகளுக்கு அப்பால் ஆங்காங்கே இருந்த புளிய மரங்களின் அடியில் சிலர் படுத்துத் தூங்கிக் கொண்டும், சிலர் உட்கார்ந்து பேசிக் கொண்டுமிருந்தனர். ஒரு சிலர் தனியாக அமர்ந்து ஆழ்ந்த சிந்தனையில் லயித்திருக்க, அவர்களெதிரே சிறு பிள்ளைகள் கும்மாளம் போட்டு விளையாடிக் கொண்டிருந்தனர்.

அவர்கள் பேசிய பாஷை, அணிந்திருந்த ஆடையணிமணிகள், தண்ணீர் பிடிக்கக் கொண்டு வந்திருந்த சட்டிபானைகள், பாத்திரங்கள், குடங்கள் – இவை அனைத்துமே அவனுக்குப் புதியனவாக, இதற்கு முன்னர் கேட்டோ, கண்டோ அறியாதவையாகத் தோன்றின. அந்த ஜனங்களும் அப்படித்தான் இருந்தார்கள்.

'இவ்விடத்தில் அன்று நான் பஸ்ஸை விட்டு இறங்கிச் சென்றபோது இதையெல்லாம் பார்க்கவே இல்லையே? வீட்டுக்குப் போக வேண்டும் என்கிற அவசரத் துடிப்பில் இந்தப் பகுதி என் கண்ணில் படவில்லை போலும்' என்று அவன் எண்ணமிட்டுக் கொண்டிருக்கும்போதே அவ்வழகிய இளம் பெண் அந்தக் கப்பிப் பாதையில் இறங்கி மான் குட்டிபோல் துள்ளிக் கொண்டு ஓடி ஒரு குடிசைக்குள் புகுந்து மறைந்து விட்டாள்!

இதைக் கண்டு பரபரப்படைந்த சபேசன், அவள் சென்று நுழைந்த குடிசையைப் பார்த்துக்கொண்டே தேநீர்க் கடைக்கு வந்து ஒரு டீக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு அந்தக் கடைக்காரரிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்து அக்குடிசைகளைப் பற்றி விசாரித்தான். அது ஓர் அகதிகள் முகாம் என்றும், கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து வெளியேறி வந்த அகதிகளில் ஒரு சிறு பகுதியினர் அங்கு குடியமர்த்தப்பட்டிருக்கின்றனர் என்றும், அவர்களில் பெரும்பாலோர் வங்காளிகள் என்றும் விவரம் சொன்னார் கடைக்காரர்.

'அகதிகள்', 'அகதிகள் முகாம்' என்ற சொற்களைக் கேட்டதுமே சபேசனின் மனத்தில் அவனையும் மீறிய ஒரு நடுக்கம் ஏற்பட்டது. அத்துடன் சென்னையில் பர்மா அகதிகள் முகாமில் அவன் அடைபட்டுக் கிடந்த அந்த அவலம் செறிந்த நாட்களைப் பற்றிய நினைவுகளும் நெஞ்சத்து நாளங்களைப் பின்னிப் பிசைந்துகொண்டு எழுந்தன. அவனிடம் இது வரையில் குடிகொண்டிருந்த உற்சாகமெல்லாம் எங்கோ ஓடி மறைய, பாதித் தேநீருக்கு மேல் பருக முடியாமல் அதைக் கீழே ஊற்றி விட்டுத் தம்ளரையும் காசையும் கடைக்காரரிடம் கொடுத்த பின், அந்த அகதிகள் முகாமை இன்னும் சற்று அருகில் சென்று பார்க்க வேண்டுமென்ற ஆவலால் உந்தப்பட்டவனாய்ச் சாலையின் மறுபுறம் இருந்த ஒரு புளிய மரத்தை நோக்கி நடந்தான்.

அந்த மரத்தினடியில் குள்ளமும் பருமனுமான ஒரு வாலிபன் உட்கார்ந்து சிகரெட் குடித்தவாறு உருது மொழித் தினசரிப் பத்திரிகையொன்றை வெகு உன்னிப்பாகப் படித்துக் கொண்டிருந்தான். முரட்டு வெள்ளைத் துணியாலான பைஜாமாவும், அதே துணியில் நீண்ட ஜிப்பாவும் அணிந்திருந்த அவனுக்குச் சுமார் முப்பது வயதிருக்கும். சம்மர் கிராப், சிவந்து கன்றிய உருண்டை முகம்; கூரிய நாசி, தீட்சண்யமான கண்கள்; இறுகித் தடித்த உதடுகள் – இவை சேர்ந்து அவனை ஒரு குரூரத் தோற்றம் கொண்டவனாக எடுத்துக் காட்டின. அவனும் ஓர் அகதிதானோ? அப்படித்தான் இருக்க வேண்டும்.

ஆனால் சபேசனின் கவனம் அவ்வாலிபன்மீது அதிகம் செல்லவில்லை; அந்தக் குடிசைகளுக்கு எதிரேயும், புளிய மரங்களின் அடியிலும், தண்ணீர்த் தொட்டிகள் அருகிலும் நடமாடிக் கொண்டும், உட்கார்ந்து கொண்டும், படுத்துக் கொண்டும், நின்றுகொண்டுமிருந்த அகதிகளை நோக்கியே படர்ந்தது.

அவர்களைப் பார்க்கப் பார்க்க அவர்களோடு தானும் சேர்ந்து அந்த முகாமில் இருப்பது போன்ற ஒரு பிரமை ஏற்பட்டது அவனுக்கு. அவர்கள் பேசிய மொழியை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை; அவர்களின் நடை உடை பாவனைகள், முக அமைப்பு, நிறம் முதலானவையும் அவனுக்கு அந்நியமாகவே இருந்தன. ஆனால் அவர்களது உள்ளங்கள், உணர்ச்சிகள், அவற்றிலே உறைந்து கிடக்கும் துன்ப அனுபவங்கள், துயர நினைவுகள், வியாகூலங்கள், வேதனைகள், ஏக்கங்கள், ஏமாற்றங்கள்–அனைத்தையும் அவனால் அணு அணுவாகப் புரிந்துகொள்ள முடிகிறதே! அவற்றை அப்படியப்படியே தனக்குச் சொந்தமெனக் கொள்ளவும் கூடுகிறதே! இத்தகையதோர் ஒருமையுணர்வால் உந்தப்பட்டதால் அதோ,

தண்ணீர்க் குடத்தைத் தலையில் சுமந்து செல்லும் அந்தக் கிழவியை 'அம்மா' என்று கூவி யழைக்க அவன் வாய் துடிதுடித்தது. இதோ இந்த மர நிழலில் உட்கார்ந்து கிழிந்த சட்டையைத் தைத்துக்கொண்டிருக்கும் ஒரு கிழவனை 'அப்பா' என ஓடி அணைத்துக்கொள்ள அவன் நெஞ்சம் பரபரத்தது! அங்கே விறகு பொறுக்கிக் கொண்டிருக்கும் அந்தப் பெண்மணியை 'அக்கா' என்றும், இங்கே துணி துவைத்துக் கொண்டிருக்கும் ஆடவனை 'அண்ணா' என்றும், அதோ அங்கு விளையாடிக் கொண்டிருக்கும் சிறுவனைத் 'தம்பி' என்றும், இதோ பசியால் வீரிட்டுக் கொண்டிருக்கும் சிறுமியைத் 'தங்கச்சி' என்றும் கட்டியணைக்க அவன் கரங்கள் பரபரத்தன! தன்னையறியாமலே கண் கலங்கியவனாய், அருகில் நெருங்கி அந்த அகதிகளின் முகங்களைக் கூர்ந்து நோக்கினான்.

வறுமை, கவலை, பிணி—இவை மூன்றுக்கும் ஓர் ஒட்டுமொத்த உருவம் கொடுத்தால் எப்படி இருக்கும்? இதோ, நூற்றுக்கும் அதிகமான அம்மாதிரி உருவங்கள் நடமாடிக் கொண்டிருக்கின்றன! இந்த அவல நிலைக்கு ஆளாக அவர்கள் செய்த குற்றம்தான் என்ன? தமிழராகப் பிறந்த ஒரே 'குற்றத்தை'த் தவிர வேறு எதுவுமில்லை!

மண்ணுலகில் பிறந்த ஒருவன் மீண்டும் மண்ணுக்குத் திரும்பிப் போவதற்குள், தான் வாழவும், தன்னைச் சார்ந்தவர்களை வாழ வைக்கவுமே எத்தனை எத்தனையோ போராட்டங்களை நிகழ்த்த வேண்டியவனாயுள்ள இன்றைய நிலையில், இவையும் அவனுக்குப் போதா என்று, தேசம், இனம், மொழி, நிறம், மதம் இவற்றின் பெயரால் அவனை மேலும் மேலும் மிதித்து நசுக்கித் துன்புறுத்துவது என்ன நீதி? மனிதர்களுக்காக உலகமா? உலகத்துக்காக மனிதர்களா? மனிதர்களுக்காகத்தான் இந்த உலகம் என்பதை இந்த மனிதர்கள் எப்போது உணரப் போகிறார்கள்?—

'அப்படி உணராதவர்களை யெல்லாம்—உணரக் கூடியவர்களையும் உணர விடாமல் குறுக்கே நின்று தடுப்பவர்களை யெல்லாம் — இன்றே, இக்கணமே அழித்துப் போகச் சாம்பலாக்கி விட வேண்டும்' என்ற ஆத்திரக் குமுறல் அடைந்தான் சபேசன்.

இந்தச் சமயம் அவன் நின்றிருந்த சாலையோரத்தே மேட்டுப்பாளையம் பஸ் ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து நாட்டுப்புற நங்கையொருத்தியும், ஒரு கிழவனும் மூட்டை முடிச்சுகளோடு இறங்கினர். அவர்களுக்குப் பின்னால் நாகரிக உடையும் மூக்குக் கண்ணாடியும் அணிந்த நடுத்தர வயதான மனிதரொருவரும் கையில் ஒரு தோல் பையுடன் கீழே இறங்கினார். பார்ப்பதற்கு அவர் மலையாளி போல் தோற்றமளித்தார்.

பஸ் புறப்பட்டுச் சென்றது. அந்தக் கிழவனும் பெண்ணும் மீனாட்சிநகர் பக்கமாகத் திரும்பி நடந்தனர். கண்ணாடிக்காரர் மட்டும் அங்கேயே நின்று சுற்று முற்றும் பார்த்தார். பிறகு சட்டென்று அவரது பார்வை புளிய மரத்தடியில் உட்கார்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்த அகதி வாலிபனை நோக்கிப் பாய்ந்தது. அவனையே சில விநாடிகள் கூர்ந்து கவனித்த அவர் முகத்தில் புன்னகை தவழ, "ஹல்லோ, மை டியர் காம்ரேட்!" என்றவாறு அவனருகில் விரைந்து சென்றார்.

பத்திரிகை படிப்பதில் ஆழ்ந்து கிடந்த அகதி வாலிபன் மெல்லத் தலை தூக்கினான். மறு கணம் அவன் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. பத்திரிகையை அவசரமாக மடித்து வலது கையில் வைத்துக்கொண்டு சுறுசுறுப்புடன் எழுந்து சற்றே விறைப்பாக நின்று தன் இடது கையை நெஞ்சுக்கு நேரே உயர்த்தி மடக்கித் தலையை இலேசாகச் சாய்த்து வணங்கிவிட்டு நிமிர்ந்தான். அதே சமயம் அந்தக் கண்ணாடிக்காரரும் அவ்வாறே தமது இடது கையை மடக்கிப் பதில் வணக்கம் செலுத்தினார். பிறகு இருவரும் நெருங்கி நின்று தணிந்த குரலில் ஏதோ பேசிக்கொண்டனர். அகதி வாலிபன் அந்தக் கண்ணாடிக்காரரின் தோள் மீது கை போட்டபடி தேநீர்க் கடையை நோக்கி நடந்தான்.

இவ்வளவையும் பார்த்துக்கொண்டு நின்ற சபேசனுக்கு, அவர்கள் ஒருவருக்கொருவர் வணக்கம் செலுத்திக் கொண்ட முறை வேடிக்கையாக இருந்தது. அத்துடன் தேசத்தின் வடமூலையிலிருந்து அகதியாக வந்திருக்கும் ஒருவன், இங்கே தென் கோடியிலுள்ள ஒருவருடன் இத்தனை நட்பும் நேசமுமாக நெருங்கி உரையாடுவதைக் கண்டு அவனுக்கு உள்ளூற ஒருவித வியப்பும் ஏற்பட்டது. இதற்கு மேல் அவர்களைப் பற்றி அவனது கவனம் செல்லாதவாறு தடுத்து இழுத்தது ஒரு குடிசையிலிருந்து எழுந்த புல்புல் தாராவின் சோகமயமான இசையொலி.

அந்த இசை வந்த திசையில் தன் பார்வையைச் செலுத்தினான் சபேசன். அங்கே குடிசையொன்றின் பின்னால் தனியாக உட்கார்ந்திருந்த ஓர் அகதி இளைஞன் தன்னை மறந்து வாசித்துக்கொண்டிருந்தான். பாவம்! இந்தப் பிஞ்சு வயதிலேயே அவன் எதை யெதை இழந்தானோ? என்னென்ன ஏமாற்றங்களுக்கு உள்ளானானோ? அதையெல்லாம் கொஞ்ச நேரமாவது மறந்திருக்கத்தான் அந்த இசைக் கருவியின் துணையை இப்போது நாடிவிட்டான் போலும்!

வேதனையால் சபேசனின் உள்ளம் வெந்து நைந்தது. பொழுதும் சாய்ந்து புவனம் கவிப்பெறத் தொடங்கியது. தானே வாரிப் போட்டுக் கொண்ட துயரச் சுமையால் நெஞ்சம் கனத்துத் துவள அவ்விடத்தை விட்டுப் புறப்படத் திரும்பிய அவனது பார்வை, சாலையின் மறுபுறமிருந்த தேநீர்க் கடையை நோக்கிச் சென்றது. அங்கே அந்தக் கண்ணாடிக்காரரும், அகதி வாலிபனும் கடைக்கு வெளியே கிடந்த ஒரு பெஞ்சில் நெருங்கி உட்கார்ந்து தேநீர் அருந்தியவாறு ஆவேசத்தில் எதைப்பற்றியோ வெகு சுவாரசியமாகப் பேசிக் கொண்டிருந்தனர். அங்கிருந்து தன் பார்வையைப் பெயர்த்தெடுத்து முகாம் பக்கமாகச் செலுத்தினான். அப்போதுதான் குடிசையிலிருந்து வெளியே வந்த அந்தப் பெண், அவன் சாலையில் நிற்பதைப் பார்த்துவிட்டோ என்னவோ, மீண்டும் உள்ளே மறைந்தாள். (தொடரும்)



# புது வாத்தியார்

ஏ.எம். ஜுனைபர்

"பளார்......"

விட்டார் ஓர் அறையும், முதுகில் இரண்டு அடியும்.

அடிபட்ட பயத்தில் அப்படியே ஸ்தம்பித்து நின்ற சிறுவன் கன்னையன் ஒரு கணம் வாத்தியாரை உற்றென்று பார்க்க, சக சிறுவர்கள் அவனைப் பார்க்க, அவமான உணர்வும் அடிவலியும் உறுத்த உதட்டைப் பிதுக்கிக்கொண்டு முகத்தைச் சுளித்து அழுதான். அழுதான் என்றால் கட்டடம் எதிரொலிக்க அலறினான்! கூட்டம் கூடி விட்டது.

புது வாத்தியார் பொன்னம்பலத்துக்கு அக்கம் பக்கங்களிலிருந்து குழுமிவிட்ட கூட்டத்தைக் காண வெட்க உணர்ச்சி இறுக அணைத்துக் கொண்டது. கவிழ்ந்த தலை. இறக்கத்துடன் கூட்டத்தைக் கலைத்துச் சிறுவர்களை அடக்கினாரே தவிர வெட்க உணர்வை விரட்ட இயலவில்லை. அதற்குள் தலைமை ஆசிரியர் ஏகாம்பரம் வாத்தியார், "என்ன சார்..... என்ன நடந்தது......?" என்று பதறி ஓடி வந்து விட்டார்.

என்ன சொல்வதென்று புரியாமல் பரக்கப் பரக்க விழித்துக் கொண்டிருந்த பொன்னம்பலம் வெட்கத்தை விட்டுப் பக்கத்தில் நின்ற சிறுவர்கள் இருவரையும் காட்டி நடந்ததைச் சொன்னார். கன்னையன் நேரம் கழித்து வகுப்புக்கு வந்தான். சிலேட்டுக் குச்சி கொண்டு வர மறந்ததை உணர்ந்து பக்கத்துப் பையனின் குச்சியைப் பிடுங்க 'அவன்' தர மறுக்க 'இவன்' அடித்து விட்டான். வலியைவிட அடிபட்டதால் அவமானம் அடைந்த சிறுவன் திருப்பி அடித்துக் கொண்டே வாத்தியாரிடம் அபயம் தேடினான். அவர் சிறுவர்களை நெருங்குவதற்குள் கன்னையன் எச்சிலைக் காரிச் சண்டைக்காரனின் மேல் துப்பி விட்டான். அதைத் துடைத்துக் கொண்டிருந்த சிறுவனின் கண்கள் கலங்கி விட்டாலும் திருப்பித் துப்ப எத்தனிக்கும்போது கன்னையன் மீண்டும் காரிச் சிறுவன்மேல் துப்ப அது வாத்தியார் புறங்கையில் பத்தையாக அப்பிக் கொண்டது.

தம் கையில் அப்பிக் கொண்டிருந்த எச்சிலைத் தலைமை ஆசிரியரிடம் காட்டினார் புது வாத்தியார்.

தலைமை ஆசிரியர் என்ன செய்வதென்று விழித்த போதிலும், சுமார் ஏழெட்டு வருஷங்களாக ஜாகையுடன் வேலைக்கு வந்து விட்ட அவர் சகலமும் அறிந்தவர். 'புது வாத்தியார்' இப்படிச் செய்வார் என்பதைக் கண்டாரா என்ன? பழகிப் போன பழக்கத்துக்கு ஏற்ப, "பொன்னம்பலம் சார். இங்கே வாங்க" என்று தனியாக அழைத்த அவர், "டேய்.. போய்த் தண்ணீர் கொண்டு வாடா" என்று ஒருவனிடம் கூறி, அவன் கொண்டு வந்த தண்ணீரால் கையைக் கழுவிவிட்டு வந்த பொன்னம்பலத்தைப் பார்த்துக் கொண்டிருந்தவர் பச்சாத்தாபத்துக்கு மாறாகப் பரிதவித்தார்.

"என்ன சார், இப்படிப் பண்ணிட்டீங்க. அவன் யார் தெரியுமா, புதுசும் அதுவுமா? அதான் குமாரசாமின்னு முன்னாலே சொல்லல்லே, அவரோட மகன் சார்!" புதியவரிடம் வந்ததும் வராததுமாகக் கோபித்துக் கொள்ள என்னவோபோல் இருந்தாலும் சூழ்நிலை அவரை அப்படிப் பேசச் செய்தது.

புது வாத்தியார் பொன்னம்பலம் அடிக்க நேர்ந்ததற்காக வெட்கத்தால் நெளிந்தாரே தவிர தலைமை ஆசிரியர் ஏகாம்பரம் சொன்னதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை....

வெய்யில் தீயாகக் காய்ந்தது. சிறுவன் கன்னையன் பின்வர முன்னால் ஓர் ஆள் வந்தான். அப்போதுதான் தெரிந்தது. சிறுவன் அழுது கொண்டே வீட்டுக்கு ஓடி விட்டது. இப்போது தலைமை ஆசிரியர் ஏகாம்பரம் சிறுவனைக் கவனிக்காமல் விட்டு விட்டதை உணர்ந்து என்ன செய்ய?

"ஐயா புது வாத்தியாரைக் கூட்டியாரச் சொன்னாங்க" என்று ஓடிவந்தபடியே பயமுறுத்தினான் வேலைக்காரன்.

"சரிப்பா, பையனை விட்டுட்டுப் போ. வாத்தியாரை அழைத்து வரச் சொல்கிறேன்..ஆமா......" என்று இழுத்தவர், "ஐயா கோவமா இருக்காங்களா.....?" என்றார்.

"ஆமாங்க. தம்பி அழுதுகிட்டு வந்து சொல்லித்து. ஐயா தென்னந்தோப்புக்குப் போய்ட்டு வந்த அலுப்பிலே இருக்கப்போ



வந்து சொல்லவும் கோபமா என்னை அனுப்பினுங்க" என்றான்.

தலைமை வாத்தியார் மெல்ல அந்த ஆளை அனுப்பிவிட்டு வகுப்பில் இருந்த பொன்னம்பலத்திடம் சென்றார். கன்னையனுடன் தலைமை ஆசிரியர் வரவும் என்னமோ ஏதோ என்று பதை பதைத்தார் பொன்னம்பலம்.

"சார், இப்ப அவர் ஆள் வந்துட்டுப் போறான். உங்களை 'இவன் தகப்பனார்' வரச் சொன்னாராம். ஸ்கூல் விட்டப்புறம் பையனோட இவன் வீட்டுக்குப் போய்ட்டு வாங்க" என்றவர், "டேய், கன்னையா, நீ போய் உட்கார்" என்று கௌரவக் கனிவுப் பார்வையுடன் சொல்லி விட்டுக் கோர்ட் கூண்டில் குறு குறுப்புடன் ஏறும் நிரபராதி போல் இருந்த பொன்னம்பலத்தைப் பார்த்தார்.

"இப்படி ஒரு நிமிஷம் வர்றீங்களா சார்?" என்றார் ஏகாம்பரம்.

எதற்கும் தயாராக இருந்த பொன்னம்பலம் தலைமை ஆசிரியருடன் நடந்தார்.

"சார். அங்கே நானும் வந்தா உங்களுக்கு உதவியாக இருக்கும். ஆனால் அவர் மகா முரடன். இடக்காக ஏதாவது பேசுவார், எதை வேண்டுமானாலும் பேசி விட்டுப் போகட்டும் பேசாமே போய்ட்டு வந்துடுங்கோ."

பொன்னம்பலம் அழுத்தமாக, "சார்,நான் போக மாட்டேன். அவர் எவ்வளவு பெரிய மனிதராக இருந்தாலும் சரி. நான் ஒரு வாத்தியார். பள்ளிக்கு வந்த பையன்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பேன். நல்லதைச் செய்யச் சொல்வேன். தீயதைத் தடுப்பேன். அதைச் செய்வது என் பொறுப்பு" என்றார், குரலில் புதிய துணிச்சல் துடித்தது.

"சார், சார்....அப்படிச் செய்திடாதீங்க. அவருடைய உதவியாலேதான் பள்ளிக்கூடமே 'நல்ல படியாக' நடக்குது. அவர் நினைத்து எது செய்தாலும் இந்த ஊருக்குச் சரி. உங்களாலே....."

"என்றுமே பள்ளிக்கூடத்துக்கும் பெரிய மனிதர்களின் பகை. அப்படித்தானே!" அதில் ஓர் அலட்சியத் தொனி.

தலைமை ஆசிரியர் அவரைப் பார்த்து மௌனமாகத் தலையை அசைத்து ஆமோதித்தார்.

மாலை மணி அடித்தவுடன் மீண்டும் தொடங்கிய கூச்சலில் மணியின் நாத ரீங்காரம் மங்கி மறைந்தது. திருவாளர் குத்தகைக்காரர் குமாரசாமி வந்தார். வந்தார் என்றும் உடன் இருவரை அழைத்துக் கொண்டு வந்தார்.

'ஹெட்மாஸ்டர் கூப்பிடுகிறார் சார்' என்று ஒருவன் அழைத்தபின் பதற்றமில்லாமல் சென்றார் பொன்னம்பலம்.

அங்கே —

பையன்களுக்குப் பதிலாக முதியோர் மூவர் அமர்ந்திருந்தனர். அவர்களில் ஒருவர் மட்டும் குறிப்பிடத்தக்கவாறு இருந்தார். அதாவது மற்றவர்களுக்கு மாறாகத் தோற்றமளித்தார். அதாவது மற்ற இருவர் துண்டு கூட மேலே போடாதிருக்க, பொசுக்கும் வெய்யிலிலும் சொகுசை விடாத 'பெரிய மனிதர்' குமாரசாமி முரட்டுத் துண்டை மேலே போட்டுச் சுற்றிக் கொண்டிருந்தார்.

பொன்னம்பலம் போட்ட புள்ளிப்படி அவர்தான் குத்தகைக்காரர் குமாரசாமி என்று அவர் விறைப்பிலிருந்து தெரிந்தது.

"இவருதான் புதுசா வந்த வாத்தியாரா?" என்று அவர் அலட்சியமாகக் கேட்டார்.

"ஆமாங்க. புதுசு. இன்னிக்குத்தான் அட்மிஷன் ஆச்சு, காலையிலே....." என்றார் தலைமை ஆசிரியர் ஏகாம்பரம்.

அதற்குள் குமாரசாமியுடன் வந்திருந்த கொத்தனார் குருசாமி, "ஆமா, அந்தத் தம்பியை அப்படித்தான் அடிக்கிறதா?" என்றார் குரலில் வியப்புத் தொனிக்க.

அவசியம் பொன்னம்பலம் பதில் சொல்ல வேண்டியதில்லை. நடந்த விஷயத்தை அமைதியாகச் சொன்னார். அதைக் கேட்டுக் கொண்டிருக்கும் பொறுமையற்ற குமாரசாமி அடித்தொண்டையில் கத்தினார்.

"அவன் யாரய்யா சொல்லிக் கொடுத்தான் பையன்களை அடிக்கிறதுக்கு. சின்னப் பய எச்சி துப்பிட்டானும். ஆளைப் பாரு..." முற்றத்துக்கு ஓடி வாயில் குதப்பிய எச்சிலைத் துப்பிவிட்டு வந்து, "இதோ பாருய்யா. நீ புதுசு. இவரைக் கேளு" என்று தலைமை ஆசிரியரைச் சுட்டிக் காட்டி, "என்னைப் பத்திக் கதை கதையாச் சொல்லுவார். ஆமா. இனிமே அடிச்சியோ சும்மா விடமாட்டேன்" என்று உறுமினார் அவர்.

பையன்கள் நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர். இளமை பயமறியாது. எளிதில் உணர்ச்சி வசப்படக் கூடியது.

"இதோ பாருங்க. மரியாதை கொடுத்து மரியாதை வாங்கணும். இது பள்ளிக்கூடம். ஏலக் கடை அல்ல கத்துவதற்கு. நீங்க யாராக வேணுமானாலும் இருங்க. சர்க்கார் கொடுக்கிற சம்பளத்துக்காக உங்களுக்குப் பணிந்து கிடக்கமாட்டேன்" என்று பொன்னம்பலம் பொரிந்து தள்ளினார்.

இளையவன் — அதுவும் ஊர் பேர் தெரியாதவன் நால்வர் முன் மதிக்காமல் பேசுவதைக் கேட்கப் பொறுக்காமல் துடித்த குமாரசாமி, "சும்மா நிறுத்துய்யா. யாரைப் பார்த்து அப்படிச் சொல்றே. இதோ பாருய்யா. இந்த ஊர்லே காலு வைக்காம ஆக்கிடுவேன். சாக்கிரதை!" என்றார்.

"தம்பி, யோசிச்சுப் பேசுங்க. இனிமே அடிக்க மாட்டேனுட்டா சரியாப் போச்சு. இதுக்குப் போய் இத்தனை பேசுவானேன்?" என்றார் அவருடன் வந்த கொத்தனார் அல்லாத — ஆனால் அந்த ஊருக்கு முக்கியமானவர்.

"என் தொழில் மீது சத்தியமாச் சொல்றேன். நான் மன்னிப்புக் கேட்க மாட்டேன்." இதைச் சொல்லும்போது வார்த்தை தெளிவாக உணர்ச்சியோடிருந்தாலும் கண்கள் கலங்கிவிட்டன பொன்னம்பலத்துக்கு.

"சரி சரி வாங்கப்பா போவோம்" என்று கூட வந்தவர்களை அழைத்த அவர் நின்று கொண்டு தலைமை ஆசிரியரைப் பார்த்து, "சார், இதோ பாருங்க. முதல்லே இந்தப் 'பையனை' வீட்டுக்கு அனுப்பிச்சுட்டு ஸ்கூலை நடத்துங்க" என்று பொன்னம்பலத்தைக் காட்டினார் குமாரசாமி.

"அந்த எண்ணம் இருந்தால் கொஞ்சம் இருங்க. இந்த ஊரை விட்டு இந்த நிமிஷமே நான் போய்விட வழிகாட்டுகிறேன்." வெறுப்புடன் பொன்னம்பலம் கூறிவிட்டு, பேப்பருடன் மேஜையை ஒட்டிய நாற்காலியில் அமர்ந்து விட்டார்.

தலைமை ஆசிரியர் ஏகாம்பரத்துக்குப் பொன்னம்பலத்தின் செய்கை புரிந்தது. ஆனால் ஊருக்குப் பெரியவரும், ஸ்கூலுக்குச் 'சொத்து' போன்றவருமான குமாரசாமிக்கு ஒன்றும் விளங்காமல் புது வாத்தியார் என்ன செய்கிறார் என ஒரு கணம் திகைத்துப் பார்த்துக் கொண்டிருந்தவர் முன்—

நெருக்கித் தள்ளிய காகிதத்தைக் காட்டினார் புது வாத்தியார். அதில் மேலதிகாரிக்குக் காலையில் நடந்த சம்பவத்தைக் குமாரசாமி எழுதுவது போல் எழுதி முடித்திருந்தார். அதைக் குமாரசாமியிடம் கொடுத்துக் கையெழுத்துப் போட வேண்டிய இடத்தையும், அனுப்பவேண்டிய முகவரியையும் காட்டினார்.

கைமாறி விரலிடுக்கில் நுழைந்துவிட்ட பேனாவையும் மனுவையும் ஒரு கணம் நோக்கினார் குமாரசாமி — ஒரு கன்னத்தில் அறைய மறு கன்னம் வீங்கிச் சிவந்தது போல் பழுத்துக் குப்பென்று முகம் வெளிறியது. முகத்தில் ஈயாடவில்லை. மனுவை வெற்றுப் பார்வையுடன் நோக்கிக் கொண்டிருந்த குமாரசாமிக்கு—

'என்றோ அன்றொரு நாள் — மாந்தோப்புக்குச் சகா சேராத நாட்களில் மட்டும் பள்ளிக்கு அடட்டியமாகச் சென்று வந்த காலம். பெற்றோர் பள்ளிக்கு அனுப்ப மாந்தோப்பில் சக சிறுவர்களுக்கு அதிபதிபோல் இருந்தபோது புதுசாக வந்திருந்த வாத்தியார் மாந்தோப்புக்கு வந்து பிடித்துக் கொண்டு அடித்தபோது இந்தப் பள்ளிக்கூடம் கூரையாக இருந்தது. அப்போது காலம் சென்ற அப்பா அந்த வாத்தியாரை என்ன பாடுபடுத்திவிட்டார்? அதன் பின் அந்த வாத்தியார்தான் எவ்வளவு குழைந்து குழைந்து வீட்டைச் சுற்றி வந்தார். அவர் இருந்தவரை தனிக்காட்டு ராஜாவாக இருந்த காலம் மறைந்து, அது உறைந்த கறையும் குறைந்து மங்கி மறைந்து எவ்வளவோ காலமாகி விட்டது. அது நினைவில் கனவு போல் இருந்ததே தவிர அந்த வாத்தியார் மன்னார்சாமிதான் என்று பெயர் கூடத் தெளிவாக நினைவில் இல்லாத குமாரசாமிக்கு மன்னார்சாமி வாத்தியார் மைந்தன்தான் பொன்னம்பலம் என்றுகூட விளங்காது. அந்த இடைத் திரையை யார் விலக்குவது? வாழ்வில் எத்தனையோ விஷயங்களைக் காலத் திரை காணாமல் செய்துவிடுகிறது. அந்த மன்னார்சாமி போதிக்காத பாடத்தில் கேள்வி கேட்கும் ஒரு புத்தம் புதிய வாத்தியாராகத்தான் பொன்னம்பலம் தோன்றினார்.

நொடியில் விஷயம் உணர்ந்துகொண்ட பொன்னம்பலம் இன்னும் அவகாசம் கொடுத்தார். சுற்றிலும் இருந்த பெரியவர்களையும், வேடிக்கை பார்க்கும் சிறுவர்களையும் பார்த்த குமாரசாமி கண்கள் கலங்கித் தோப்புக்கரணம் போட வெட்கப்பட்டுத் தலை குனியும் மாணவனைப் போலத் தேம்பலானார்.

"சார்..." பள்ளி மாணவன் ஆசிரியருக்கு அடிபணிந்து அழைக்கும் தொனி குரலில் உறைந்திருந்தது.

"கையெழுத்துப் போடக்கூடப் படிக்காத நான் அறிவற்றுப் பேசிவிட்டதை மறந்து என்னை மன்னித்து விடுங்க."— தொடர்ந்து நாத் தழுதழுக்கக் கூறினார்.

குத்தகைக்காரர் குமாரசாமி முன் வைத்த காலைப் பின் இழுக்கக் காரணம் கையெழுத்துப் போடத் தெரியவில்லை என்பதுதான். அதனால்தான் தந்தைக்குப் பழி வாங்கும் தனயன் என அறியாமல் நான்கு முழ வேட்டியும், வெள்ளைக் கதர் ஜிப்பாவும், மடித்த வெள்ளைத் துண்டைத் தோளில் அணிந்து தூய, எளிய ஆசிரிய அணியில் ஒரு புதியவராக நினைத்துக் கொண்டார். அந்த நினைவில் மூழ்கிய புது வாத்தியார் பொன்னம்பலம் "ஐயா, நான் மன்னிக்க ஒன்றும் இல்லை. ஸ்கூலுக்கு வர்ற பையன்களைப் பெற்றவர்கள் ஆயிரம் பேர் இருக்கலாம். ஆனால் வாத்தியாரை நம்பிப் பள்ளிக்கு வந்துவிட்ட பையன்களுக்கு அங்குள்ள ஆசிரியர்களே தாய், தகப்பன், பெரியவர்கள் எல்லாம்....அங்கே மற்ற பெற்றோர், மற்றோர் எவருக்கும் உரிமையில்லை..." என்றார்.

அவமான உணர்ச்சியால் காலையிலிருந்து புதுச் சூழ்நிலையில் உழன்றுகொண்டிருந்த, இளைய நெஞ்சு 'மன்னிக்க வேண்டும்' என்று மனமார ஒரு 'பெரிய மனிதனின்' இதயக் குரலுக்குப் பதில் சொல்லும்போது, கொண்டிருந்த துணிவை இழந்து நெகிழ்ந்து விட்டது.

# அத்தை மகளே ரத்தினமே...

## அழகிரி விசுவநாதன்

ஏப்ரல் 1!

'உறையூர்' என்ற 'உடனேயே சாதாரணமாக நினைவுக்கு வரும் விஷயம் அங்கு நெய்யப்படுகிற புடவைகள் தான் இல்லையா?

இந்தக் கைத்தறிப் புடவை வியாபாரத்தில் முன்னணியில் உள்ள விலாசம் ராம. ராம. சோணு. பாணு. காணு. மாணு. அருணாசலம். கட்டுக் குடுமியுடன், காதில் வைரக் கடுக்கனுடன், கரத்தில் விரலுக்கு இரண்டு மோதிரங்களுடன் அமர்க்களமாக, எப்பொழுதும் ஆனந்தமாகவே இருப்பார் அருணாசலம்.

அபரிமிதமான செல்வம், அழகுப் பிம்பம் போல ஒரே மகள் மரகதம், 'தாலி கட்டடா' என்றால், 'இதோ மாமா' என்று மகளின் மணிக் கழுத்தில் மூன்று முடிச்சுப் போடப் பங்களாவோடு காத்துக் கொண்டிருக்கும் தங்கை மகன் சேகர், அதாவது அருணாசலத்தின் வார்த்தைகளில் 'மருமகப்பிள்ளை' — இப்படி இருக்கும்போது அவருடைய ஆனந்தத்துக்குக் குறைவேது?



ஆனால் இப்படிப்பட்ட அருணாசலத்தின் முகத்தில் அன்றைக்கு, அப்போதைக்கு மினாச் சோகம் (வியாபார சோகம் தான்!) குடிகொண்டிருந்தது என்னவோ உண்மைதான்.

காரணம்: புடவைகள்.

அண்மையில் அவர் ஓர் ஆயிரம் ஜோடி 'வயி டிசைன்' புடவைகளை நம்பியதால் அவருடைய கடைப் பேரேட்டில் நஷ்டக் கணக்குப் பக்கத்தில் ஓர் அரை லட்ச ரூபாய் பதிவாயிருந்தது.

விஷயம் இதுதான்: பத்து மாதங்களுக்குமுன், 'பிளெய்ன்' வெள்ளையில் சிவப்பு, நீலம், மஞ்சள் நிறங்களில் ரிப்பன் அளவு அகலத்தில் மூன்று அங்குலத்துக்கு ஒரு கோடு வீதம் நீட்டப் போக்கில் கோடு போட்டு, ஒரு புது டிசைனில் சில புடவைகளைத் தயாரித்து வெளியூர்களுக்கு அனுப்பி வைத்தார்; வரவேற்பு எப்படியிருக்கிறது என்று நோட்டம் பார்க்க.

'புடவைகள் வந்த சுவடு தெரியவில்லை; பறந்துவிட்டன; 'பெண்கள் வட்டாரத்தில் அமோக வரவேற்பு' — சில்லறை வியாபாரிகள் இப்படி எழுதினர், வயி டிசைன் புடவையைப்பற்றி. மேலும் 'ஆர்டர்களை'த் தந்தியிலேயே கொடுத்தனர்.

'பிஸினஸ் நேக்' தெரிந்த அருணாசலம் அதற்குப் பிறகும் சும்மா இருப்பாரா? மற்றப் புடவைத் தினுசுகள் தயாரிப்பதை அடியோடு நிறுத்திவிட்டு எல்லாத் தறிகளி

லும் வரி டிசைன் புடவைகளையே நெய்யப் பணித்தார்.

இரண்டொரு மாதங்களில் அரை லட்சம் பெறுமான சரக்கைத் தயாரித்து மலையாகக் குவித்து வைத்த அருணாசலம், பாதிக்கு மேற்பட்ட சரக்கை வெளியூர்களுக்கும் விற்பனைக்கு அனுப்பி வைத்தார்.

மேற்சொன்ன வரி டிசைன் புடவைகளின் விற்பனை மள மளவென்று குறைந்துகொண்டே வந்து ஒருநாள் 'கப்'பென்று நின்று விட்டது!

அதிர்ந்து போனார் அருணாசலம்.

ஆயிரம் ஜோடி வரி டிசைன் புடவைகள் அப்படியே தங்கிவிட்டன. அருணாசலத்துக்கு அரை லட்சம் ரூபாய் நஷ்டமா?

புடவை விற்பனையில் இப்படிப்பட்ட திடீர் மாற்றத்துக்குக் காரணம் என்னவாய் இருக்கும் என்று மூளையைக் குழப்பிக் குழப்பிப் பார்த்தார். தெளிவே ஏற்படவில்லை.

அலமந்து நின்ற அருணாசலத்திடம் புடவைகள் திடீரென்று விற்காமல் போன தற்கான காரணத்தை ஒரு வாரத்துக்கு முன்னர்தான் 'மருமகப்பிள்ளை' சேகர் 'டிடெக்டிவ் வேலை' செய்து கண்டுபிடித்துச் சொன்னான்:

''மாமா! எட்டயபுரம் முருகன் விலாச தார்கள் இல்லே, அதான் மாமா முருகேசம் கம்பெனி, அவங்கதான் மாமா, நம்மை நஷ்டப்படுத்தினவங்க.... எப்படீன்னு கேட்க லியே?... நம்ம வரி டிசைன் மாதிரியே அவங்களும் ஒரு புடவை டிசைனை நமக்கு அப்புறம் போட்டு இருக்காங்க, மாமா! ஆனால் புடவை டிசைனில் ஒரே ஒரு வித்தியாசம்! நம்ம வரிகளை இடமிருந்து வலமாகக் கொடுத்திருக் கோம். அவங்க மேலிருந்து கீழாப் போட்டிருக் காங்க. மற்றபடி அதே சிவப்பு, நீலம், மஞ்சள் வர்ணங்கள், அதே 'டெக்ஸ்சர்' அதே விலை எல்லாம்! நம்ம நஷ்டத்துக்குக் காரணமே இந்த முருகன் விலாசக்காரங்கதான் மாமா!''

இந்த இடத்தில் அருணாசலத்தின் மருமகப்பிள்ளையான சேகரைப் பற்றி ஒரு வரி எழுத வேண்டியது அவசியம். பெற்றோர்களை இளம் வயதிலேயே இழந்துவிட்டு, தாய் மாமனுடனேயே இருந்து வியாபாரத்தைக் கவனித்து வந்தான் சேகர். அவனுக்கே அவருடைய மகள் மரகதத்தைக் 'கட்டி'வைத்து விடலாம் என்ற ஒரு சின்ன எண்ணம் அவருடைய மனத்தின் ஒரு மூலையில் இருந்ததென்றால் அதுக்கு நான்கு அர்த்தங்கள் உண்டு. சேகர் வேறு வாரிசு இல்லாத சொந்த சொத்து உள்ளவன்; அடக்கமானவன்; படித்தவன்; நல்ல அழகன்.

அடுத்து, மருமகப்பிள்ளையின் எட்டயபுரம் 'ஐடியா'விலும் கொஞ்சம் சாரம் இருப்பதாக உணர்ந்தார், அருணாசலம்;



அதிலிருந்து அருணாசலத்துக்கு ஒரே யோசனை — ஒரே சிந்தனை — இந்த முடங்கிப் போன 'வரி டிசைன்' புடவைகளை மார்க்கெட்டில் எப்படி எந்த விதத்தில் தள்ளிவிடுவது? லாபம் வேண்டாம் என்றாலும் கையைக் கடிக்காத வகையில் முதலாவது தேற வழி?

வரிப் புடவை பற்றிய கவலை வாட்டி எடுக்கக் கல்லாப் பெட்டியில் சோர்வோடு உட்கார்ந்திருந்தார் அவர்.

இந்த நேரத்திலா மருமகப்பிள்ளை சேகர், காலமாபாளிடன் கிளப்பில் டென்னிஸ் ஆடிவிட்டு, 'டென்னிஸ் பாட்டை'ச் சுழற்றிய வாறு கடைக்குள் நுழைய வேண்டும்?

அருணாசலத்துக்கு அந்த நிலையில் வருமா, வராதா கோபம்? வந்தது: "மருமகப்பிள்ளை, 'என்னடா இவன் இப்படிச் சொல்றானே'ன்னு நினைக்காதீங்க!... ஒன்னு, வியாபாரத்தைக் கவனிக்கவிட்டு டென்னிஸை விட்டுடுங்க. இல்லே, டென்னிஸையே வியாபாரமா வைச்சுக்கிட்டு, துணி வியாபாரத்தை விட்டுடுங்க!"

ஒரு நிமிடம் தயங்கி நின்ற சேகருக்கு அருணாசலத்தின் கோபத்துக்குக் காரணம் நன்றாகப் புரிந்தது. அவன் சொன்னான்: "அரை லட்சம் பெறுமான வரிப் புடவை முடங்கிக் கிடக்குது மாமா! அது எனக்கு நல்லாத் தெரியுது. அதுதான் உங்களுடைய கோபத்துக்குக் காரணம் என்கிறதும் எனக்கு நல்லாப் புரியுது. அதுக்காக என்மேல் கோபித்துக் கொண்டால் நான் என்ன செய்வது? புடவை மூட்டையைத் தலையில் சுமந்து கொண்டு போய்த் தெருத் தெருவாக விற்றுக்கொண்டு வரச் சொல்கிறீர்களா, உங்கள் மருமகப்பிள்ளையை?"

அருணாசலம் சாந்தமாக, அதே நேரத்தில் கண்டிப்புடன் சொன்னார்: "நீங்க என்ன செய்வீங்களோ எனக்குத் தெரியாது! ஆனால், ஒன்னு சொல்றேன், மருமகப்பிள்ளை, மனசிலே நின்னமாப் போட்டு வையுங்க. இந்த அரை லட்ச ரூபாய் புடவைகளை விற்பனை செய்ய ஒரு மார்க்கத்தைக் கண்டுபிடிச்சு, சரியா மூனு மாசத்துக்குள்ளே மார்க்கெட் பண்ண வேண்டியது உங்க பொறுப்பு. உங்களுக்கு உண்மையிலேயே வியாபாரத்திலே ஆர்வமும் வாணிப நுணுக்கமும் இருக்கான்னு சோதிக்கத்தான் இந்தப் பரீட்சை! இதிலே தோல்வி அடைஞ்சீங்களோ, அவ்வளவுதான், மரகதம் உங்களுக்கு இல்லே!"

'மரகதம் இல்லே' என்ற சொல் சேகரின் காதில் 'உயிர் இல்லே' என்பது போல் ஒலித்தது. இருக்காதா பின்னே?

மாமன் மகள் மரகதம் அவனுடைய தோளிலே தொத்தும் கிளியாயிற்றே. அவளை இழந்தால் என்ன, அல்லது சேகர் தன் உயிரை இழந்தால் என்ன?

ஒரு பத்து நிமிடம் ஒன்றுமே பேசாமல் சிலையாய், மலையாய் நின்று கொண்டிருந்தான் சேகர். பிறகு சொன்னான்: "கண்ட கண்ட வரிக் குதிரை டிசைனில் எல்லாம் புடவை போட்டுக் குவிக்க வைக்கறது ஆசையா, அது விக்கலைன்னு நானும் மரகதமும்தானா இடைத்தோம்?... ஆல் ரைட்! இவ்வளவு தானே? உங்க மரகதமும் வேண்டாம், ஒரு மண்ணும் வேண்டாம், நான் போகிறேன்!"

ஏப்ரல் 2:

மஞ்சள் வெயிலுக்குச் சொந்தமான மாலை நேரம்.

கன்னிப் பெண்ணைப் போல் கவர்ச்சியுடன் சுழித்துச் சுழித்து ஓடும் காவேரியின் அழகைக் கவனித்தவாறு மரகதம் மதில் சுவரின் மேல் உட்கார்ந்திருந்தாள். சேகரும் அவளுக்கருகிலேயே சிந்தனை வசத்தனாய் அமர்ந்திருந்தான்.

"பிறகு உங்களுடைய முடிவுதான் என்ன அத்தான்? பேசாமல் இருந்தால் எப்படி?" கவலையோடு கேட்டாள் மரகதம்.

சேகர் விரக்தியாகச் சொன்னான்: "முடிவு என்ன? ஒரே முடிவுதான்! என்னை மறந்துவிட வேண்டியதுதான்..."

"அதைவிட 'உயிரைத் துறந்துவிடு' என்று சொல்லி விடுங்கள், அத்தான்! இப்படியே, இப்போதே இந்தக் காவேரியில் குதித்து விடுகிறேன்."

"சேச்சே! அப்படியெல்லாம் செய்து விடாதே, கோழையைப் போல!... அது சரி, நானும் யோசித்து யோசித்துப் பார்க்கிறேன், வழியே ஒன்றும் மனதில் படவில்லையே... ஹூம்!" ஆழ்ந்த சிந்தனையோடு சேகர் கவனமில்லாமல் கையில் வைத்திருந்த 'தினத் திரை'ப் பத்திரிகையைப் பிரித்தான். கடைசிப் பக்கத்தைப் புரட்டிய அவனுடைய கண்களில், 'தேனும் தினைமாவும்' என்ற திரைப் படத்தின் முழுப் பக்க விளம்பரம் கலங்கரை விளக்குப் போல் பளிச்சிட்டது. 'ஆகா, டைரக்டர் தண்டம், நீதான் எனக்குக் கை கொடுத்துக் கரையேற்றப் போகிறாய்' என்று மனத்துக்குள்ளேயே சொல்லிக் கொண்ட சேகர் ஆனந்தக் கூத்தாடினான்: "கேளடி, என் அத்தை மகள் ரத்தினமே! ஓர் அருமையான யோசனை! உன் மாணிக்கக் கழுத்தில் நான் நிச்சயம் தாலி கட்டிவிடுவேன். எப்படி என்று கேள். பதினைந்து வரிப் புடவைகளுடன் நான் ஒரு முறை மதராஸ் போய்விட்டு வந்தால் போதும். ஆயிரம் ஜோடிப் புடவைகளும் ஒரு நொடியில் பறந்து விடும்... வா வா சீக்கிரம், பங்களாவுக்குப் போவோம்! இன்றிரவே நான் சென்னைக்குப் பயணமாக வேண்டும்!"

சேகர் மரகதத்தின் காதில் இன்னும் 'ஏதோ' கிசுகிசுத்தான்.

மகிழ்ந்து போனாள் மரகதம்.

இருக்காதா, பின்னே, காதல் கல்யாண மாகும் நாள் நெருங்கி வருகிறதே.

# சிரஞ்சீவிக் கதைகள் ... 6—புரூரவசும், ஊர்வசியும்



தேரோட்டும் கலையிலும், வீரத்திலும் பெயர் பெற்றவன் புரூரவசு. ஒரு நாள் அவன் விண்வெளியில், ரதத்தில் சூருவளி வேகத்தில் பவனி வந்து கொண்டிருந்தான்.



திடீரென்று துயரக் குரல் கேட்டது. ரதத்தை நிறுத்திச் சுற்றிலும் நோக்கினான். தேவ கன்னியர் சிலர் நிற்கக் கண்டான்.



ஊர்வசி, சித்ரலேகா என்ற தோழிகளை கேசி என்ற ராட்சசன் அபகரித்துக் கொண்டு போய் விட்டதாக அவர்கள் அறிவித்தார்கள்.



வீராவேசம் கொண்டு புரூரவசு அவர்களை மீட்கப் புறப்பட்டான்.



தைரியம் அடைந்து, ஊர்வசியின் தோழிகள் அருகிலிருந்த ஒரு குன்றின் மீதேறி நின்று புரூரவசு போன திசையில் கண் பதித்துக் காத்திருந்தனர்.



புரூரவசு வெற்றியுடன் திரும்பினான். அவனது அழகிலும், வீரத்திலும் மனம் பறிகொடுத்த ஊர்வசி அவன் மீது காதல் கொள்கிறாள்.

# உங்கள் குடும்பப் பாதுகாப்பிற்கு ஊறு நேர விடலாமா?

நீங்கள் எடுத்திருக்கும் ஆயுள் இன்சூரன்சுப் பாலிசி காலாவதியானால் என்ன நேரிடுகிறது தெரியுமா? வருங்காலத்தில் உங்கள் குடும்பம் பாதுகாப்பின்றி வாடுவதற்கு நீங்களே காரணமாக இருப்பீர்கள். உங்களுக்கு ஏதேனும் நேரிடின், உங்கள் குடும்பத்தினருக்கென நீங்கள் திட்டமிட்டு எடுத்த ஆயுள் இன்சூரன்சுப் பாலிசியின் மொத்தத் தொகை அவர்களுக்குக் கிடைக்காமலே போகும்.

காலாவதியான ஆயுள் இன்சூரன்சுப் பாலிசியினால் எந்தவிதப் பயனுமில்லை—குறைந்தது இரண்டு ஆண்டுகளுக்காவது பாலிசி அமுலிலிருந்தாலொழிய. அப்போதுகூட உங்களுக்குக் கிடைக்கும் நன்மை மிகக் குறைவு. பாலிசி காலாவதியாவதால், உங்கள் குடும்பத்திற்கு நீங்கள் ஆயுள் இன்சூரன்சுப் பாலிசி மூலம் உறுதி அளித்திருந்த பாதுகாப்பு அனைத்தும் பாழாகிவிடுகிறது.

எனவே, உங்கள் பாலிசி காலாவதியாகி இருந்தால் அதனைப் புதுப்பியுங்கள் இன்றே.

எல். ஐ. சியின் விசேட புதுப்பிக்கும் திட்டம், சில நிபந்தனைகளுக்குட்பட்டு காலாவதியான உங்கள் பாலிசியைப் புதுப்பிக்க உதவும். அதற்கென பாக்கியுள்ள பிரீமியங்களை நீங்கள் செலுத்த வேண்டியதில்லை. உங்கள் ஆயுள் இன்சூரன்சு முகவரை (ஏஜெண்டை) கலந்தாலோசியுங்கள். உங்கள் பாலிசியைப் புதுப்பித்து, உங்கள் குடும்பத்தினர் அவசியம் பெற்றே தீரவேண்டிய பாதுகாப்பிற்கு உதவுவார் அவர்.



## ஆயுள் இன்சூரன்சு போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை

ASP/LIC/Z-29 TM

சேகர் அன்றிரவே சென்னைக்குப் புறப்பட்டான், பதினைந்து வரிப்புடவைகள் அடங்கிய சின்னத் தோல் பெட்டியுடன்.

ரயிலுக்குக் கிளம்பு முன் சேகர் நினைவாக ஒரு வரிப் புடவையை எடுத்து மரகதத்திடம் கொடுத்துவிட்டுத்தான் போனான். ஏனென்றால், அவனுடைய யோசனையின்படி எல்லாம் நடந்து, புடவைகள் எல்லாம் விற்பனையாகி விட்டால், அவனுடைய மரகதத்துக்கு என்று ஒரு வரி டிசைன் புடவை வேண்டாமா?

ஏப்ரல் 3 :

எழும்பூர் ரயில் நிலையத்தில் இறங்கியதும் முதல் வேலையாகப் பிரபல சினிமா டைரக்டரும், தயாரிப்பாளரும் அவனுடைய உயிர் நண்பனுமான (கோ)தண்டத்துக்கு போன் செய்தான்.

டைரக்டர் ஜெமினி ஸ்டுடியோவில் இருப்பதாகவும், 'தேனும் தினைமாவும்' என்ற துரித கால — ஒரே செட் — படப் பிடிப்பில் ஈடுபட்டு ரொம்ப 'பிஸியாக' இருப்பதால், இரவு கூட பங்களாவுக்கு வரவில்லை என்றும் செய்தி கிடைத்தது.

டைரக்டர் தண்டமும், சேகரும் உறையூரில் ஒரே பள்ளியில் படித்தவர்கள். நண்பர்கள்தான் என்றாலும் உறவினர்களைப் போல. சேகர் 'செட்'டில் தன் பதினைந்து புடவை தோல் பெட்டியுடன் நுழையும் போது கதாநாயகியும் மற்றும் தோழிகளும் பங்கு கொள்ளும் 'குரூப் டான்ஸ்' ஒன்றுக்கான ஒத்திகை நடந்து கொண்டிருந்தது; டைரக்டரின் மேற்பார்வையில்தான்.

"....எல்லாம் உன் தயவை நாடித்தான் வந்திருக்கிறேன், தண்டம்!" என்று சொல்லிக் கொண்டே பக்கத்தில் கிடந்த நாற்காலியில் உட்கார்ந்தான் சேகர்.

கோதண்டம் சொன்னார்: "இதோ பார், சேகர், சுற்றி வளைக்காமல் சொல். உனக்காக நான் எதையும் செய்யக் காத்திருக்கிறேன்....!"

"இந்தத் தோல் பெட்டியில் உள்ளதை உன் படத்தில் பயன்படுத்தி நீ எனக்கு உதவினால், ஓர் அரை லட்ச ரூபாய் நஷ்டத்தை லாபமாக மாற்றித் தந்ததாக ஆகும்!"

"இது என்னப்பா 'பண்டோராஸ் பாக்ஸ்' மாதிரி! பெட்டியில் என்னதான் இருக்கு?" என்று சொல்லிக் கொண்டே திறந்து, ஒரு புடவையை எடுத்துப் பிரித்தார் தண்டம். பிரித்தவர், சில விநாடி நேரம் சேகரையே விஷமமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு பெரிய குரலில் சொன்னார்: "வாய்யா, ஜவுளி வியாபாரி! நீ உண்மையிலேயே பெரிய ஆள்தாம்பா... கண்ட கண்டபடி டிசைனைப் போட்டு, புடவைகள் விற்கவில்லை என்றால் என் 'தேனும் தினைமாவும்'தான் கிடைத்ததா? 'கோஷ்டி நடனத்தில் கதாநாயகிக்கும் மற்றத் துணை நடிகைகளுக்கும் இந்தப் புடவைகளைக் கட்டிவிட்டு, அதுவும் 'தேனும் தினைமாவும்' புடவை என்று நீ விளம்பரமும், பெயரும் பெற்று..... ஆ ஹா... நீ லாபம் பெறுவதா?" தண்டம் பலமாகச் சிரித்தார், விளையாட்டாக.

"ஆமாம், தண்டம், அதே யோசனைதான். அதோடு இந்தப் புடவைகளுக்குள் என் கல்யாண விஷயமும் புகுந்து கொண்டிருக்கிறது...... நேற்று சாயங்காலம் — காவேரிக் கரையில் காற்று வாங்கிக் கொண்டிருக்கும் போதுதான் உன் 'தேனும் தினை



மாவும்' முழுப்பக்க விளம்பரத்தைத் தற்செயலாகப் பார்த்தேன். உடனே ஒரு யோசனை தோன்றியது! ஓடோடி வந்தேன்!"

"ஆல் ரைட்! இவ்வளவுதானே. செய்து விட்டால் போகிறது. இதோ அடுத்த 'டேக்கே' கோஷ்டி நடனம்தான். ஷூட்டிங் இருந்து பார்த்து விட்டுப் போய் விடு..... உதவி டைரக்டர் சேதுராமன்.... இங்கே வாங்க....இந்தப் பதினான்கு புடவைகளையும் பதின்மூன்று தோழி நடிகைகளுக்கும், இந்தப் பதினான்காவதைக் கதாநாயகிக்கும் உடுத்துங்க...காமிராவைச் சரி பாருங்க. லைட்ஸ்... அப்போ, சேகர் உனக்கு சந்தோஷம் தானே? அரை லட்சம் உனக்குக் கிடைத்த மாதிரித்தானே ?"

வரிப் புடவை கோஷ்டி நடனப் படப்பிடிப்பு முடிந்த பிறகே ஊருக்கு ரயிலேறினான் சேகர் உவகையுடன்.

ஏப்ரல் 30:

அன்று 'தேனும் தினைமாவும்' ரிலீஸ்... தியேட்டரில் ஏகக் கூட்டம். சேகர், அருணாசலம், மரகதம் மூவரும் முதல் காட்சியில், முதல் வகுப்பில் ஆர்வத்தோடு உட்கார்ந்திருந்தனர், வரிப் புடவை கோஷ்டி நடனத்தைப் பார்ப்பதற்கு, மகிழ்வதற்கு.

படம் ஆரம்பமாகி ஒரு மணி நேரமாகியும் வரிப் புடவை நாட்டியமே வரவில்லை.

அருணாசலம் பொறுமை இழந்து, "என்ன மருமகப்பிள்ளை, நம்ம புடவையே காணோமே ?" என்று மெல்ல உறுமினார்.

"முதல் 'ரீலில்' என்றுதான் தண்டம் சொன்னான். ஒரு வேளை மாற்றி 'எடிட்' செய்து விட்டார்களோ, என்னவோ?" என்று இழுத்தபடி சொன்னான் சேகர்.

'இடைவேளை, வணக்கம்' எல்லாம் போட்டு விட்டார்கள் வெள்ளித் திரையில்.

டான்ஸ் உடான்ஸ்தான் !

சேகருக்குக் கோபம் கொப்புளித்தது : தண்டம் படம் பிடித்ததை என் இரண்டு கண்ணாலேயே பார்த்தேனே! வெறும் காமிராவைக் காட்டி ஏமாற்றி விட்டானா?"

"அப்போ என்ன மருமகப்பிள்ளை, அரை லட்சம் 'அவுட்'தானா? அதோடு மரகதம் விஷயம் வேறே......" பொருள் பொதியச் சிரித்தார் அருணாசலம்.

"அந்தத் தண்டம் பயலை என்ன செய்கிறேன், பார் !" என்று குதித்தான் சேகர். இனி யாரை என்ன செய்து என்ன பயன் ? 'தேனும் தினைமா'வில் வரிப் புடவை நடனம் இல்லை என்றாகிவிட்டதே!

பங்களாவுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக அருணாசலம் பீடிகையோடு சொன்னார். இன்னும் 'மருமகப்பிள்ளை'யைக் காக்க வைப்பதால் அர்த்தம் இல்லையே! "டைரக்டர் தண்டம் நேற்று காலையில் உங்களுக்கு 'ட்ரங்க்' போட்டார். நீங்க டெல்லிக்குப் போயிருந்தீங்க. ஆகையினால் நான் பேசினேன். நம்முடைய வரிப் புடவை நடனம் கொஞ்சம் ஆபாசமாக இருந்தது என்று சென்ஸாரில் கத்திரிக்கோல் போட்டு விட்டார்களாம்! இந்த விஷயத்தை நான் மரகதத்திடம்கூடச் சொல்லவில்லை. எப்படியும் அடுத்த படத்தில்....."

"நிலைய வை!" என்று எரிந்து விழுந்தான் சேகர்.

"அத்தான்! ஏன் இப்படி ஆத்திரப்படுகிறீர்கள்? கொஞ்சம் பொறுங்கள். எல்லாம் நல்லபடியாகத்தான் முடியும். அந்த விஷயமெல்லாம் இருக்கட்டும்...... அப்பா, இதோ பாருங்கள், எல்லாப் புடவைகளையும் ஒரே 'காண்ட்ராக்டில்' நான் விற்றுக் கொடுத்தால் எனக்கு என்ன தருவீர்கள்?" என்று குறும்புச் சிரிப்புடன் இடைவெட்டினாள் மரகதம்.

"என்ன நீயா?" என்று வாயைப் பிளந்தனர் இருவரும் ஏககாலத்தில்.

"ஆமாம், நானேதான்!" என்ற மரகதம் தன் அழகுப் பையிலிருந்து ஒரு 'டைப்' செய்த கடிதத்தை எடுத்துத் தந்தையிடம் நீட்டினாள். அது அமெரிக்காவிலிருந்து வந்திருந்த அயல்நாட்டுக் கடிதம்.

நியூயார்க் நகரில் மெத்தை, தலையணை, திரைச்சீலை விற்பனை செய்யும் பெரிய நிறுவனம் ஒன்று எழுதியிருந்தது: "மிஸ். மரகதத்துக்கு. தாங்கள் மாதிரிக்காக அனுப்பி வைத்த கைத்தறித் திரைச்சீலை கிடைத்தது. அந்த மாதிரி ரகத்தை அமெரிக்கர்கள் பெரிதும் விரும்புவார்கள் என்று நம்புகிறோம். ஆயிரம் ஜோடிகளையும் நாங்களே எடுத்துக் கொள்கிறோம். விமான மூலமே சரக்கை அனுப்பி வையுங்கள். அந்நியச் செலாவணிக்கு எழுதியிருக்கிறோம். வணக்கம்."

திக்குமுக்காடிய அருணாசலம், "இதெல்லாம் என்னம்மா கூத்து?" என்று வினவினார்.

"அத்தான் மதராஸுக்குப் புறப்படும் முன்னே எனக்கென்று ஒரு புடவையைக் கொடுத்து விட்டுத்தான் போனார். ஒரு ஆங்கிலப் பத்திரிகையில் இந்தத் திரைச்சீலைக் கம்பெனியின் நியூயார்க் முகவரியைப் பார்த்தேன். இரண்டு முந்தானையையும் கிழித்து விட்டு, நமது சேலையைத் திரைச் சீலையாக்கி மாதிரிக்கு அனுப்பி வைத்தேன்! கடிதம் என் பேருக்கு எப்படி வந்தது என்கிறீர்களா? நம்முடைய ஜவுளிக்கடை 'லெட்டர் பேடில்' 'மிஸ் மரகதம், கான்வாவின் ஏஜண்ட்' என்று சேர்த்து டைப் செய்தேன். அவ்வளவுதான்; அதோடு தபால்காரரிடமும் சொல்லி வைத்தேன். எப்படி என் வியாபார தந்திரம்!"

"போக்கிரிப் பெண்ணம்மா, நீ! அது சரி, உனக்கு என்ன வேண்டுமோ கேள், தருகிறேன்!" — அரை லட்ச நஷ்டம் தப்பிய மகிழ்ச்சியில் சொன்னார் அருணாசலம்.

"நீங்கள் எங்களுக்கு ஒன்றும் தர வேண்டாம்!" என்று தந்தைக்குப் 'பழிப்பு' காட்டிவிட்டு, "வாங்க, அத்தான், நாம் போகலாம்" என்றவாறு சேகரை நெருங்கி நடந்தாள் மரகதம்.

'அத்தை மகனே ரத்தினமே !' என்று பாடிக் கொண்டே சேகர் மரகதத்துடன் ராஜ நடை போட்டான்.

'பாவம், மருமகப்பிள்ளை, நான் விளையாட்டுக்காகச் சொன்ன கப்பான நிபந்தனையை உண்மையென்று நம்பி ரொம்பவும் அல்லாடிப் போய் விட்டார் போலிருக்கிறது' என்று அனுதாபத்தோடு நினைத்த அருணாசலம்,— சேகர் — மரகதம் ஜோடிப் பொருத்தத்தைப் பார்த்து மகிழ்ந்து, மன நிறைவோடு தமக்குள் சிரித்துக் கொண்டார்.

"ஸ்டேட் பாங்க் பிரயாணிச் செக்குகளைப் பற்றி யாராவது அவரிடம் தெரிவித்தால் தேவலை!"

ஆயுதமேந்திய காவலாளர்களை அமர்த்திக் கட்டுப்படியாகுமா? தேவைப்படும் எல்லா ரொக்கத்தையும் நீங்கள் ஸ்டேட் பாங்க் பிரயாணிச் செக்குகளாக எடுத்துச் செல்லலாமே. பாதுகாப்புக்கு முழுப் பாதுகாப்பு, வசதிக்கு வசதி.

ரூ. 50, ரூ. 100 ஆகிய இனங்களிலே பிரயாணி ரூபாய்ச் செக்குகளை வெளியிடுகின்றது ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா. 1800க்கு மேற்பட்ட அலுவலக, துணையகங்கள் ஸ்டேட் பாங்கிற்கு உள்ளன; எதில் வேண்டுமானாலும் நீங்கள் அந்தச் செக்குகளை ரொக்கப் பணமாக மாற்றிக்கொள்ளலாம். தவிர, இந்தியாவிலும் சரி, பிற நாடுகளிலும் சரி, விமான நிலையங்களிலும், ஓட்டல்களிலும், கடைகளிலும் உள்ள ரொக்கமாற்று ஏஜெண்டுகளிடம் மாற்றிக்கொள்ளமுடியும். எங்கெங்கும், எந்த சமயத்திலும்—பாங்கு மூடியிருக்கும் நேரத்தில்கூட — உற்றதுணையாக உதவக்கூடிய செக்குகள் அவை.

நடைமுறைத் தொல்லைகள் இல்லை. ஆபத்தே இராது. செக்கு தொலைந்து போனால் வேறொன்றைப் பெறுவதும் எளிதே.

ஆபத்தை எதிர்காதீர்கள். ஸ்டேட் பாங்க் பிரயாணிச் செக்குகளை எற்றுக்கொள்ளுங்கள்.

## சேவை புரிந்திடவே ஸ்டேட் பாங்க்

LPE-Abart S 41 TMA

# வெட்ட மேஜை



## நா காப்பது நாட்டுக்கு நல்லது

கடந்த மாதம் கோவையில் நடைபெற்ற காங்கிரஸ் கட்சி மகாநாட்டில் முதல் அமைச்சர் திரு பக்தவத்சலம் மொழிப் பிரச்னையில் அரசோடு ஒத்துப் போகாத ஆசிரியர்களையும் அரசாங்க அலுவலர்களையும் கடுமையாக எச்சரித்துள்ளார். செக்கிழுத்த சிதம்பரனார் வளர்த்த கட்சியினைச் சார்ந்தவர் என்பதற்குத் தக்கவாறு பேசுகிறார் அவர்?

''மனிதன் உரிமைகளைப் பிறர் பறித்துக் கொண்டு விடாதபடி காப்பதே அரசியலின் குறிக்கோள்'' என்கிறார் தான் லாக். ''உரிமைகளே அரசியலமைப்பின் அடிப்படை'' என்றார் லாஸ்கி.

தமிழருடைய உரிமையைக் காக்க இயலாத முதல்வர் பறிக்கவல்லவா முயல்கிறார்.

ஆசிரியராக இருந்தாலும் அரசு அலுவலராக இருந்தாலும் அவன் இந்நாட்டுப் பிரஜை என்பதைப் பக்தவத்சலம் என்ன, வேறு யாருமே மறுக்க முடியாது. ஒரு நாட்டின் நீதி நிர்வாகம் இரண்டிலும் பங்கு கொள்பவன்தான் பிரஜை எனப்படுவான். அவன் அப்படிப் பங்குகொள்வதைத் தடுக்காத நாடுதான் ஜனநாயக நாடு.

''முக்கியமான பதவி வகிப்பவர் தமது ஆயுள் காலம் வரையிலும் அந்தப் பதவியில் நீடித்திருக்க வேண்டும் என்ற கொள்கை நல்லதல்ல. ஏனெனில் உடலைப் போலவே மனமும் வயதடைகிறது'' என்றார் அரிஸ்டாட்டில்.

முதலமைச்சர் பேசுவதைப் பார்த்தால் அரிஸ்டாட்டில் இதை அவருக்கென்றே சொல்லியது போலிருக்கிறது?

திருப்புகலூர்
8–7–65

முல்லைமுதி





## மொழிபெயர்ப்புக் குழப்பம்

ஹிந்தி பாஷையில் வார்த்தைகள் மிகக் குறைவு. நாளைய தினம், நேற்றைய தினம் இவ்விரண்டுக்கும் 'கல்' என்கிறார்கள். ஆகவே, பி. ஏ., எம். ஏ. படித்தவர்கள்கூடச் சிலர் ''ஐ வெண்ட்டு லக்னோ டுமாரோ'' என்று சர்வ சாதாரணமாகச் சொல்கிறார்கள்.

அந்நிய மொழிகளிலிருந்து சரளமானதும், மிகவும் பிரயோகப்பட்டு வருவதுமான வார்த்தைகளை ஏற்றுப் பிரயோகிக்க மறுக்கிறார்கள். இது சம்பந்தமாகக் காசி ஹிந்து சர்வகலாசாலையிலிருந்து வரும் ''ப்ரக்ஞா'' என்ற பத்திரிகையில் கணிதப் பேராசிரியர் டாக்டர் பிரிஜ்மோஹன் அவர்கள் எழுதியிருப்பது குசிகரமானது.

ஹரிக்கேன் விளக்குக்கு ''லால்டேன்'' என்ற பதம் எல்லோரும் பிரயோகிக்கின்றனர். ஆனால் அதை ''ஹஸ்தகாச் தீபிகா'' என்று ஹிந்தியில் மொழிபெயர்க்கின்றனர். எல்லாவற்றையும் மிஞ்ச வைப்பது ''ரயில்வே ஸிக்னல்'' என்பதன் ஹிந்தி மொழிபெயர்ப்பு. அதாவது: ''அக்னி–ரத்–பத்–கமந சுமனே–மார்க் ப்ரதர்சக்–லௌஹ–தாம்ர பீடிகா''.

மிர்ஜாபுரி ஹிந்தி, கடிபோலி ஹிந்தி, பனாரஸி ஹிந்தி என்ற பல திணுசாக ஹிந்தி பாஷை இருந்து வருகிறது. வெறியின்றி, சரளமான பாஷையை வளர்த்து, அன்போடு பரவச் செய்தால் ஹிந்தி நாளடைவில் பரவும்.

கான்பூர்
12–7–65

ஸ்ரீமதி கல்யாணி பி. ஐயர்

## பஞ்சாயத்து அதிகாரக் குறைப்பு

பஞ்சாயத்துத் தலைவர்கள் ஜனநாயகத் தன்னடக்கத்தையும் அதிகாரத்தை விருப்பு வெறுப்பின்றி உபயோகிப்பதற்கான திறனையும் பெறுவதற்கான பஞ்சாயத்துக் கல்வியும், பயனுள்ள பயிற்சியும், தக்க வாய்ப்புக்களும் அளிப்பதுதான் முறையேயன்றி, இருக்கும் அதிகாரத்தையும் பறிப்பதல்ல. விரலில் புண் வந்தால் புண்ணை ஆற்றுவதுதான் விவேகமேயன்றி விரலையே வெட்டுவதல்ல!

மேலும் முன்னமேயே குறைந்து கொண்டு வரும் பஞ்சாயத்துத் தலைவர்களின் ஆர்வமும் முனைப்புணர்வும், உற்சாகமும் இது போன்ற உத்தரவுகளால் பட்டுப் போய் விடும் என்பது உறுதி. பஞ்சாயத்துத் தலைவர்களின் நேர்மையைச் சந்தேகிக்கும் இவ்வுத்தரவு அவர்களது கௌரவத்தையும் சமூகச் செல்வாக்கையும் பெரிதும் பாதிக்கக் கூடியதாகும். எனவே ஜனநாயக முறையில் நம்பிக்கை கொண்டுள்ள நாம் பஞ்சாயத்துத் தலைவர்களின் குறைகளையும் குற்றங்களையும் நமது குறைகளாகவே கருதி அவற்றை நீக்க முயற்சி செய்ய வேண்டும். பஞ்சாயத்துத் தலைவர்கள் மட்டும் 'அளவு மீறிய அதிகாரத்தால் அப்பாவி ஆசிரியர்களைப் பலியிடுகிறார்கள் என்றோ, 'ராம ராஜ்யம் நாமம் போடும் ராஜ்யமாக மாறுகிறது' என்றோ கூறுவது நிலைமைச் சீர்தூக்கிப் பாராது ஆத்திரத்தினால் அவசரப்பட்டுக் கூறுவதாகும்.

கோவை மாவட்டம்
16 – 7 – 65

க. வெங்கடேசன்

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

## உங்கள் அழகுக்கு புதுப் பொலிவை அளியுங்கள்!

## பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் முகம் சோபையுடன் வழவழப்பாகத் தோற்றமளிக்கும்

உங்கள் முகத்திற்கு வசீகரிக்கும் பொலிவை அளியுங்கள். நல்ல அழகியாகத் தோற்றமளிக்க விரும்பும் எந்தப் பெண்மணியும் முதலில் செய்ய வேண்டியது அதுதான். எண்ணெய்ப் பசையில்லாத செளம்யமான பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்தால் உங்கள் சருமத்திற்கு மிருதுத் தன்மையும் பாதுகாப்பும் கிடைக்கும். அது சருமத்திலுள்ள பெரிய துவாரங்களை மூடி முகத்தில் 'எண்ணெய் வடியும் தோற்றம்' உண்டாகாமல் தடுக்கிறது... முகத்தில் கருப்புப் புள்ளிகள் உண்டாவதிலிருந்து பாதுகாப்பளிக்கிறது. பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமைத் தனியாக உபயோகித்தால் உங்கள் வதனம் இயற்கைப் பொலிவுடன் விளங்கும். இந்தக் க்ரீமைத் தடவி அதன்மீது பவுடர் போட்டுக்கொண்டால் பவுடர் ஒரேசீராகப் படிந்து மணிக்கணக்கில் கலையாமல் இருக்கும்.




**பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகித்து உங்கள் அழகுக்கு மெருகூட்டுங்கள்**

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. யில் இணைக்கப்பட்டது)

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon